# சங்கப் பாடல்களில் மொழி ஆளுமை:
# சொல் வகைப்பாடும் வருகையும்

சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டத் தேர்விற்காகச்
சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்த்துறை வாயிலாக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ஏ.மேரி நேசபிரியம்**

**No.Ph.D/Prov.Regn./68/FT/12/2013/2227**

நெறியாளர்

**முனைவர் ப. டேவிட் பிரபாகர்**

எம்.ஏ., (தமிழ்), எம்.ஏ., (மொழியியல்), எம்.ஃ.பில்., பிஎச்.டி.
இணைப் பேராசிரியர் - தமிழ்






தமிழ்த்துறை

சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி)

சென்னை - 600 059


**ஏப்ரல் 2019**

**முனைவர் ப. டேவிட் பிரபாகர்**
**எம்.ஏ., (தமிழ்), எம்.ஏ., (மொழியியல்), எம்.ஃ.பில்., பிஎச்.டி.**
இணைப் பேராசிரியர் - தமிழ்
சென்னைக் கிறித்தவக் கல்லூரி தன்னாட்சி
கிழக்குத் தாம்பரம், சென்னை-600 059

# நெறியாளர் சான்றிதழ்

**“சங்கப் பாடல்களில் மொழி ஆளுமை: சொல் வகைப்பாடும் வருகையும்”** எனும் தலைப்பில் **ஏ.மேரி நேசபிரியம்** செய்துள்ள இவ்வாய்வு, சென்னைப் பல்கலைக்கழக முனைவர்பட்டத் தேர்விற்காகச் சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இவ்வாய்வு வேறு எந்தப் பட்டத்திற்கும் இதுவரை அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம்: தாம்பரம் **(ப. டேவிட் பிரபாகர்)**
நாள்: 24.04.2019 மேற்பார்வையாளர்

**துறைத்தலைவர்**

**ஏ. மேரி நேசபிரியம்,**
முனைவர் பட்ட ஆய்வாளர் முழுநேரம்
தமிழ்த்துறை,
சென்னைக் கிறித்தவக் கல்லூரி தன்னாட்சி
தாம்பரம், சென்னை-600 059.

# ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்கப் பாடல்களில் மொழி ஆளுமை: சொல் வகைப்பாடும் வருகையும்”** எனும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டத் தேர்விற்காகச் சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்த்துறையில் செய்யப்பெற்ற இவ்வாய்வு என் முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் எந்தப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு இதுவரை அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: தாம்பரம் **(ஏ. மேரி நேசபிரியம்)**

நாள்: 24.04.2019 ஆய்வாளர்

# நன்றியுரை

*“திட்டம் இடுவதும் நானே*
*இட்டதைச் செய்வதும் நானே*
*உணர்வும் நானே*
*வலிமையும் எனதே”*

என்ற வாக்கிற்கேற்ப எல்லாம் வல்ல இறைவனை நன்றியுடன் வணங்குகிறேன்.

ஆய்வேட்டின் தலைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்து, என்னைப் பன்முக நோக்கில் ஆற்றுப்படுத்திய என் மதிப்பிற்குரிய ஆசிரியர் **முனைவர் ப.டேவிட்பிரபாகர்** அவர்களுக்கு எனது பணிவு கலந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

கல்லூரி முதல்வர் **முதுமுனைவர் இர.வி.அலெக்சாண்டர் ஜேசுதாசன்** அவர்களுக்கும், ஆய்வு செய்வதற்கு அருந்துணைபுரிந்த முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்களான **கு.அரசேந்திரன், யோ.ஞான சந்திரஜாண்சன், சா.பாலுசாமி** அவர்களுக்கும் இந்நாள் தமிழ்த்துறைத் தலைவரான **எ.பாலின் எடிசன்** அவர்களுக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

முப்பொழுதும் எனக்கு உற்ற துணையாக இருக்கும் **திரு.ர.பொன்னழகன் MTC** அவர்களுக்கு எனது அன்பு நிறைந்த, இதயம் கலந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும், எல்லா நேரங்களிலும் எனக்கு நல்லாதரவை நல்கிய **முனைவர் த.அருள்பத்மராசன்** அவர்களுக்கும் மற்றும் **முதுமுனைவர் வா.வினோத்** அவர்களுக்கும், எனது உளங்கனிந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

**“அன்னையும் பிதாவும் முன்னெறி தெய்வம்”** என்ற சான்றோர் வாக்கிற்கிணங்க என் தெய்வங்களாக விளங்கும் எனது பெற்றோர் **திரு.ஞா.ஏசுநேசன்** அவர்களுக்கும், **திருமதி.ஏ.மேரி மனோரஞ்சிதம்** அவர்களுக்கும், எனது தாத்தா **திரு.சி.தெய்வசிகாமணி,** எனது பாட்டி **திருமதி.தெ.சாராள்** அவர்களுக்கும், எனது உடன் பிறப்புக்களான **ஏ.கெர்லின் கெத்சியாள், எம்.ஏ.,எம்.எட்.,** மற்றும் **ஏ.சந்தோஷ் தேவபிரியன், எம்.டிஎச்.,** அவர்களுக்கும், எனது அன்பிற்கும், பாசத்திற்கும், மதிப்பிற்கும் உரிய எனது அன்பு அண்ணன் **திரு.இரா.அன்பரசன்** அவர்களுக்கும், எனது ஆருயிர் மழலைச் செல்வங்களான **ஆ.ஜெபா, ரூ.ரூபினா, ஆ.ஜான்பால் சாமுவேல், ரூ.சில்வான்** அவர்களுக்கும் எனது இதயம் நிறைந்த நன்றியினை சமர்ப்பிக்கின்றேன்.

எனது தோழிகளான **ச.உமா, இர.ஹேமலதா** மற்றும் **பா.க.நித்ய கல்யாணி** அவர்களுக்கும், மேலும் இவ்வாய்வேட்டைச் சிறந்த முறையில் வடிவமைத்து தட்டச்சு செய்து கொடுத்த என் அன்பு சகோதரர் **ரா.பிலவேந்திரன் ராஜ்** அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(ஏ.மேரி நேசபிரியம்)**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ.தொ. | - | அடுக்குத் தொடர் |
| இ.வி. | - | இலக்கண விளக்கம் |
| இ.சொ. | - | இடைச் சொல் |
| உ.சொ. | - | உரிச் சொல் |
| இ.இ.சொ. | - | இணைப்பிடைச் சொற்கள் |
| எ.ம.பெ.எச். | - | எதிர்மறைப் பெயரெச்சம் |
| எ.ம.வி.எச். | - | எதிர்மறை வினையெச்சம் |
| எ.ம.வி.மு. | - | எதிர்மறை வினைமுற்று |
| ஒ.குறி. | - | ஒலிக்குறிப்புச் சொற்கள் |
| கு.வி.மு. | - | குறிப்பு வினைமுற்று |
| கு.எ. | - | குறையெச்சம் |
| சுட்டு. | - | சுட்டுப் பெயர் |
| சொ.உரு. | - | சொல்லுருபு |
| தொல்:சொல். | - | தொல்காப்பியச் சொல்லதிகாரம் |
| தொ.பெ. | - | தொழிற்பெயர் |
| தொ.வி. | - | தொன்னூல் விளக்கம் |
| நன். | - | நன்னூல் |
| நி.எ. | - | நிபந்தனையெச்சம் |
| நேமி.சொல். | - | நேமிநாதம் சொல்லதிகாரம் |
| ப.பெ. | - | பதிலீட்டுப் பெயர் |
| பெ. | - | பெயர்ச்சொல் |
| பெ.அ. | - | பெயரடை |
| பெ.எச். | - | பெயரெச்சம் |
| மு.வி. | - | முத்துவீரியம் |
| வி.தொ. | - | வினைத்தொகை |
| வி.மு. | - | வினைமுற்று |
| வியங். | - | வியங்கோள் |
| வி.அ. | - | வினையடை |
| வி.அ.பெ. | - | வினையாலணையும் பெயர் |
| விளி. | - | விளிப் பெயர் |
| வி.எச். | - | வினையெச்சம் |
| வி.பெ. | - | வினாப் பெயர் |
| வி.ப.பெ. | - | வினாப் பதிலீட்டுப் பெயர் |

# பொருளடக்கம்

## ஆய்வு முன்னுரை

'பாட்டும் தொகையும்' என்று அறியப்படும் சங்க இலக்கிய நூல்கள் காலப் பழமை வாய்ந்தவை. இவை உள்ளடக்கத்தாலும், பொருள் உணர்த்தும் முறைகளாலும் தனித்தன்மை வாய்ந்தவையாகும். தமக்கென தனித்த இலக்கிய மரபைக் கொண்டுள்ள இவ்விலக்கியங்கள் 'திணைக்கோட்பாடு' எனும் இலக்கிய பார்வையை உலக இலக்கியத்திற்கு வழங்கி உள்ளன. தமிழ்மொழி செவ்வியல் மொழியாக அறிவிக்கப்பட்ட பின்னர், சங்க இலக்கிய ஆய்வுகள் விரிவாகவும் நுட்பமாகவும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

சங்க இலக்கியத்தைத் 'திணை இலக்கியம்' எனவும் அழைக்கின்றனர். 'திணை' என்றால் ஒழுக்கம் எனவும் பொருள்படும். இவ்விலக்கியங்கள் நம் மொழியில் தோன்றிய முதன்மையான இலக்கியங்கள் ஆகும். இவை சங்ககால மக்களின் சீரிய சிந்தனைகளோடு கூடிய செம்மையான வாழ்வைச் சித்திரித்துக் காட்டுகின்றன.

இவ்விலக்கியங்கள் பண்டைய தமிழ் மொழிக் கூறுகளையும் மொழி அமைப்புகளையும் பேணிப்பாதுகாக்கும் கருவூலமாக விளங்குகின்றன. பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் வரலாறு, வாழ்வியல், தத்துவம், கலைகள், வினைத்திறம், உள்ளச் செம்மை, அறிவு வீறு போன்றவைற்றையும் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

சங்கப் பாடல்கள் உலக இலக்கியங்களில் காணப்படும் பல்வேறு இலக்கியப் பண்புகளையும் இலக்கிய உத்திகளையும் மிகச் சிறப்பாக உள்ளடக்கியுள்ளது. செவ்விலக்கியங்களில் காணப்படும் உலகப் பொதுமை, பொதுச்சார்பு நிலை, கற்பனை வளம், எளிமை, கவிதை அழகியல் ஆகியன சங்க இலக்கியங்களில் பயின்று வருவது குறிப்பிடத்தக்கதாகும். இவ்விலக்கியங்கள் அகம், புறமாய் சங்ககால மக்களின் வாழ்க்கையை நமக்குப் படம் பிடித்துக்காட்டுகின்றன. சங்க இலக்கியங்களைப் பன்முக ஆய்வுகளுக்கு உட்படுத்துவது அவ்விலக்கியங்கள் குறித்த விரிவான புரிதலுக்கு வழிவகுக்கும்.

## ஆய்வுத் தலைப்பு

சங்கப் பாடல்களில் மொழி ஆளுமை: சொல் வகைப்பாடும் வருகையும்.

## ஆய்வு நோக்கம்

சங்ககாலத் தமிழைக் கால அடிப்படையில் முன்பழந்தமிழ், பின்பழந்தமிழ் என்று பகுக்கலாம். முன் பழந்தமிழுக்குச் சான்றாக விளங்கும் பதிற்றுப்பத்து, புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகிய சங்கப் பனுவல்களின் சொற்களை அடிப்படையாகக் கொண்டு, அவற்றில் இடம்பெறும் மொழிநடைப் பண்புகளை நூல், திணை, துறை, கூற்று, புலவர் அடிப்படையில் ஆய்ந்து வெளிப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கமாக அமைகிறது. இதன் வழி பிற சங்க இலக்கியங்களின் மொழிநடைப் பண்புகளை ஆராய்வோர்க்குத் தேவையான அடிப்படைகளை நல்குவதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

சங்கப் பாடல்கள் குறிப்பிட்ட காலப்பகுதியில் பல்வேறு புலவர்களால், பல்வேறு வாழ்க்கைப் பின்புலங்களைக் கொண்டு இயற்றப்பட்டுள்ளன. எனினும் இப்பாடல்களில் ஒரு பொதுவான மொழிநடைப் பண்பு காணப்படுகிறது. மொழி நடைப் பண்பு வேறுபடுமிடங்கள் தனிப்பட்ட புலவர்களின் அல்லது நூலின் தனிப்பட்ட மொழி ஆளுமையாக அமைகின்றன.

## ஆய்வு முன்னிகழ்வுகள்

தமிழ் இணையக் கல்விக் கழகத்தின் (Tamil Virtual Academy) இணையத்தளத்தில் இலக்கணக் குறிப்போடு கூடிய சங்க இலக்கிய நூற்களின் விரித்தரவுகள் வெளியிடப்பட்டுள்ளன. இது முழுமையானதன்று. பேராசிரியர் V.ரேணுகா தேவி அவர்கள் 35 வகையான சொல்வகைகளைத் தம் Tagsets for Tamil எனும் கட்டுரையில் வெளிப்படுத்தியுள்ளார். முனைவர் வி.தனலட்சுமி, எம்.ஆனந்குமார், சி.முருகேசன் ஆகியோர் 23 இலக்கண சொல்வகைகளைக் கொண்டு குறுந்தொகை பற்றிய ஆய்வு நிகழ்த்தியுள்ளனர். (Dependency for Tamil

classical literature – Kurunthokai), முனைவர் அ.காமாட்சி, முனைவர் செ.கல்பனா ஆகியோர் ஐங்குறுநூற்றில் உருபனியற் சார்ந்த இலக்கண கூறுகளை ஆய்வு செய்துள்ளனர்.

A GRAMMAR OF OLD TAMIL WITH SPECIAL REFERENCE TO PATIRUPATTU எனும் நூல் வழி பதிற்றுப்பத்து பற்றிய இலக்கண ஆய்வினை (ச.அகத்தியலிங்கம் 1961) நிகழ்த்தியுள்ளார்.

கலித்தொகை (தே. ஆண்டியப்பன் 1970), நற்றிணை (காமாட்சிநாதன் 1967), பத்துப்பாட்டு (இராம. சுந்தரம் 1967), பதினெண்கீழ்க்கணக்கு (ஆதித்தன்), சிலப்பதிகாரம் (ச.வே. சுப்பிரமணியன் 1965), தாயுமானவர் பாடல்கள் (சி.சுப்பிரமணிய பிள்ளை), மணிமேகலை (அஞ்சலி அன்னபாய்), சீவக சிந்தாமணி (சுப. திண்ணப்பன்), திருவாசகம் (சேதுபாண்டியன்), மனோண்மணியம் (ஆபத்து காத்த பிள்ளை) போன்ற இலக்கிய மொழிநிலைகள் குறித்த முனைவர் பட்ட ஆய்வுகள் நூல்களின் மொழிநடை மற்றும் புலவர்களின் தனிப்பட்ட மொழி ஆளுமையை விளக்குவதாக அமைகின்றன. சங்கத்தமிழின் பொதுவான இயல்புகளை வெளிப்படுத்தும் வகையில் ச.அகத்தியலிங்கம் மற்றும் செ.வை. சண்முகம் ஆகியோர் ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர்.

Word Index for cankam Literature தாமஸ் மால்டன் மற்றும் தாமஸ் லேமன் ஆகியோரது சொற்றொகையும் ந. சஞ்சீவியின் இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகளும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் சங்க இலக்கியச் சொல்லடைவு பெ.மாதையன் ஆகியோரும் சங்க இலக்கியங்கள் குறித்த ஆய்வுகளை வழங்கியுள்ளனர். செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் உ.வே.சா. செம்மொழித் தமிழ் தரவகம் மற்றும் தமிழ் இணையக் கல்விக்கழகம் தமிழ் இலக்கியங்களுக்கான இலக்கணக் குறிப்புகளோடு கூடிய விரிதரவு ஆகியவை ஆய்வுக்குக் குறிப்பிடத்தக்க பங்களிப்பை ஆற்றியுள்ளன.

**ஆய்வுத் தரவுகள்**

பதிற்றுப்பத்து, புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு என்ற நான்கு சங்கப் பனுவல்களும் இவ்வாய்வின் முதன்மைத் தரவுகளாக அமைந்துள்ளன. (மர்ரே பதிப்பு)

மேற்குறிப்பிட்ட சங்கப் பனுவல்களின் உரைநூல்களும், முன்னர் இவ்வாய்வு பரப்பில் நிகழ்த்தப்பெற்றுள்ள சங்க இலக்கிய ஆய்வுகளும் துணைமை ஆதாரமாக அமைந்துள்ளன.

**ஆய்வின் வரையறை**

பதிற்றுப்பத்து, புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகிய பனுவல்களில் இடம்பெறும் சொல் வகை, அவற்றின் வருகை, பகிர்வு ஆகியவற்றை நூல், திணை, துறை, கூற்று, புலவர் வாரியாக ஆராய்ந்தும், ஒப்பீடு செய்தும் வெளிப்படுத்துவது இவ்வாய்வின் எல்லைகளாகும். சொல் நிலையை மட்டும் கொண்டு இவ்வாய்வு அமைகிறது. ஒலி மற்றும் தொடரியல் நிலைகளில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படவில்லை.

**ஆய்வு அணுகுமுறை**

ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட சங்கப் பனுவல்களின் சொல் வகைகளின் வருகை, சொற்கூறு அவற்றின் நிகழ்வெண்ணிக்கை ஆகியவற்றை ஆராய்வதற்குப் புள்ளியியல் அணுகுமுறையும் சொல்வகைகளின் வருகையை விவரிக்கும் விளக்கமுறை அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக பின்வரும் ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது. இதனைத் தொடர்ந்து துணைநூற்பட்டியல் அமைந்துள்ளது.

**இயல் 1 – சொற்களின் வகைப்பாடும் காரணிகளும்**

ஆய்வுக்கு உட்படுத்தப்படும் சொல் வகைகள், அவற்றை ஆராய்வதற்கு அடிப்படையாக அமையும் திணை, துறை, கூற்று, புலவர், முதலிய காரணிகள் பற்றிய விளக்கங்கள் இவ்வியலில் இடம்பெறுகின்றன. மேலும் ஒரு பொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றவற்றைக் குறித்த விளக்கங்களும் இவ்வியலில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

## இயல் 2 - பதிற்றுப்பத்து: சொற்களின் வருகையும் மொழி ஆளுமையும்

பதிற்றுப்பத்தில் ஆளப்பட்டுள்ள சொல் வகைகள் நூல், திணை, துறை மற்றும் புலவர் அடிப்படையில் ஆராயப்பட்டுள்ளன. சொல் வகைகளின் நிகழ்வெண்ணிக்கை அட்டவணைகளாகவும், நிகழ்வெண்ணிக்கையின் விகிதாச்சாரம் வரைபடங்களாகவும் கொடுக்கப்பட்டுள்ளன. மேற்குறிப்பிட்ட வகைப்பாட்டிற்குள் அடக்க இயலாத ஒரு பொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றவற்றின் வருகையும் இவ்வியலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

## இயல் 3 – புறநானூறு: சொற்களின் வருகையும் மொழி ஆளுமையும்

புறநானூற்றுப் பாடல்களில் பயின்று வந்துள்ள சொல் வகைகள் நூல், திணை, துறை, புலவர் ஆகிய காரணிகளின் அடிப்படையில் ஆராயப்பட்டுள்ளன. சொல் வகைகளின் வருகையை விளக்கும் வகையில் அவற்றின் நிகழ்வெண்ணிக்கையும் அதற்கான வரைபடங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் 31 வகையான சொற்கூறுகள் நீங்கலாக ஒருபொருட் பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றன புறநானூற்றில் எடுத்தாளப்பட்டுள்ள முறையும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

## இயல் 4 – குறுந்தொகை: சொற்களின் வருகையும் மொழி ஆளுமையும்

குறுந்தொகையில் காணப்படும் சொல் வகைகள் நூல், திணை, துறை, கூற்று, புலவர் அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன. அவ்வகையான சொற்களின் வருகை குறித்த புள்ளி விவரங்களும் வரைபடங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் இவ்வடைவிற்குள் வராதனவாகிய ஒரு பொருட் பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றவை குறுந்தொகையில் ஆளப்பட்டுள்ள முறைகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

## இயல் 5 – ஐங்குறுநூறு: சொற்களின் வருகையும் மொழி ஆளுமையும்

சங்க நூல்களின் வரிசையில் ஐங்குறுநூற்றில் ஆய்வுக் எடுத்துக்கொள்ளப்பட்ட 31 வகையான இலக்கணச் சொல் வகைகள் நூல், திணை, துறை, கூற்று, புலவர் அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன. அதற்குரிய நிகழ்வெண்ணிக்கையும், பொருத்தமான இடங்களில்

வரைபடங்களும் தரப்பட்டுள்ளன. ஒரு பொருட் பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் ஆகிய சொற்கூறுகளும், ஐங்குறுநூற்றில் இடம் பெறும் பாங்கு விளக்கப்பட்டுள்ளது.

## ஆய்வு முடிவுரை

ஒவ்வொரு இயலிலும் கண்டறியப்பட்ட செய்திகள் இங்கு தொகுத்துரைக்கப்படுகின்றன. நூல், புலவர், திணை, துறை, கூற்று ஆகியவற்றின் அடிப்படையில் அமையும் தனித்தன்மை வாய்ந்த மொழிநடை பண்புகளும் எடுத்துரைக்கப்படுகின்றன. முடிவுரையைத் தொடர்ந்து துணைநூற்பட்டியல் அமைந்துள்ளது.

# இயல் - ஒன்று

## சொற்களின் வகைப்பாடும் காரணிகளும்

இவ்வியல் சொல் வகைப்பாட்டுக் கோட்பாடுகளை விளக்கி ஆய்வுக்கு வரையறுத்துக் கொள்ளப்பட்டுள்ள 31 சொல் வகைகளை எடுத்துக்காட்டுகளுடன் விவரிக்கின்றது. மேலும் ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச்சொற்கள், அடைகள் முதலியவற்றின் விளக்கங்களையும் அளிக்கின்றது. சொல் வகைகளை ஆராய்வதற்கு அடிப்படையாக அமையும் நூல், திணை, துறை, கூற்று, புலவர்களுக்கான விளக்கங்கள் அந்தந்த இயல்களில் கொடுக்கப்பட்டுள்ளன.

### பெயர்ச் சொல்

சொல் என்பதை பிளம்பீல்டு (1963:178) 'தனித்தியங்கும் மிகக் குறுகிய வடிவம்' [1] என வரையறை செய்கிறார். ஹாக்கெட் (1958:167) 'ஒரு வாக்கியத்தில் இருபுறமும் இடைவெளி கொண்ட எந்த ஒரு பகுதியும் சொல்' [2] என்று குறிப்பிடுகின்றார். பிளாக் மற்றும் டிராக்கர் (1972:54) 'மிகச் சிறியதாகப் பிரிக்கமுடியாத எந்த ஒரு சிறிய தனி வடிவத்தையும் சொல்' [3] என்று வரையறை செய்கின்றனர். உலக மொழியியல் கலைக்களஞ்சியம் (1972:342) 'சொல் என்பது அருவ நிலையில் உருபன்கள் இணைந்தோ அல்லது தனிநிலை சிறுரும உருபனாகவோ உள்ள ஓர் இலக்கணக் கூறு'[4] என்று குறிப்பிடுகின்றது.

தொல்காப்பியர் சொல்லிற்குப்

பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்

சொல்லி னாகும் என்மனார் புலவர். (தொல். சொல். 152)

என்று இலக்கணம் வகுக்கிறார். தொல்காப்பியரின் சொல் பாகுபாடு இருநிலைகளில் அணுகப்படுகின்றது. 1.சொல்திரிபு அடிப்படையில் பிரிக்கப்படுபவை, 2.சொல்பயன்நிலை அடிப்படையில் பிரிக்கப்படுபவை.

---

[1] ஜீன் லாரன்ஸ் செ., தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள், ப.87
[2] மேலது, ப.87
[3] மேலது, ப.87
[4] மேலது, ப.87

**பெயர்ச்சொல் - வகைப்பாடு**

**சொல்திரிபு அடிப்படை பகுப்பு**

தொல்காப்பியர் இலக்கண அடிப்படையில் சொல்லை இரண்டு வகையாகப் பிரிக்கிறார்.

*சொல்லெனப் படுப பெயரே வினையென்*

*றாயிரண் டென்ப அறிந்திசி னோரே. (தொல். சொல். 154)*

அவர் இவ்விரண்டு வகைச்சொற்களுடன் அவற்று வழி வருகின்ற இடைச்சொல்லையும் உரிச்சொல்லையும் மேலும் சேர்த்துக்கொள்கிறார்.

*இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்*

*அவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப. (தொல். சொல். 155)*

இலக்கண அடிப்படையில் ஒரு மொழியின் அடிச்சொற்கள் உருபன் நிலையிலும் (morphological Level) தொடரன் நிலையில் அதன் பயன்வகையிலும் அல்லது இரு நிலையிலும் அவற்றில் காணும் ஒற்றுமை வேற்றுமை அடிப்படையில் பாகுபாடு செய்யப்படுகின்றன. இப்பாகுபாடு வடிவநோக்கில் அவை ஏற்கின்ற சொல்திரிபு உருபன்களின் (inflectional morphemes) அடிப்படையில் பகுக்கப்படுகிறது.

**சொல் பயனிலை அடிப்படை பகுப்பு**

தொல்காப்பியர் எச்சவியலில் செய்யுளுக்குரிய சொற்கள் எனச் சொற்களை இயற்சொல் (native words), திரிசொல் (free variants), திசைச்சொல் (Regional dialects), வடசொல் (Words borrowed from Sanskrit) எனப் பிரிக்கிறார்.

*இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்*

*றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே, (தொல், சொல், 393)*

அவற்றுள்,

இயற்சொல் தாமே

*செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்*

*தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே, (தொல். சொல். 394)*

என இயற்சொல்லிற்கு இலக்கணம் வகுக்கிறார்.

எ.கா. நீலம், நீர், கடல், மக்கள்

*ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்*

*வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியும்*

*இருபாற் றென்ப திரிசொற் கிளவி, (தொல். சொல்.395)*

எனத் திரிசொல்லிற்கு இலக்கணம் வகுக்கிறார்.

திசைச்சொல்லிற்கு,

*செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்*

*தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி. (தொல். சொல்.396)*

என்று இலக்கணம் வகுக்கிறார்.

எ.கா. மேரு, குங்குமம், கரணம்.

தமிழில் சொல்வகை அமைந்துள்ள முறையை பிற இலக்கண நூல்களும் விவரித்துக் கூறுகின்றன.

*நேமிநாதம் சொல்வகையை,*

*பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல்*

*இயற்சொல் முதல் நான்கும் எய்தும் - பெயர்ச்சொல்*

*உயர்திணைப்பெயர் அ.்.றிணைப்பெயர் ஒன் விரவுற்று*

*இயலும் என உரைப்பர் இங்கு. (நேமி.சொல்.29)*

என எட்டு வகையாகப் பிரிக்கின்றன. நன்னூலும், இலக்கண விளக்கமும் சொல்லைப் பத்து வகையாகப் பிரிக்கின்றன.

*இயற்சொல் திரிசொல் இயல்பில் பெயர்வினை*

*என இரண்டாகும் இடையுரி அடுத்து*

*நான்குமாம் திசை வடசொல்லணுகாவழி. (நன்.270, இ.வி.171)*

தொன்னூல் விளக்கம் சொல்லைப் பன்னிரண்டு வகையாகப் பிரிக்கின்றது.

*எச்சொல்லும் பெயர்வினை இடைஉரி என நான்கு*

*இவற்றுட் பொதுவான இயற்சொல் திரிசொல்*

*ஒருமொழி தொடர்மொழி ஒரு விலாப் பொதுமொழி*

*பகாப்பதம் என்ற பகுப்பதம் என்ற*

*ஆகுபெயர் இருதிணை ஐம்பால் மூவிடம்*

*சாரியை எனப்பொது தகுதி ஈராறே. (தொன்.வி.42)*

ஆனால் முத்துவீரியம்,

*அதுதாம்*

*பெயர்வினை இடை உரிஎனச் சொல் நான்கே. (மு.வீ.பெ.3)*

என்று கூறுகிறது.

**வினைச்சொல்**

வேற்றுமை உருபுகளை ஏற்காததாய் காலக்கிளவிகளை ஏற்பதாய் வரும் சொற்கள் வினைச்சொல் எனப்படும். வினைச்சொற்கள் ஒரு செயலினைக் காட்டும் என்பது இலக்கண அறிஞர்களின் கொள்கையாகும். இக்கருத்தினைத் தான் பிளேட்டோ (426-327 B.C.) போன்ற அறிஞர்களும் கொண்டிருந்தனர்.

"…………. Verbs' were terms which could express action"[5]

என லயன்ஸ் கூறியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

[5] அகத்தியலிங்கம் ச., சங்கத்தமிழ் II, ப.2

**வினைச் சொல்லின் வகைப்பாடு**

வினை குறிப்புவினை, தெரிநிலை வினை என இருவகைப் படுத்தப்படுகின்றது.

**1. தெரிநிலை வினை**

ஒரு வினைச்சொல் தெளிவாகக் காலம் காட்டினால் அதனைத் தெரிநிலை வினை என்று குறிப்பிடுகின்றோம்.

*செய்பவன் கருவி நிலம் செயல் காலம்*

*செய்பொருள் ஆறும் தருவது வினையே. (நன்.320)*

செய்பவன், கருவி, இடம், செயல், காலம், செயப்படுபொருள் ஆகிய அறுவகைப் பொருள்களையும் தருவது தெரிநிலை வினை ஆகும்.

**2. குறிப்பு வினை**

ஒரு வினைச்சொல் குறிப்பாகக் காலத்தை உணர்த்துமானால் அவை குறிப்புவினை என்று குறிப்பிடுகின்றோம். இவை செய்பவன் முதலான ஆறனுள் வினை முதலாகிய கருத்தாவை மட்டும் வெளிப்படையாகக் காட்டும். காலத்தையும் தொழிலையும் குறிப்பாகக் காட்டும்.

*பொருள்முதல் ஆறினும் தோற்றிமுன் ஆறனுள்*

*வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே (நன்.321)*

பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறன் அடிப்படையில் தோன்றி முன் சொல்லப்பட்ட செய்பவன், கருவி போன்ற ஆறனுள் செய்பவனை மட்டும் விளக்குதே குறிப்பு வினையின் இலக்கணம் ஆகும்.

**பொருள் அடிப்படையில் விளக்கம்**

பொருள் அடிப்படையில் இலக்கண அறிஞர்கள் வினைச்சொல்லைத் ‘‘தொழிற்சொல்’’ (தொல்.156), ‘‘தொழில்’’ (தொல்.618) என்று கூறுகின்றனர். தொழிலைக் கூறும்போது இலக்கண விளக்க ஆசிரியரும்,

*“பொருட்புடை பெயர்ச்சி புலப்படுப்பதுவே” (இ.வி. 227)*

என்று கூறுகின்றார். பல வினைகள் பொருட்புடை பெயர்ச்சியைக் குறிப்பதாகும். நட, நகர் போன்ற வினைகள் பொருட்புடை பெயர்ச்சியைக் குறிப்பிடுகின்றன. வேறு சில வினைகள் பொருட்புடை பெயர்ச்சியைக் குறிப்பிடவில்லை. இந்நிலையில் வினைச்சொல் தொழிலைக் குறிப்பிடுகின்றன என்பது பல அறிஞர்களின் கருத்தாகும். நினை, எண்ணு, மற போன்ற வினைகள் புடைபெயர்ச்சியைக் காட்டுவதில்லை. மேலும் சில வினைகள் பொருள்களின் புடைபெயர்ச்சியைக் காட்டுவதில்லை. மேலும் சில வினைகள் பொருள்களின் நிலையை (State) குறிப்பிடுவனவாக உள்ளன. குளிர், பசி போன்ற வினைகள் இத்தன்மையது ஆகும். எனவே எல்லா வினைகளின் பண்புகளையும் விளக்கும் நிலையில் ஒரு விளக்கத்தைக் காண்பது எளிதன்று. ஜெஸ்பர்சன் (1955:86) [6] போன்ற இலக்கண ஆசிரியர்கள் வினைச்சொல் வேறுசில பண்புகளையும் கொண்டன என்பர்.

“As for their meaning, verbs are what sweet calls phenomenon words and may be proudly divided into those that denote action (he eats, breathes, kills, speaks, etc….) those that denote some process (he becomes, grows, loses, dies, etc.) and those that denote source or condition (he sleeps, remains, waits, lives, suffers, etc.) though there are some verbs which it is difficult to include in any one of these classes (he resists, scorns, pleases)”.

**அமைப்பு அடிப்படை விளக்கம்**

அமைப்பு அடிப்படையிலும் ஒரு சில விளக்கங்களைத் தந்து நிற்கின்றனர் இலக்கண ஆசிரியர்கள். வாக்கியங்களின் பயனிலையாக வருவது வினை என்று கூறுகின்றனர். பிளேட்டோ தன்னுடைய விளக்கத்தில்

[6] அகத்தியலிங்கம் ச., சங்கத்தமிழ் II, ப.3

“Verbs were terms which could express the action or quality predicated”[7]

என்று கூறுவார். அமைப்பு அடிப்படை என்றாலே எல்லா மொழிகளுக்கும் பொருந்த வேண்டும் என்ற நியதி இல்லை. ஒவ்வொரு மொழியும் தனித்தனி அமைப்பைக் கொண்டது. எனவே ஒரு மொழிக்குப் பொருந்துமாறு இன்னொரு மொழிக்குப் பொருந்த வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. கிரேக்க மொழியைப் பொறுத்த மட்டில் இவ்விளக்கம் பொருந்தலாம். தமிழில்,

அவன் கண்ணன்

நான் அண்ணன்

போன்ற வாக்கியங்களில் கண்ணன், அண்ணன் போன்றவற்றையே பயனிலையாகக் கருதுகிறோம். இதைப் பெயர்ப்பயனிலை என்கிறோம். எனவே பயனிலையில் வருவன அனைத்தும் வினையாக இருக்க வேண்டியதில்லை. இதே நிலையினைத் தான் வேறுபல விளக்கங்களிலும் காணமுடிகின்றது. பால் காட்டும் விகுதிகளையும், தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய இடங்களைக் காட்டும் விகுதிகளையும் ஏற்று வரும் விளக்கங்களெல்லாம் இத்தகைய தன்மையினைச் சுட்டி நிற்கின்றன.

மேலைநாட்டு இலக்கணங்கள் வினைச்சொல்லினைப் பற்றிக் கூறுவது போல நம் நாட்டு இலக்கணங்களும் வினைச் சொல்லினைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றது.

***“வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது நினையுங்காலைக்***

***காலமொடு தோன்றும்” (தொல்.சொல்.683)***

தொல்காப்பியர் இந்நூற்பாவில் குறிப்பிடுவது வினைச்சொல் வேற்றுமையை ஏற்காது என்றும், காலத்தைக் காட்டும் என்றும் குறிப்பிடுகின்றார். இந்நூற்பாவிற்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் இந்நூற்பா வினையின் பொது இலக்கணத்தை உணர்த்துகின்றது என்று

[7] மேலது, ப.4

குறிப்பிடுகின்றார். இலக்கண விளக்க ஆசிரியர் தொல்காப்பியர் கருத்துடன் ஒன்றி

*“வினை எனப்படுவது வேற்றுமை கொள்ளாது*

*நினையுங்காலைக் காலமொடு தோன்றும்*

*பொருட்புடை பெயர்ச்சி புலப்படுப்பதுவே” (இ.வி.227)*

என்று கூறுகின்றார். பொருள் அடிப்படையில் இலக்கணம் வகுத்தல் என்ற எண்ணத்தினாலேயே ஆகும். நச்சினார்க்கினியரும் “தொழிலாவது பொருளினது புடைப்பெயர்ச்சி”[8] என்று கூறுவதும் இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும். தமிழ் இலக்கணங்கள் வினையைப் பொருள் அடிப்படையிலும், அமைப்பு அடிப்படையிலும் விளக்க முற்படுகின்றது.

**இடைச் சொற்கள்**

*தொல்காப்பியர் இடைச்சொற்களை,*

*இடையெனப் படுவ பெயரொடும் வினையொடும்*

*நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே. (தொல்: சொல் 249)*

எனக் குறிப்பிடுகிறார்.

*புணரியல் நிலையிடைப் பொருள் நிலைக்குதநவும்*

*வினைசெயல் மருங்கிற் காலமொடு வருநவும்*

*வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும்*

*அசைநிலைக் கிளவி யாகி வருநவும்*

*இசை நிறைக் கிளவி யாகி வருநவும்*

*தத்தங் குறிப்பிற் பொருள்செய்குநவும்*

*ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவும் என்று*

*அப்பண் பினவே நுவலுங் காலை (தொல்.சொல்:250)*

[8] அகத்தியலிங்கம் ச., சங்கத்தமிழ் II, ப.8

என ஏழு வகைகளாகப் பகுத்துக் கூறுகின்றார்.

**உரிச்சொல்**

உரிச்சொற்கள் பெயரைப் போன்றும் பெயரைச் சார்ந்தும், பெயருக்கு உறுப்பாகவும், வினையைச் சார்ந்தும் வினைக்கு உறுப்பாகவும் அமைந்திருக்கின்றன.

*உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை*

*இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்*

*பெயரினும் வினையினும் மெய்தடு மாறி*

*ஒருசொற் பலபொருட்கு உரிமை தோன்றினும்*

*பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்*

*பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்*

*தத்தம் மரபிற் சென்றுநிலை மருங்கின்*

*எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல். (தொல்: சொல்.293)*

எனத் தொல்காப்பியர் உரிச்சொல்லுக்கு இலக்கணம் வரையறை செய்துள்ளார்.

**சொல்வகைப்பாடு**

தமிழ் மரபிலக்கணம் சொற்களை பெயர், வினை, இடை, உரி என வகைப்படுத்துகின்றன. பெயர் வினைச்சொற்களை முதன்மைச் சொற்களாகக் குறிப்பிடுகின்றன. இடை, உரி ஆகிய சொல் வகைகள் துணைமைச் சொல் வகைகளாகச் சுட்டப்படுகின்றன. இவ்வியல் முதன்மை மற்றும் துணைமைச் சொல் வகைகள் 31 சொல் வகைகளாகப் பகுக்கப்பட்டு ஆராயப்படுகின்றன. அவை…

1. பெயர்ச்சொல்
2. சுட்டுப்பெயர்
3. பதிலீட்டுப்பெயர்
4. வினாப் பதிலீட்டுப்பெயர்

5. வினாப்பெயர்
6. விளிப்பெயர்
7. தொழிற்பெயர்
8. வினையாலணையும் பெயர்
9. பெயரடை
10. பெயரெச்சம்
11. எதிர்மறைப் பெயரெச்சம்
12. வினைச்சொல்
13. வினையடை
14. வினைமுற்று
15. குறிப்பு வினைமுற்று
16. எதிர்மறை வினைமுற்று
17. வினையெச்சம்
18. எதிர்மறை வினையெச்சம்
19. குறை வினை
20. வினைத்தொகை
21. திரிபு
22. வியங்கோள்
23. நிபந்தனையெச்சம்
24. சொல்லுருபு
25. ஏவல்
26. குறையெச்சம்
27. அடுக்குத்தொடர்
28. ஒலிக்குறிப்புச் சொற்கள்
29. இடைச்சொல்
30. உரிச்சொல்
31. இணைப்பிடைச் சொற்கள்

### 1. பெயர்ச்சொல்

வேற்றுமை உருபுகளை ஏற்பதாகவும், பெயரடைகளை ஏற்பதாகவும், எழுவாயாகத் தோன்றவல்லதாகவும் வரும் சொற்களைப் பெயர்ச்சொற்கள் என்றழைக்கின்றோம். பெயர்ச் சொற்களில் வினையாலணையும் பெயரைத் தவிர ஏனைய பெயர்கள் கால இடைநிலைகளை ஏற்பதில்லை.

எ.கா.

1. வரை, பிசிர், (பதி. 11-1)

2. மதி, குடை (புறம். 3-1)

## 2. சுட்டுப்பெயர்

சுட்டுச் சொற்களுள் பெயராக வருபவனவற்றைச் சுட்டுப்பெயர் என்று குறிப்பிடுகின்றோம். அவன், இவன் எனவும்; அவள், இவள் எனவும்; அவர், இவர் எனவும்; அது, இது எனவும்; அவை, இவை எனவும் வருவன சுட்டுப் பெயர்களாகும்.

எ.கா.

1. அவண் (பதி. 12-4)

1. அவ் (புறம். 6-15)

## 3. பதிலீட்டுப் பெயர்

பெயர், வினை ஆகிய இரு சொல்வகைகளும் மொழியில் முதன்மை இடத்தைப் பெறுகின்றன. இவ்விரு சொல்வகைகளில் பெயர்கள் வரும் இடங்களில் பெயருக்குப் பதிலாக வரும் சொற்களைப் பதிலீட்டுப் பெயர்கள் என்று அழைக்கின்றோம். பெயர்களுக்குப் பிரதியாக வருவதனால் இவற்றைப் பிரதிப் பெயர்கள் எனவும் குறிப்பிடுகின்றோம்.

எ.கா

1. யாமே (ஐங். 1-3)

1. என் (குறுந். 4-1)

## 4. வினாப் பதிலீட்டுப் பெயர்

மூவிடப் பெயர்களைப் போன்றே வினாப்பதிலீட்டுப் பெயர்களும் மொழியில் மிக முக்கியமான இடத்தைப் பெறுகின்றன. வாக்கியத்தில் பெயர்த்தொடர்கள் வரும் இடங்களில் வந்து நின்று வினா எழுப்பும் நிலையில் இவை வினாப் பதிலீட்டுப் பெயர்கள் என அழைக்கப்படுகின்றன.

**எ.கா.**

1. ‘நும் கோ யார்?’ என வினவின் எம்கோ (பதி. 20-1)

2. ‘இவன் யார்?’ என்குவை ஆயின், இவனே (புறம். 13-1)

**5. வினாப் பெயர்**

வினா அடிகளாக உருவாகும் பெயர்களை வினாப் பெயர்கள் என்று குறிப்பிடுகின்றோம். தமிழில் யா, ஆ, எ, ஏ போன்றவை காணப்படுகின்றன.

**எ.கா.**

1. யார்? (ஐங். 49-4)

2. யாது? (குறுந். 197-1)

**6. விளிப் பெயர்**

படர்க்கையோரைத் தம்முகமாக அழைப்பதை விளி என்கிறோம். ஒருவர், பலர் மற்றும் ஒன்றை பலவற்றை அழைக்கும் இலக்கணக் கூறே விளி என்று அழைக்கப்படுகின்றது.

**எ.கா.**

1. வேந்தே! (பதி. 12-3)

2. இறைவ! (புறம். 6-21)

**7. தொழிற்பெயர்**

வருதல், போதல், நடத்தல் என இவ்வாறு தல் ஈற்றிலும் போகல், நடக்கல், வரல் என இவ்வாறு அல் ஈற்றிலும் வரும் பெயர்களைத் தொழிற்பெயர் என்று குறிப்பிடுகின்றோம். இதனையே வினைப்பெயர் என்றும் அழைக்கின்றோம். தொழிலுக்குப் பெயராகி வருவதை தொழிற்பெயர் என்று குறிப்பிடுகின்றோம்.

**எ.கா.**

1. காண்டல் (பதி. 12-10)

2. தீர்த்தல் (புறம். 3-26)

### 8. வினையாலணையும் பெயர்

வினையின் அடியாகப் பிறந்ததாய் பாலிட விகுதிகளை ஏற்றதாய் அமைந்துள்ள பெயர்கள் வினையாலணையும் பெயராகும். இவை குறிப்பு வினையாலணையும் பெயர், தெரிநிலை வினையாலணையும் பெயர் என இருவகைப்படும்.

**எ.கா**

1. வருநர் (பதி. 18-3)
2. உரவோர் (குறுந். 20-2)

### 9. பெயரடை

பெயருக்கு அடையாக வருபவை பெயரடையாகும். தெரிநிலைப் பெயரெச்சமும் குறிப்பு பெயரெச்சமும் சில உரிச்சொற்களும் பெயருக்கு அடையாக வருகின்றன.

**எ.கா.**

1. இருங் (பதி. 11-2)
2. கடுஞ் (பதி. 11-6)

### 10. பெயரெச்சம்

பெயரினை எஞ்சு கிளவியாக உடைய எச்சம் பெயரெச்சம் ஆகும். இதனைத் தொல்காப்பியர் பெயரெஞ்சு கிளவி என்ற கலைச் சொல்லால் குறிப்பிடுகின்றார். இது தெரிநிலைப் பெயரெச்சம், குறிப்புப் பெயரெச்சம் என இருவகைப்படுகின்றது.

**எ.கா.**

1. தடிந்த (பதி. 11-5)
2. அகன்ற (புறம். 3-16)

### 11. எதிர்மறைப் பெயரெச்சம்

பெயரினை எஞ்சு கிளவியாகக் கொள்ளும் எதிர்மறை எச்சம் எதிர்மறைப் பெயரெச்சம் ஆகும்.

**எ.கா.**

1. வாடா (பதி. 12-11)
2. பிழையா (புறம். 3-20)

**12. வினைச்சொல்**

வேற்றுமை உருபுகளை ஏற்காததாய் காலக்கிளவிகளை ஏற்பதாய் வரும் சொற்களை வினைச்சொல் என்கிறோம். இதனைத் தெரிநிலை வினை, குறிப்புவினை என இருவகைப்படுத்தலாம்.

**எ.கா.**

1. அமை (பதி. 12-18)
2. சுடு (புறம். 6-22)

**13. வினையடை**

வினைச்சொற்களைச் சிறப்பிக்குமாறு வரும் அடைகளை வினையடை என்கிறோம்.

**எ.கா.**

1. இன்று (பதி. 18-7)
2. நிறையாக (புறம். 32-1)

**14. வினைமுற்று**

தொடர்ப்பொருள் முற்றி நிற்கின்ற வினையினை வினைமுற்று என்றழைக்கின்றோம். இவை குறிப்பு வினைமுற்று மற்றும் தெரிநிலை வினைமுற்று என இருவகைப்படும்.

**எ.கா.**

1. ஆயின (பதி. 19-19)
2. போன்றன (புறம். 4-12)

### 15. குறிப்பு வினைமுற்று

பலவகை வினைகளுக்கும் பொதுவாகிய செய்பவன் முதலிய ஆறையும் தோன்ற செய்து, பொருள் முதலிய அறுவகைப் பெயர்களையும் அன்றி பிறவற்றைப் பயனிலையாக ஏற்காதவை குறிப்பு வினைமுற்று ஆகும்.

**எ.கா.**

1. அரியை (பதி. 14-2)
2. பெரிது (புறம். 17-30)

### 16. எதிர்மறை வினைமுற்று

தொடர் பொருள் முற்றி, உடன்பாட்டுப் பொருளை மறுத்து நிற்கும் முற்றினை, எதிர்மறை வினைமுற்று என்று குறிப்பிடுகின்றோம்.

**எ.கா.**

1. ஒழியாது (பதி. 30-14)
2. தேறேன் (குறுந். 21-5)

### 17. வினையெச்சம்

எச்சவினைகள் வினைகொண்டு முடியும்போது அவை வினையெச்சம் எனப்படுகிறது. இந்த வினையெச்சங்களைத் தொல்காப்பியர் கீழ்க்காணும் வாய்பாடுகளாக வகைப்படுத்துகிறார்.

"*செய்து செய்யூச் செய்பு செய்தெனச்*

*செய்யியர் செய்யிய செயின் செய செயற்கென*

***அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி"*** *(தொல்.சொல்.713)*

**எ.கா.**

1. ஊர்ந்து (பதி. 13-15)
2. மயக்கி (புறம். 34-10)

## 18. எதிர்மறை வினையெச்சம்

எதிர்மறை வினையெச்சம் எனப்படுவது, வினையெச்சத்தின் உடன்பாட்டு பொருளை மறுத்து வந்து வேறொரு வினையைக் கொண்டு முடியும்.

**எ.கா.**

1. ஓடாது (பதி. 13-25)
2. பொய்யாது (ஐங். 80-1)

## 19. குறை வினை

வினைக் குறிப்பின்கண் அடங்கும் குறைவினைகள் அல், இல், உடை, உள், அன் ஆகிய அடிகளின்று தோன்றுபவையாகும். இவை பெயரடிகளோ பெயரடையடிகளோ இல்லை. பெயரடை அடிகளுக்கும் வினையடிகளுக்கும் இடைப்பட்ட தன்மையினை குறிப்பதாகும். இவைகள் குறைவினை[9] என்று குறிப்பிடப்படுகின்றன.

**எ.கா.**

1. இல்ல (புறம். 3-17)
2. உள (புறம். 20-14)

## 20. வினைத்தொகை

வினையும் பெயரும் சேர்ந்து அமைந்த தொகையினை வினைத்தொகை என்கிறோம்.

**எ.கா.**

1. விரிமலர் (ஐங். 67-3)
2. உழுபடை (புறம். 35-25)

[9] இசரயேல். மோ, இலக்கண ஆய்வு, வினையியல், ப.86

### 21. திரிபு

சந்தியிலக்கணத்தில் ஒரு எழுத்து இன்னொரு எழுத்தாக திரிவதைத் திரிபு என்று கூறுகிறோம். ஒரு பொருள் இன்னொரு பொருளாக மாறுவது (திரிவது) திரிபு எனப்படுகிறது.

**எ.கா.**

1. நின் (பதி. 12-25)
2. தன் (ஐங். 7-5)

### 22. வியங்கோள்

தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்றிடத்தும் உரைப்போனின் விருப்பத்தை வெளிப்படுத்தி ஏவல் போல வரும் கிளவிகள் வியங்கோள் எனப்படும்.

**எ.கா.**

1. தீர்க (குறுந். 251-4)
2. நீங்குக (ஐங். 5-2)

### 23. நிபந்தனையெச்சம்

ஒரு வினையை நிபந்தனைப்படுத்திக் கூறுவது நிபந்தனையெச்சம் எனப்படும்.

ஆயின், எனின், எனில் போன்றவைகள் நிபந்தனை எச்சங்கள் ஆகும். இவற்றில் ஆயின், எனின் போன்றவைகள் மிகுதியாகவும் எனில் என்பது குறைவாகவும் சங்க மொழியில் இடம்பெறுகின்றன. இல் விகுதிகள் குறைவாக இடம்பெறுவது முன்பழந்தமிழ்க் கூறாகக் கருதப்படுகின்றன.[10]

**எ.கா**

1. ஆயினும் (ஐங். 15-4)
2. ஆயின் (புறம். 44-11)

[10] அகத்தியலிங்கம் ச., சங்கத்தமிழ்-V, ப.173

## 24. சொல்லுருபு

வேற்றுமை உருபுகள் செய்கின்ற பணியினைச் சில நேரங்களில் பெயர்களும் வினைகளும் செய்வதுண்டு. வேற்றுமை உருபுகளின் செயல்களைச் செய்யும் பெயர் வினைகள் தமது பெயர் வினைத் தன்மையினின்று குன்றி இடைச்சொல் போல இயங்குகின்றன. இவற்றை சொல்லுருபு என்று குறிப்பிடப்படுகின்றன.

**எ.கா.**

1. வயின் (ஐங். 88-2)
2. உடன் (புறம். 24-15)

## 25. ஏவல்

இதைச்செய் என்ற பொருளில் நட, வா, போ எனவும் இதைச்செய்யும், இதைச்செய்யுங்கள் முதலிய பொருள்களிலும் நடவும், நடவுங்கள் எனவும் வருவனவற்றை ஏவல் என்று கருதுகின்றனர். ஏவல் முன்னிலையில் மட்டும் வருபவையாகும்.

**எ.கா.**

1. உண்மின் (பதி. 18-1)
2. உருமின் (குறுந். 158-2)

## 26. குறையெச்சம்

செய, செய்யிய, செய்யியர், செய்மார் ஆகிய வாய்பாட்டு எச்சங்கள் அமைப்பிலும் அவை காட்டும் பொருளிலும் ஒன்றாக இருக்கும் நிலையில் இவற்றை இணைத்து இவை ஒரு பிரிவினைச் சார்ந்தன எனக் கருதலாம். இவற்றைக் குறையெச்சம்[11] (Infinitive) எனக் குறிப்பிடுகிறோம்.

**எ.கா.**

1. பனிப்ப (பதி. 12-2)
2. கெட (புறம். 16-9)

---

[11] அகத்தியலிங்கம் ச., சங்கத்தமிழ்-V, ப.2

## 27. அடுக்குத்தொடர்

ஒரு சொல் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்டு அடுக்கி வருதல் அடுக்குத்தொடர் ஆகும். யாப்பியலார் அடுக்கை இரட்டைத்தொடை என்றும், அணியியலார் அடுக்கை சொற்பின்வருநிலையணி என்றும் கூறுகின்றனர்.

அச்சம், வியப்பு முதலிய உணர்ச்சிகளின் காரணமாக ஒரே சொல் அடுக்கி வருவதை அடுக்குத்தொடர் என்கின்றனர்.

**எ.கா.**

1. முறை முறை (பதி. 30-24)

2. இறை இறை (குறுந். 52-5)

## 28. ஒலிக்குறிப்புச் சொற்கள்

ஒலிக்குறிப்புச் சொற்கள் என்பது ஒலியில் ஒத்த தன்மை அல்லது ஒலியில் ஒத்திருக்கும் தமிழ் மொழியில் உள்ள சொற்களைக் குறிப்பிடுவதாகும். இவை மொழியில் செய்யுளிலும், வழக்கிலும் பயன்படுகிறது.

**எ.கா.**

1. கதுமென (பதி. 27-11)

2. இழுமென (புறம். 3-3)

## 29. இடைச்சொற்கள்

பெயர், வினை, இடை, உரி ஆகிய நால்வகைச் சொற்களில் இதுவும் ஒன்று. பெயரைச் சார்ந்து நிற்கும் வேற்றுமை உருபு மற்றும் வினையைச் சார்ந்து நிற்கும் காலக்கிளவிகள் போன்றவற்றை இவ்வகையில் குறிப்பிடலாம். சாரியைகள், வேற்றுமை உருபுகள், உவம உருபுகள் அசைநிலைச் சொற்கள், செய்யுளில் இசைநிறைக்க வருவன, தத்தம் குறிப்பிற் பொருளுணர்த்துவன. பால் காட்டும் உருபுகள், வினையில் காலம் காட்டும் உருபுகள், முதலியனவும் மன், தில், கொன், உம், ஒ, ஏ, என, மற்று, மன்ற, தஞ்சம், அந்தில், கொல், எல், அம்ம

என்பன போலத் தத்தமக்குச் சில பொருள்களை உடையவையும் இடைச்சொற்கள் ஆகும்.

**எ.கா.**

1. மன் (பதி. 11-25)
2. அத்தை (புறம். 6-23)

**30. உரிச்சொல்**

பெயரும் வினையும் அல்லாமல் பெயர்வினைபோல் அடிச்சொல் பெற்றுப் பொதுவாகப் பண்புப்பொருள் குறிப்பனவாய்ப் பெயர்க்கும் வினைக்கும் அடையாக வருவனவற்றை உரிச்சொல் என்று கருதுகிறோம். இவை ஒரு பொருள் குறித்த பலசொல் எனவும் பல பொருள் குறித்த ஒரு சொல் எனவும் இருவகைப்படும்.

**எ.கா.**

1. கெழு (பதி. 22-15)
2. தவ (குறுந். 18-5)

**31. இணைப்பிடைச் சொற்கள்**

இரண்டு தொடர்களை இணைக்கும் பாங்கில் ஒரு சொல் செயல்படுமானால் அதை இணைப்பு இடைச்சொல் என்று அழைக்கின்றோம். ஒரு சொல்லுக்குப் பதிலாக ஒரு தொடர் கூட அந்த இணைப்புப் பணியைச் செய்யும் தொடரை இணைப்பிடைச் சொல் என்று குறிப்பிடுகின்றோம்.

**எ.கா.**

1. அதனால் (பதி. 63-15)
2. அதனால் (ஐங். 75-1)

ஆய்வுக்கு வரையறுத்துக் கொள்ளப்பட்ட 31 சொல் வகைகளைத் தவிர்த்து சொற்களை மேலும் வகைப்படுத்த இயலும். ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள்

முதலியவற்றின் விளக்கங்கள் இங்கு விவரிக்கப்படுகின்றன. இச்சொற்களின் வருகையும் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

### ஒருபொருட்பன்மொழிகள்

கவிஞன் தனது கருத்து செம்மையாகச் சொல்லப்பட்டு விட்டது என மனநிறைவு கொள்ளுகின்ற வரை சொற்களை அடுக்குகிறான். பல சொற்கள் ஒரு பொருளைக் கொண்டிருப்பினும் அவைகளுக்குள்ளும் சிறுசிறு வேறுபாடுகள் உண்டு. அவற்றையும் போக்கி நிறைவு செய்கின்ற வகையிலும் பல வேறுபட்ட சொற்களைப் பயன்படுத்துகின்ற ஆர்வ உணர்வுமே ஒரு பொருட் பன்மொழிகளின் வருகைக்குக் காரணங்கள் எனலாம்.[12]

### திருப்புரைச் சொற்கள்

ஒப்புரை – திருப்புரை இயற்கையிலும் இயற்கையின் படைப்பாகிய மனித வாழ்விலும் ஒவ்வொரு கூறிலும் திருப்புரைச் சொற்கள் ஒன்றியிருப்பதை நாம் காண முடிகின்றது. முதற்பொருளாகிய நிலமும் பொழுதும் ஒப்பும் திருப்பும் பெறுகின்றன. கரு, உரிப்பொருள்களில் இவற்றைக் காண முடிகின்றது. மனித உடலமைப்பே ஒப்பும் திருப்பும் உடையவனாக அமைந்திருக்கின்றது. உள்ளக் கூறுகள் பலவும் இவ்வியல்பின என்பார் திருமதி. கிருஷ்ணா சஞ்சீவி. இத்திருப்புரைச் சொற்கள் கவிதையிலும் உரைநடையிலும் சிறந்த விளைவுகளைத் தரும் வகையில் அமைந்திருக்கின்றன. ஒரு சிறந்த கவிஞனின் படைப்பில் இத்திருப்புரைச் சொற்கள் வியத்தகு பயனளிக்கின்ற வகையில் அமைந்திருக்கின்றன. 1.ஒரே அடியில் வருவன. 2.அடுத்தடுத்த அடிகளில் வருவன. 3.ஒரே பாடலில் பரவி வருவன என்று மூன்று வகைகளில் அமையப்பெறுகின்றன.[13]

### அடுத்தடுத்த அடிகளில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள்

அடுத்தடுத்த அடிகளில் இடம்பெறும் திருப்புரைச் சொற்களை ஆங்கிலத்தில் Anaphora என்பர். இதற்கு ஆங்கில இலக்கியச் சொல்லகராதி தரும் விளக்கம்:

---

[12] மேலது., ப.109
[13] மேலது, ப.111

ANAPHORA (GK 'Carrying up or back') A rhetorical device involving the repetition of a word or group of words in successive clauses. It is often used in ballad and song, in oratory and serman but it is common in many literary forms.[14]

**அடைகள்**

ஒரு பொருளின் அல்லது மனிதனின் தன்மையை விளக்கும் வகையில் பெயரடையாகவோ தொடராகவோ வருவதனை அடை என விளக்குகின்றது இலக்கியச் சொல்லகராதி. ஒரு பொருளினை விளக்கியும் உணர்வினை வெளிப்படுத்தியும் காட்டக்கூடிய திறன் பெயரடைகளுக்கே உரியதாகும். அடைகள் நடையியல் உத்தியில் அடிக்கடி குற்றச்சாட்டிற்கு ஆளாகும் ஒரு சொற்கூறாகவே விளங்குகின்றது. ஆனால் இவ்வடைகளை நல்ல முறையில் பயன்படுத்தப்பெறும் பொழுது ஆசிரியரின் உணர்த்தும் திறனை வளப்படுத்தும் வகையிலும் அவரின் சொல்லாட்சிக்கு வளப்பம் சேர்க்கும் வகையிலும் இருக்கின்றது. சிறப்பாக ஆளப்படும் ஒவ்வொரு அடையும் ஓர் உருவகமாகக் காட்சியளிக்கிறது. அடைகள் கவிதையின் போக்கிற்குத் தடையின்றிப் பொருளுக்கு அழகூட்டவும் ஆழம் தரவும் பயன்படுகின்றது. நடைக்கு அழகூட்டப் பயன்படும் பலவழிகளில் இது ஒரு சிறப்புக் கூறாகக் கருதப்படுகின்றது.[15]

தனிச்சொல் வகைகளின் வருகை மட்டுமின்றி ஒரு சொல்லுக்கு (பெயரடை) முன்னும் பின்னும் அமையும் சொல் வகைகளை வகைமாதிரியாக எடுத்துக்கொண்டு புலவர்கள் அடிப்படையில் ஆய்வு மேற்கொள்ளப்படுகின்றது. (பரணர், கபிலர், ஔவையார், பேயனார்).

---

[14] மேலது, ப.112
[15] மேலது, ப.114

## இயல் - இரண்டு

## பதிற்றுப்பத்து : சொற்களின் வருகையும் மொழி ஆளுமையும்

நூல், திணை, துறை, புலவர் போன்றவற்றின் அடிப்படையில் மொழிப் பயன்பாடு மாறுபடுவதற்கான களம் அமைகிறது. எனவே இவ்வியல் பதிற்றுப்பத்தில் மொழி ஆளுமையை நூல், திணை, துறை, புலவர் அடிப்படையில் ஆராய்வதாக அமைகிறது. சொற்களின் வருகை எண் தரவுகளாக மாற்றப்பட்டு வரைபடங்களாக விளக்கப்படுகிறது. மேலும் ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றவற்றின் வருகையையும் ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**பதிற்றுப்பத்து – நூல்**

சேர அரசர்களைப் பற்றிய பத்துப் புலவர்கள் பாடியது பதிற்றுப்பத்து என்னும் தொகைநூலாகும். சேர மன்னர்களின் கொடைச் சிறப்பையும், வெற்றிச் சிறப்பையும், வீரமும் அவர்களின் வரலாறுகள் பலவற்றையும் நன்கு புலப்படுத்தும் நூலாகப் பதிற்றுப்பத்து விளங்குகின்றது. இந்நூலை பத்துப்பத்தாகப் பகுத்துள்ளனர். அவற்றில் முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கவில்லை. எஞ்சிய எட்டு பத்துகள் மட்டும் தொகுக்கப்பட்டுள்ளன. இத்தொகை நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் இன்னாரென்று தெரியவில்லை.

பதிற்றுப்பத்தில் கிடைத்துள்ள எட்டுப்பத்துக்களுக்கும் பதிகம் ஒன்று காணப்படுகிறது. இந்த பதிகம் பாடப்பட்ட சேர வேந்தனுடைய மெய்க்கீர்த்திபோல் நின்று பாடினோர், பாடப்பட்டோர், பாடியபாட்டு, பாடிப்பெற்ற பரிசில், பாடப்பட்ட வேந்தனுடைய ஆட்சிக்காலம் போன்றவற்றைக் கூறுகிறது. சேரவேந்தர்களின் ஆற்றல்மிக்க ஒழுகலாறுகளைப் புலவர்கள் தாம் பாடுதலுக்குரிய பொருளாகக் கொண்டு பாராட்டும் முறையில் இந்நூல் அமைந்துள்ளது. இத்தொகை நூலில் அமைந்த பாடல்கள் பெரும்பான்மையாகப் பாடாண்திணையையே பொருளாகக் கொண்டு அமைந்துள்ளன என்று கருதப்படுகின்றது. இச்செய்யுள்களைத் தொகுத்தோர் ஒவ்வொரு பாடலுக்கும் திணையமைதி கூறாமல் துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பவைகளை மட்டும் குறிப்பிட்டுள்ளனர். ஒரே குடியில் பிறந்த சேர வேந்தர் பலரைக் குறித்துத்

தொடர்ச்சியாகப் புலவர்கள் பலர் பாடிய செய்யுட்கள் காலமுறை தவறாது இத்தொகை நூல் ஒன்றில் தான் காணப்படுகிறது.

**பதிற்றுப்பத்து- திணைகள்**

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பதிற்றுப்பத்துத்திணைகள் சார்ந்த குறிப்புகள் சில பின்வருமாறு விவரிக்கப்படுகின்றன.

**பாடாண் திணை**

வீரமிக்க அரசனின் சிறப்பினைக் கூறுவதாகவும் அவனது புகழினையும் கொடையையும் புகழ்ந்து பாடுவது பாடாண் திணையாகும். ஆண்மகனின் ஒழுகலாறுகளைக் கூறுவது பாடாண்திணையின் நோக்கமாகும். பாடாண் திணை கைக்கிளைக்குப் புறனாக அமைகின்றது. புறத்திணைகளில் பெரியதாகப் பாடாண்திணை அமைந்துள்ளது. பாடாண் திணையின் உட்பிரிவுகளாக தொல்காப்பியர் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகிறார். 1.கொடைக் கொடுத்தோரை புகழ்தல், 2.கொடைக் கொடாதோரைப் பழித்தல், 3.பகைவரை வென்றவனைப் பற்றிக் கூறும் இயன்மொழி வாழ்த்து, 4.வாயில் காவலரிடம் கூறும் கடைநிலை, 5.அரசனின் உறக்கத்திற்காகப் பாடும் கண்படைநிலை, 6.கபிலைப் பசுவைக் கொடையாகத்தரும் வேள்விநிலை, 7.வேலின் சிறப்பினைக் கூறுவதாக அமையும் விளக்கு நிலை, 8.உள்ளதை வெளிப்படையாகக் கூறும் வாயுறை வாழ்த்து, 9.அறிவுரை பகரும் செவியுரை வாழ்த்து, 10.குலதெய்வங்களைக் காக்க பாடும் புறநிலை வாழ்த்து இவை பாடாண் திணையின் துறைகளாகக் குறிப்பிடப்படுகின்றன.

பதிற்றுப்பத்தில் பாடாண்திணைப் பாடல்களே மிகுதியாக இடம் பெறுகின்றன. இந்நூலில் 69 பாடல்கள் பாடாண்திணையைச் சார்ந்தவையாகும்.

**வாகைத்திணை**

வாகை மாலை சூடுவது போர் வெற்றிக்கு அடையாளமாகும். கல்வியிலும் வாழ்விலும் விளையாட்டிலும் வாகை சூடுவர். பாலைக்கு புறனாக வாகை அமைகின்றது. குற்றமற்ற கோட்பாடுகளையுடைய பெருமக்கள் தங்களது துறையிலும் பிறரிலும் மேம்பட்டு தகுதி உயர்வை

வெளிப்படுத்துவது வாகையாகும். போரில் மட்டுமின்றி பிறவற்றிலும் உயர்வது வாகையாகும்.

தொல்காப்பியர் உயர்ந்தோருக்கான வாகை வகைகளாக ஏழினைக் குறிப்பிடுகின்றார். **அறுவகைப்பட்ட பார்ப்பன வாகை:** ஓதல், ஓதுவித்தல், வேட்டல்,வேட்பித்தல்,ஈதல், ஏற்றல் போன்றவைகளாகும். **ஐவகை மரபின் அரசவாகை:** கற்றல், வேட்டல்,ஈதல், படைவழங்கிப் பயிற்றுவித்தல், குடியோம்புதல்.**வணிகர், வேளாளர் வாகை:** கற்றல்,உழுதொழில்,ஈதல், வாணிகம், விருந்தோம்பல் ஆநிரை காத்தல். **முக்காலங்கலையும் நெறியறிந்து செய்யும் அறிவர் வாகை:**வானியல் வல்லுநர், காலம், பருவம் என்பவைகளைப் பற்றி மக்களுக்கு அறிவிப்பர். மூவகைக் கால வானியல் நிகழ்வுகள் மற்றும் உலகியல் நிகழ்வுகள் யாவற்றையும் முன்னறிந்து கூறுவர். **தவம் செய்வோர் கைக்கொள்ளும் எட்டு வகை வழக்கங்கள்:** நீராடல், நிலத்திடை வாழ்தல், தோலுடுத்தல், சடை புனைதல், ஊரினுள் புகாமை, காட்டிலுள்ள உணவுகளை உண்ணுதல், தெய்வபூசை, விருந்தோம்பல்.**பொருநர் வாகை:** பாடினியர், பாணர் என இருபாலராக அறியப்பட்ட பொருநர் வாழ்வு.**இவையும் இது போன்ற பிற வகை வாகைகளும்:** மேற்குறிப்பிட்ட ஏழும் உயர்ந்தோர் வாழ்வில் உயர்வுக்காட்டும் வாகைத் துறைகளாகும்.

### தும்பைத்திணை

வீரம் மிக்க பகையரசர்கள் தம் வலிமையின் காரணமாக வெற்றி ஒன்றையே இலக்காகக் கொண்டு கடும் போர் புரிவது தும்பைப்போர் எனப்படுகிறது. தும்பைப்போரில் வேந்தர்கள் இருவரும் தம் வலிமையை வெளிப்படுத்துவதால் இப்போர் கடுமையானதாகவும் பேரழிவு கொண்டதாகவும் அமைகின்றன. போர் புரியும் போது பகையரசர்கள் தும்பைப் பூவினையும் தும்பை மாலையினையும் அணிந்து போர்புரிவர். தும்பை என்பது கடும்போர். இது இரங்கற் பொருட்டாகிய நெய்தலுக்குப் புறமாக அமைகிறது.

தும்பைத் திணையின் நிகழ்வுகளாகத் தொல்காப்பியர் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகிறார். 1.பகைவர்கள் அஞ்சும்படியான தானை நிலை (காலாட்படை), 2.யானை நிலை, 3.குதிரை நிலை, 4.பகைவர்களை வெட்டி வீழ்த்தும் தார்நிலை, 5.இரு பக்கத்துத்

தலைவர்களும் இறந்து போனநிலை, 6.கூழைப் படையைத் தடுக்கும் எருமை நிலை, 7.புண்பட்டு உடல்வலிமையால் மட்டுமே போரிடும் பாழிநிலை, 8.களிற்றை வெட்டி வீழ்த்திய வீரர்களின் பெருமை, 9.வேந்தனைக் கொன்ற வேந்தனின் வாள்வீரர் ஆடும் அமலை ஆட்டம், 10.போரில் ஒருவரும் எஞ்சாது அனைவரும் இறந்து போகும் தொகைநிலை, 11.போரில் மன்னன் வீழ்ந்து இறந்ததை அறிந்து சினம் கொண்டு தனி ஒருவன் போரிடும் தொகைநிலை, 12.வீரன் தனது ஒளி வீசும் வாளைச் சுழற்றி ஆடுவது நூழிலாட்டு, இத்திணையில் அவலம் சார்ந்த நிகழ்வுகளும் அச்சத்தையும் இரக்கத்தையும் ஏற்படுத்தும் நிகழ்வுகளும் இடம்பெறுகின்றன.

### பதிற்றுப்பத்து - துறைகள்

புறத்துறைகள் தத்தம் துறைகளுக்குரிய செயல்பாடுகளையும், உணர்வு வெளிப்பாடுகளையும் கொண்டது. இவற்றின் அடிப்படையில் மொழிப் பயன்பாடு மாறுபடுவதற்கான களம் அமைகிறது. எனவே துறை சார்ந்து சொல் வகைகள் இந்த ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட துறைகளின் விளக்கங்கள் பின்வருமாறு விவரிக்கப்படுகின்றன.

### செந்துறைப் பாடாண்பாட்டு

உலகினுள் இயற்கை வகையான் இயன்ற மக்களை பாடுதல் செந்துறைப் பாடாண்பாட்டு எனப்படும். பாடாண் என்பது பாடுதல் வினையையும் பாடப்படும் ஆண்மகனையும் மன்னது ஒழுகலாறுகளையும் குறிப்பிடுவது ஆகும்.

### வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு

பகைவரின் நாடு அழிந்து விடும் என்ற நோக்கிலும் நாட்டின் அழிவும் மக்களின் துயரமும் நினைத்துப்பாடுவது வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு ஆகும். பகைநாட்டவரின் மீதுள்ள இரக்கப் பண்பினால் நாடு அழிதல் கூடாது என்று எண்ணி செலவினை மேற்கொள்ளல் இத்துறை ஆகும்.

**விறலியாற்றுப்படை**

மன்னனது வெற்றியைப் புகழ்ந்து பாடுகின்ற விறலியை வழிப்படுத்துவது விறலியாற்றுப்படை ஆகும்.

**காட்சி வாழ்த்து**

மன்னனது வெற்றிக்குக் காரணமான தாளினை வாழ்த்திப்பாடுவது காட்சி வாழ்த்து என்னும் துறையாகும்.

**இயன்மொழி வாழ்த்து**

மன்னன் கொடுத்த பொருளுக்கு ஈடாக பொருட்களைக் கொடுக்க வேண்டும் எனக் கூறுவது இயன்மொழி வாழ்த்து ஆகும். மன்னனது இயல்பினை எடுத்துக் கூறுவதும் இயன்மொழி வாழ்த்தாகும்.

**வாகை**

மன்னனது வெற்றிப்புகழைச் சிறப்பித்துக் கூறுவது வாகைத்துறையாகும்.

**பரிசில்துறை பாடாண்பாட்டு**

மன்னனது சிறப்பினைக்கூறிப் பரிசில் கேட்கும் பாணன் பாடுவது பரிசில்துறை பாடாண்பாட்டு எனப்படும்.

**பதிற்றுப்பத்து - புலவர்கள்**

பதிற்றுப்பத்தில் 80 பாடல்களை 8 புலவர்கள் பாடியுள்ளனர். அவர்களைப் பற்றிய சுருக்கமான குறிப்புகள் பின்வருமாறுகொடுக்கப்படுகின்றன.

**குமட்டூர்க் கண்ணனார்**

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்னும் அரசன் மீது பதிற்றுப்பத்தில் இரண்டாம்பத்தைப் பாடி உம்பற்காட்டில் 500 ஊர்களும், தென்னாட்டு வருவாயில் 38 ஆண்டு பாகமும் பரிசாகப் பெற்றான்.

**பாலைக் கௌதமனார்**

பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்தைப் பாடியுள்ளார். புறநானூற்றில் 1 பாடல் இவர் இயற்றியதாகும்.

**காப்பியாற்றுக்காப்பியனார்**

களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல் என்னும் அரசர் மீது பதிற்றுப்பத்தில் நான்காம் பத்தைப் பாடி 40 நூறாயிரம் பொன்னும் நாட்டின் ஒரு பகுதியும் பரிசாகப்பெற்றான்.

**பரணர்**

சங்கப் புலவர்களுள் மிகவும் புகழ் வாய்ந்தவர் பரணர். பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தை இவர் பாடியுள்ளார். புறநானூற்றில் 13 பாடல்களும் அகநானூற்றில் 34 பாடல்களும் குறுந்தொகையில் 16 பாடல்களும் நற்றிணையில் 12 பாடல்களும் இயற்றியுள்ளார். இவர் தம் பாடல்களில் யாரையேனும் புகழ்ந்தும் அக்காலத்தில் நடைபெற்ற கதைகளைக் கூறியும் வரலாற்றுச் செய்திகளை மிகுதியாகவும் குறிப்பிட்டுள்ளார்.

**காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்**

இவர் ஒரு பெண்பால் புலவர் ஆவார். பதிற்றுப்பத்துள் ஆறாம்பத்தைப் பாடி, அணிகலனுக்கென்று ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் பொற்காசும் பரிசாகப் பெற்றவர். குறுந்தொகையில் 1 பாடலும் பாடியுள்ளார்.

**கபிலர்**

சங்க இலக்கியங்களில் குறிஞ்சித்திணை பாடுவதில் வல்லவராகக் கபிலர் விளங்குகிறார். 119 பாடல்கள் கபிலரின் அகப்பாடல்களாகும். இவை குறிஞ்சித் திணையைச் சார்ந்தவையாகும். முல்லைத் திணையில் 1 பாடலும், நெய்தல் திணையில் 3 பாடல்களும், பாலைத்திணையில் 1 பாடலும் பாடியுள்ளார். எட்டுத்தொகையில் 235 பாடல்களை இயற்றியுள்ளார். ஐங்குறுநூற்றில் 100 பாடல்களும் கலித்தொகையில் 29 பாடல்களும் குறுந்தொகையில் 29 பாடல்களும் அகநானூற்றில் 18

பாடல்களும் நற்றிணையில் 20 பாடல்களும் பதிற்றுப்பத்தில் 10 பாடல்களும் புறநானூற்றில் 29 பாடல்களும் பாடியுள்ளார்.

**அரிசில்கிழார்**

இவர் பதிற்றுப்பத்தில் (71-80) பத்து பாடல்களும், புறநானூற்றில் 7 பாடல்களும், குறுந்தொகையில் 1 பாடலும் பாடியுள்ளார்.

**பெருங்குன்றூர்க்கிழார்**

பதிற்றுப்பத்தில் (81-90) பாடல்களும், புறநானூற்றில் 5 பாடல்களும், அகநானூற்றில் 1 பாடலும், நற்றிணையில் 4 பாடல்களும், குறுந்தொகையில் 1 பாடலும் பாடியுள்ளார்.

**பதிற்றுப்பத்து : சொற்களின் வருகை**

பதிற்றுப்பத்தில் அமைந்துள்ள 80 பாடல்களின் சொல் வருகையும் நூல் அடிப்படையில் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

**பதிற்றுப்பத்து சொற்களின் வருகை**
**அட்டவணை 2.1**

பதிற்றுப்பத்தில் ஆளப்பட்டுள்ள சொற்களின் வருகை இங்கு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன.

| வ.எண் | சொல் வகைகள் | நிகழ்வெண்ணிக்கை |
|---|---|---|
| 1 | பெயர் | 4341 |
| 2 | சுட்டு | 39 |
| 3 | ப.பெ | 71 |
| 4 | வி.ப.பெ | 33 |
| 5 | வி.பெ | 12 |
| 6 | விளி | 150 |
| 7 | தொ.பெ | 130 |
| 8 | வி.அ.பெ | 143 |
| 9 | பெ.அ | 650 |
| 10 | பெ.எ | 627 |
| 11 | எ.ம.பெ.எ | 120 |
| 12 | வினை | 648 |
| 13 | வி.அ | 57 |
| 14 | வி.மு | 186 |
| 15 | கு.வி.மு | 82 |
| 16 | எ.ம.வி.மு | 5 |
| 17 | வி.எ | 597 |
| 18 | எ.ம.வி.எ | 49 |
| 19 | கு.வி | 7 |
| 20 | வி.தொ | 37 |
| 21 | திரிபு | 108 |
| 22 | வியங் | 37 |
| 23 | நி.எ | 35 |
| 24 | சொ.உ | 11 |
| 25 | ஏவல் | 12 |
| 26 | கு.எ | 331 |
| 27 | அ.தொ | 11 |
| 28 | ஒ.கு | 7 |
| 29 | இ.சொ | 1208 |
| 30 | உ.சொ | 15 |
| 31 | இ.இ.சொ | 3 |

பதிற்றுப்பத்தில் 4,341 பெயர்ச்சொற்கள் இடம்பெறுகின்றன. இடைச்சொற்கள் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. பெயரடைகளும் வினைச்சொற்களும் ஒத்தபோக்கில் அமைந்துள்ளன. எதிர்மறைவினை முற்றுகள் மிகக் குறைவாகக் காணப்படுகின்றன. வினைமுற்றுகள் மிகுதியாகவும் குறிப்பு வினைமுற்றுகள் குறைவாகவும் இடம்பெற்றுள்ளன. வியங்கோளும் சுட்டுப்பெயர்களும் சற்றொத்த நிலையில் அமைந்துள்ளன. வினையடைகள் மிகுதியாகவும் வினைத்தொகை சற்று குறைவாகவும் காணப்படுகின்றது. நிபந்தனையெச்சமும் வினாப்பதிலீட்டுப் பெயரும் ஏறக்குறைய ஒரே போக்கில் ஆளப்பட்டுள்ளது. சொல்லுருபும் அடுக்குத்தொடரும் சமஅளவில் அமைந்துள்ளன. வினையெச்சங்களின் வருகை மிகுதியாகவும் குறையெச்சங்கள் குறைவாகவும் இடம்பெறுகின்றன. பெயரெச்சங்கள் மிகுதியாகவும், எதிர்மறைப் பெயரெச்சங்கள் குறைவாகவும் அமைந்துள்ளன.

பதிற்றுப்பத்தில் 154 விளிப்பெயர்கள் இடம்பெறுகின்றன. அவற்றில் அண்மை விளி 115, சேய்மை விளி 39 ஆகும்.

**அண்மை விளி**

எ.கா. குட்டுவ (பதி. 23-10)

கணவ (பதி. 24-11)

**சேய்மை விளி**

எ.கா. வேந்தே (பதி. 34-1)

கோவே (பதி. 84-6)

வேந்தே! சேரலாத! மார்ப! தோன்றல் முதலிய விளிப்பெயர்கள் பதிற்றுப்பத்தில் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. சினம் மிக்க வேந்தனே! மாலை அணிந்த வலிமை மிக்க மார்பை உடைய சேரலாதனே! பெருமையில் சிறந்தவனே! என்று சேர மன்னர்களின் வெற்றி, கொடை, வலிமை போன்றவைகளை வெளிப்படுத்தும் வகையில் விளிப்பெயர்கள் கையாளப்பட்டுள்ளன.

வியங்கோள் வினைமுற்றுகள் 37 இடங்களில் ஆளப்பட்டுள்ளன.

பதிற்றுப்பத்தில் இடம்பெறும் வியங்கோள் வினைமுற்றுகள் இங்கு சில எடுத்துக்காட்டப்படுகின்றன.

வருக (பதி. 17-10), வழங்குக (பதி.18-6), வாழ்க (பதி. 20-5), தருக (பதி. 38-14), பெறுக (பதி. 43-22), ஆடுக (பதி. 58-1), பாடுக (பதி. 58-1), இடுக (பதி. 80-10), பூண்க (பதி. 81-32), துஞ்சுக (பதி. 81-36), வாழியர் (பதி. 15-24), உணீஇயர் (பதி. 49-3), இறாஅலியர் (பதி. 40-2).

வழங்குக, வாழ்க, தருக, பெறுக முதலிய வியங்கோள் வினைமுற்றுகள் பதிற்றுப்பத்தில் அமைந்துள்ளன. வருநர்குச் சோறு மற்றும் பல வகையான பொருட்களை வழங்க வேண்டும் என்றும், நெடுஞ்சேரலாதன் வாழ்க அவனது ஆட்சி வாழ்க வேண்டும் என்றும் அரசனை வாழ்த்தியும் விறலியர் பல பிடிகளைப் பரிசாகப் பெறுதல் வேண்டும் என்றும் சேரமன்னர்களின் செல்வச் சிறப்பினையும் கொடைச்சிறப்பினையும் வாழ்த்திக் கூறும் வகையில் வியங்கோள் வினைமுற்றுக்கள் அமைந்துள்ளன.

பதிற்றுப்பத்தில் நிபந்தனையெச்சங்கள் 35 இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

வரின் (பதி. 14-10), வைப்பின் (பதி. 15-8), நினைப்பின் (பதி. 17-1), ஆயின் (பதி.18-11), வினவின் (பதி. 20-1), அறியின் (பதி. 24-16), எண்ணின் (பதி. 32-8), கருதின் (பதி.33-11), வளையின் (பதி. 53-13), எனின் (பதி.63-18), செலின் (பதி.20-23), பெறின் (பதி.68-8).

பதிற்றுப்பத்தில் ஒலிக்குறிப்புச்சொற்கள் 7 இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. பரணர், பெருங்குன்றூர்க்கிழார் தவிர பிற புலவர்கள் ஒலிக்குறிப்புச் சொற்களைக் கையாண்டுள்ளனர்.

புல்லென (பதி. 13-13), கதுமென (பதி. 27-11), புல்லென (பதி.28-8), கல்லென (பதி. 31-5), கதுமென (பதி. 52-25), இழுமென (பதி. 70-24), புல்லென (பதி. 79-10).

பாலைக் கௌதமனார் இரண்டு ஒலிக்குறிப்புச் சொற்களைக் கையாண்டுள்ளார் பிற புலவர்கள் ஒரே ஒரு ஒலிக்குறிப்புச் சொல்லினை மட்டுமே பயன்படுத்தியுள்ளனர்.

**பதிற்றுப்பத்து : சொற்களின் வருகை – திணைகள்**

தொல்காப்பியர் குறிப்பிடும் புறத்திணைகள் ஏழனுள் வஞ்சியும், காஞ்சியும் தவிர்த்து ஐந்து திணைப்பாடல்கள் மட்டுமே பதிற்றுப்பத்தில் இடம்பெறுகின்றன. பாடாண்-69, தும்பை-3, வாகை-6, வெட்சி-1, உழிஞை-1. பாடாணும் தும்பையும் வாகையும் ஒப்பிட்டு ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**பதிற்றுப்பத்து சொற்களின் வருகை – திணைகள்**

**அட்டவணை 2.2**

திணை அடிப்படையில் சொற்களின் வருகை இங்கு அட்டவணைப் படுத்தப்படுகின்றன.

| வ.எண் | சொல் வகைகள் | பாடாண் திணை | வாகைத் திணை | தும்பைத் திணை |
|---|---|---|---|---|
| 1 | பெயர் | 3773 | 340 | 63 |
| 2 | சுட்டு | 54 | 3 | 1 |
| 3 | ப.பெ. | 56 | 10 | 2 |
| 4 | வி.ப.பெ | 32 | 1 | 0 |
| 5 | வி.பெ | 10 | 2 | 0 |
| 6 | விளி | 96 | 5 | 1 |
| 7 | தொ.பெ | 105 | 18 | 2 |
| 8 | வி.அ.பெ | 125 | 11 | 3 |
| 9 | பெ.அ | 546 | 60 | 14 |
| 10 | பெ.எ | 546 | 45 | 13 |
| 11 | எ.ம.பெ.எ | 102 | 13 | 2 |
| 12 | வினை | 566 | 46 | 12 |
| 13 | வி.அ | 60 | 5 | 0 |
| 14 | வி.மு | 165 | 16 | 1 |
| 15 | கு.வி.மு | 68 | 6 | 6 |
| 16 | எ.ம.வி.மு | 3 | 0 | 0 |
| 17 | வி.எ | 508 | 59 | 11 |
| 18 | எ.ம.வி.எ | 41 | 6 | 0 |
| 19 | கு.வி | 3 | 0 | 0 |
| 20 | வி.தொ | 42 | 3 | 1 |
| 21 | திரிபு | 85 | 18 | 3 |
| 22 | வியங் | 31 | 5 | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| 23 | நி.எ | 33 | 1 | 0 |
| 24 | சொ.உ | 11 | 0 | 0 |
| 25 | ஏவல் | 12 | 0 | 0 |
| 26 | கு.எ | 268 | 48 | 6 |
| 27 | அ.தொ | 10 | 0 | 0 |
| 28 | ஒ.கு | 6 | 1 | 0 |
| 29 | இ.சொ | 1031 | 104 | 20 |
| 30 | உ.சொ | 12 | 2 | 0 |
| 31 | இ.இ.சொ | 2 | 0 | 0 |

பாடாண் திணையில் பெயர்ச்சொற்கள் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. வினையடைகள் பாடாண் திணை மற்றும் வாகைத் திணையில் இடம்பெறுகின்றன. தும்பைத் திணையில் இடம்பெறவில்லை. குறிப்பு வினைமுற்றுகள் வாகை தும்பைத் திணைகளில் ஒத்த போக்கில் ஆளப்பட்டுள்ளன. எதிர்மறை வினைமுற்றுகள் பாடாண்திணையில் மட்டுமே காணப்படுகின்றன. வினையெச்சங்கள் வாகையில் மிகுதியாகவும் தும்பைத் திணையில் குறைவாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. பெயரடைகளும் பெயரெச்சங்களும் பாடாண்திணையில் ஒத்த தன்மையை வெளிப்படுத்துகின்றன. பாடாண்திணையில் சுட்டுப்பெயர்களும் பதிலீட்டுப்பெயர்களும் சற்றொத்த நிலையில் அமைந்திருக்கின்றன. வினாப்பெயரும் அடுக்குத்தொடரும் பாடாண்திணையில் சமஅளவில் கையாளப்பட்டுள்ளன. இடைச்சொற்கள் வாகை தும்பை ஒப்பிட வாகையில் மிகுதியாக இடம்பெறுகின்றன. ஏவலும் உரிச்சொற்களும் பாடாணில் ஒத்த பான்மையை வெளிப்படுத்துகின்றன.

**பதிற்றுப்பத்து : சொற்களின் வருகை –துறைகள்**

பதிற்றுப்பத்தில் செந்துறைப் பாடாண்பாட்டு துறையில் 37 பாடல்கள் அமைந்துள்ளன. மற்ற துறைகளில் குறைந்த அளவில் பாடல்கள் இடம்பெறுகின்றன. வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு-11, விறலியாற்றுப்படை-6, காட்சி வாழ்த்து-6, இயன்மொழி வாழ்த்து-5, வாகை-5, தும்பை-2, பரிசில்துறைப் பாடாண்பாட்டு-2, இத்துறைகள் மட்டுமே இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

## பதிற்றுப்பத்து சொற்களின் வருகை – துறைகள்

## அட்டவணை 2.3

துறை அடிப்படையில் சொற்களின் வருகை இங்குப் பட்டியலிடப்படுகின்றன.

| வ. எண் | சொல் வகைகள் | செந் துறைப் பாடாண் பாட்டு 37 | வஞ்சித் துறைப் பாடாண் பாட்டு 11 | விறலி யாற்றுப் படை 6 | காட்சி வாழ்த்து 6 | இயன் மொழி வாழ்த்து 5 | வாகை 5 | தும்பை 2 | பரிசில்துறைப் பாடாண்பாட்டு 2 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 2024 | 591 | 239 | 369 | 314 | 408 | 49 | 122 |
| 2 | சுட்டு | 18 | 6 | 2 | 2 | 6 | 4 | 0 | 1 |
| 3 | ப.பெ. | 35 | 7 | 3 | 4 | 5 | 6 | 1 | 1 |
| 4 | வி.ப.பெ | 14 | 9 | 3 | 0 | 2 | 2 | 0 | 2 |
| 5 | வி.பெ | 6 | 1 | 3 | 0 | 0 | 1 | 0 | 0 |
| 6 | விளி | 67 | 7 | 7 | 8 | 7 | 15 | 1 | 0 |
| 7 | தொ.பெ | 49 | 18 | 3 | 12 | 15 | 15 | 1 | 4 |
| 8 | வி.அ.பெ | 75 | 17 | 6 | 14 | 6 | 10 | 3 | 5 |
| 9 | பெ.அ | 398 | 78 | 36 | 61 | 44 | 67 | 13 | 11 |
| 10 | பெ.எ | 312 | 89 | 25 | 54 | 33 | 50 | 9 | 16 |
| 11 | எ.ம.பெ.எ | 56 | 10 | 6 | 11 | 17 | 12 | 2 | 0 |
| 12 | வினை | 303 | 90 | 38 | 55 | 43 | 50 | 9 | 15 |
| 13 | வி.அ | 29 | 10 | 1 | 3 | 3 | 3 | 0 | 1 |
| 14 | வி.மு | 93 | 20 | 17 | 20 | 9 | 8 | 1 | 4 |
| 15 | கு.வி.மு | 27 | 13 | 3 | 13 | 6 | 5 | 2 | 5 |
| 16 | எ.ம.வி.மு | 2 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 17 | வி.எ | 291 | 67 | 34 | 55 | 34 | 57 | 8 | 17 |
| 18 | எ.ம.வி.எ | 23 | 6 | 3 | 1 | 7 | 9 | 0 | 0 |
| 19 | கு.வி | 1 | 2 | 0 | 2 | 0 | 0 | 0 | 0 |
| 20 | வி.தொ | 19 | 13 | 2 | 31 | 7 | 7 | 1 | 0 |
| 21 | திரிபு | 49 | 11 | 3 | 45 | 8 | 5 | 3 | 1 |
| 22 | வியங் | 16 | 1 | 2 | 19 | 7 | 4 | 0 | 0 |
| 23 | நி.எ | 20 | 3 | 0 | 15 | 7 | 3 | 0 | 0 |
| 24 | சொ.உ | 4 | 4 | 0 | 8 | 1 | 1 | 0 | 0 |
| 25 | ஏவல் | 7 | 0 | 0 | 7 | 3 | 2 | 0 | 0 |
| 26 | கு.எ | 121 | 46 | 25 | 36 | 20 | 34 | 5 | 8 |
| 27 | அ.தொ | 7 | 0 | 0 | 5 | 1 | 2 | 0 | 0 |
| 28 | ஒ.கு | 5 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 29 | இ.சொ | 572 | 140 | 59 | 118 | 95 | 111 | 13 | 28 |
| 30 | உ.சொ | 6 | 2 | 0 | 11 | 2 | 5 | 0 | 0 |
| 31 | இ.இ.சொ | 1 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 |

செந்துறைப்பாடாண் துறையில் பெயரடைகள், இடைச்சொற்களின் ஆளுமை மிகுதியாகக்காணப்படுகின்றன. வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு மற்றும் இயன்மொழியில் சுட்டுப்பெயர்கள் ஒத்தநிலையில் அமைந்துள்ளன. செந்துறையில் விளிப்பெயர்கள் மிகுதியாகவும், வஞ்சித்துறை,விறலியாற்றுப்படை, இயன்மொழி வாழ்த்தில் சம அளவிலும் விளிப்பெயர்கள் ஆளப்பட்டுள்ளன. தொழிற்பெயர்கள் இயன்மொழி, வாகையில் ஒத்த நிலையிலும் வஞ்சித்துறையில் மிகுதியாகவும் இடம்பெறுகின்றன. வினையாலணையும் பெயர் செந்துறையில் மிகுதியாகவும் மற்ற துறைகளில் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மையினையும் வெளிப்படுத்துகின்றன. காட்சி வாழ்த்து, வாகையில் பெயரடைகளும், பெயரெச்சங்களும் ஏறக்குறைய ஒரே நிலையில் அமைந்துள்ளன. எதிர்மறைப் பெயரெச்சங்கள் வஞ்சித்துறையிலும் காட்சி வாழ்த்திலும், வாகையிலும் ஒத்த நிலையில் இடம்பெறுகின்றன. வினைச்சொற்கள் தும்பையில் குறைவாகவும் பரிசில் துறையில் அதிகமாகவும் காணப்படுகின்றன. காட்சி வாழ்த்து, இயன்மொழியில் வினைச்சொற்கள் சற்றொத்த நிலையில் ஆளப்பட்டுள்ளன.

வினைமுற்றுகள் செந்துறையில் அதிகமாகவும் வஞ்சி மற்றும் காட்சித்துறையில் ஒரே அளவிலும் பரிசில்துறையில் குறைவாகவும் ஆளப்பட்டுள்ளன. குறிப்பு வினைமுற்றுகள் வஞ்சித்துறை,காட்சி வாழ்த்து மற்றும் வாகை பரிசில் துறையில் சம அளவில் இடம்பெறுகின்றன. எதிர்மறை வினைமுற்றுகள் செந்துறை வஞ்சியில் இடம்பெறுகின்றன. மற்ற துறைகளில் எதிர்மறை வினைமுற்றுகள் இடம்பெறவில்லை. வினையெச்சங்கள் விறலியாற்றுப்படை இயன்மொழி வாழ்த்தில் ஒத்த பான்மையை சுட்டி நிற்கின்றன. வஞ்சித்துறையில் வினையெச்சங்கள் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. செந்துறைப் பாடாண்பாட்டில் வினையெச்சங்களின் வருகை அதிகமாக இடம்பெறுகின்றன. காட்சி வாழ்த்தில் வினைத்தொகைகளின் வருகை மிகுந்துள்ளது. செந்துறை பாடாண்பாட்டு மற்றும் காட்சி வாழ்த்து துறைகளில் திரிபு மிகுதியாகவும், வஞ்சித்துறைப் பாடாண்பாட்டுத் துறையில் திரிபு குறைவாகவும் இடம்பெற்றுள்ளன.

## பதிற்றுப்பத்து : சொற்களின் வருகை – புலவர்கள்

பதிற்றுப்பத்து புலவர்களான குமட்டூர்க்கண்ணனார், பாலைக்கௌதமனார், காப்பியாற்றுக் காப்பியனார், பரணர், காக்கைப்பாடினியார், கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்க்கிழார் ஆகியோர் பாடல்களில் இடம்பெறும் சொற்களின் வருகை ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன.

### பதிற்றுப்பத்து சொற்களின் வருகை – புலவர்கள்

### அட்டவணை 2.4

புலவர்கள் அடிப்படையில் சொற்களின் வருகை இங்கு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன

| வ. எண் | சொல் வகைகள் | குமட்டூர் | கௌதம் | காப்பியார் | பரணர் | காக்கை | கபிலர் | அரிசில் | பெருங்குன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 611 | 673 | 456 | 556 | 492 | 540 | 443 | 570 |
| 2 | சுட்டு | 8 | 7 | 3 | 8 | 6 | 2 | 4 | 1 |
| 3 | ப.பெ | 10 | 7 | 11 | 11 | 7 | 8 | 7 | 10 |
| 4 | வி.ப.பெ | 6 | 12 | 1 | 9 | 3 | 2 | 0 | 0 |
| 5 | வி.பெ | 0 | 0 | 6 | 0 | 2 | 0 | 3 | 1 |
| 6 | விளி | 19 | 19 | 22 | 15 | 15 | 16 | 12 | 32 |
| 7 | தொ.பெ | 16 | 18 | 7 | 19 | 19 | 13 | 18 | 20 |
| 8 | வி.அ.பெ | 16 | 5 | 15 | 10 | 22 | 21 | 34 | 20 |
| 9 | பெ.அ | 84 | 97 | 59 | 84 | 83 | 75 | 66 | 102 |
| 10 | பெ.எ | 96 | 102 | 60 | 75 | 74 | 93 | 50 | 77 |
| 11 | எ.ம.பெ.எ | 11 | 19 | 13 | 17 | 14 | 13 | 12 | 21 |
| 12 | வினை | 89 | 89 | 82 | 111 | 74 | 82 | 61 | 60 |
| 13 | வி.அ | 8 | 14 | 4 | 6 | 9 | 4 | 6 | 6 |
| 14 | வி.மு | 28 | 19 | 18 | 10 | 35 | 27 | 30 | 19 |
| 15 | கு.வி.மு | 10 | 9 | 3 | 12 | 16 | 9 | 9 | 14 |
| 16 | எ.ம.வி.மு | 0 | 3 | 0 | 1 | 1 | 0 | 0 | 0 |
| 17 | வி.எ | 93 | 72 | 67 | 86 | 53 | 59 | 68 | 99 |
| 18 | எ.ம.வி.எ | 8 | 9 | 1 | 10 | 7 | 2 | 5 | 7 |
| 19 | கு.வி | 0 | 0 | 0 | 4 | 1 | 0 | 2 | 0 |
| 20 | வி.தொ | 11 | 4 | 3 | 8 | 4 | 1 | 2 | 4 |
| 21 | திரிபு | 9 | 10 | 15 | 10 | 18 | 9 | 20 | 17 |
| 22 | வியங் | 6 | 2 | 4 | 6 | 6 | 2 | 3 | 8 |
| 23 | நி.எ | 8 | 7 | 1 | 2 | 6 | 6 | 3 | 2 |
| 24 | சொ.உ | 0 | 1 | 0 | 0 | 2 | 3 | 3 | 2 |
| 25 | ஏவல் | 6 | 0 | 0 | 1 | 2 | 0 | 0 | 3 |
| 26 | கு.எ | 34 | 41 | 48 | 47 | 37 | 36 | 28 | 60 |
| 27 | அ.தொ | 3 | 1 | 1 | 1 | 0 | 0 | 1 | 4 |
| 28 | ஒ.கு | 1 | 2 | 1 | 0 | 1 | 1 | 1 | 0 |
| 29 | இ.சொ | 178 | 173 | 125 | 140 | 126 | 142 | 158 | 166 |
| 30 | உ.சொ | 2 | 4 | 0 | 1 | 2 | 0 | 0 | 6 |
| 31 | இ.இ.சொ | 0 | 0 | 1 | 0 | 0 | 2 | 0 | 0 |

பாலைக்கௌதமனார் பாடல்களில் பெயர்ச்சொற்கள் அதிகமாக இடம்பெறுகின்றன. அரிசில்கிழார் பாடல்களில் பெயர்ச்சொற்கள் குறைவாக அமைந்துள்ளன. சுட்டுப்பெயர்கள் குமட்டூர்க்கண்ணனார் பரணர் பாடல்களில் ஒத்ததன்மையையும் மற்ற புலவர்களிடையே மாறுபட்ட தன்மையையும் கொண்டுள்ளது. விளிப்பெயர்கள் பெருங்குன்றூர்கிழார் பாடல்களில் மிகுதியாகவும் அரிசில்கிழார் பாடல்களில் குறைவாகவும் ஆளப்பட்டுள்ளன. தொழிற்பெயர் பெருங்குன்றூர்க்கிழார் பாடல்களில் மிகுதியாக இடம்பெறுகின்றன.

அரிசில்கிழார் வினையாலணையும் பெயரை மிகுதியாகவும் பாலைக்கௌதமனார் மிகக்குறைவாகவும் கையாண்டுள்ளார். பெருங்குன்றூர்க்கிழார்பாடல்களில் பெயரடைகள் மிகுதி. பாலைக்கௌதமனார் பாடல்களில் பெயரெச்சங்கள் அதிகமாக இடம்பெறுகின்றன. எதிர்மறைப் பெயரெச்சங்கள் எட்டு புலவர்களிடையேயும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மையில் அமைந்துள்ளன. பரணர் பாடல்களில் வினைச்சொற்களின் வருகை மிகுதி. குமட்டூர்க்கண்ணனார் பாலைக்கௌதமனார் பாடல்களில் வினைச்சொற்கள் சமஅளவில் ஆளப்பட்டுள்ளன. பெருங்குன்றூர்க்கிழார் பாடல்களின் வினைச்சொற்களின் வருகை மிகக் குறைவு. பாலைக்கௌதமனார் வினையடைகளை மிகுதியாகவும் பரணர் அரிசில்கிழார் பெருங்குன்றூர்க்கிழார் ஒத்த நிலையிலும் பயன்படுத்தியுள்ளனர்.

வினைமுற்றுகள் காக்கைப் பாடினியார் பாடல்களில் மிகுதியாகவும்,பரணர் பாடல்களில் மிக குறைவாகவும் அமைந்துள்ளன. குறிப்பு வினைமுற்றுகள் காக்கைப் பாடினியார் பாடல்களில் அதிகமாகவும் காப்பியாற்றுக் காப்பியனார் பாடல்களில் குறைவாகவும் இடம்பெறுகின்றன. வினையெச்சங்கள் பெருங்குன்றூர்க்கிழார் பாடல்களில் மிகுதியாகவும் மற்ற புலவர்களிடையே மாறுபட்ட போக்கும் காணப்படுகின்றது. பரணர் பாடல்களில் எதிர்மறைப் பெயரெச்சங்கள் மிகுதியாகவும் காக்கைப்பாடினியார் பெருங்குன்றூர்க்கிழார் பாடல்களில் சமநிலையிலும் ஆளப்பட்டுள்ளன. வினைத்தொகைகள் பாலைக்கௌதமனார் பாடல்களில் மிகுதி. கபிலர்பாடல்களில் மிக குறைவு. நிபந்தனையெச்சங்கள் குமட்டூர்க்கண்ணனார் பாடல்களில் அதிகமாகவும் காக்கைப்பாடினியார் கபிலர் பாடல்களில் சமஅளவிலும் காணப்படுகின்றன.

குறையெச்சங்களின் பயன்பாடு புலவர்களிடையே முரண்பட்ட தன்மையினை வெளிப்படுத்துகின்றது. அடுக்குத்தொடர் பெருங்குன்றூர்க்கிழார் பாடல்களில் அதிகம். இடைச்சொற்கள் குமட்டூர்க்கண்ணனார் பாலைக்கௌதமனார் பாடல்களில் சற்றொத்த நிலையிலும் பிற புலவர்களிடையே மாறுபட்ட போக்கையும் காணமுடிகின்றது.

பெருங்குன்றூர்க்கிழார் பெயரடைகளை மிகுதியாகக் கையாண்டுள்ளார். குறிப்பாக பல், நல் என்ற பெயரடைகளை அதிகம் ஆண்டுள்ளார். அரசனின் வேல்படைகளையும், கேடகங்களையும், கொடிகளையும் சிறப்பித்துக் கூறுவதற்காக 'பல்' என்ற பெயரடையையும் வேந்தனின் புகழினையும், அரண்மனைகளையும், யானைகளையும் குறிப்பிடுவதற்கு 'நல்' என்ற பெயரடையையும் புலவர் பயன்படுத்தியிருக்கிறார் என்பதை அறியமுடிகின்றது.

ஆய்வுக்குட்படுத்தப்பட்ட 31 சொல்வகைகள் மட்டுமின்றி, சொற்களின் வருகை ஒருபொருட்பன்மொழிகளாகவும், திருப்புரைச் சொற்களாகவும், அடைகளாகவும் ஆளப்பட்டுள்ள பாங்கினை எடுத்துக்காட்டுவதாகவும் இவ்வியல் அமைகிறது.

**ஒருபொருட்பன்மொழிகள்**

பதிற்றுப்பத்தில் அயிரை, கடல், மகளிர், புலம், யானை போன்ற சொற்கள் ஒருபொருட்பன்மொழிகளாக ஆளப்பட்டுள்ளன. அவை இங்கு ஆராயப்படுகின்றன.

**அயிரை**

''அயிரை'' என்னும் சொல் மலை, ஒரு வகை மீன், கொற்றவை என்ற முப்பொருட்களில் வருகின்றன.

மலை - (பதி. 21-29, 70-26, 79-18, 90-19)

ஒரு வகை மீன் - (பதி. 29-4)

கொற்றவை - (பதி. 88-12)

**கடல்**

பதிற்றுப்பத்தில் ‘‘கடல்’’ எனும் சொல்

முந்நீர் - (பதி. 20-2, 31-21, 90-16)

பௌவம் - (பதி. 42-21, 46-11, 51-16, 55-3)

பெருங்கடல் - (பதி. 11-3, 14-19, 17-4, 22-6)

‘‘கடல்’’ என்னும் ஒரு சொல்லுக்கு மூன்று சொற்களும் ஒருபொருட்பன்மொழிகளாக அமைகின்றன. இவற்றில் முந்நீர், பெருங்கடல் என்னும் சொற்கள் அடைகளைப் பெற்று வருகின்றன.

**மகளிர்**

பதிற்றுப்பத்தில் ‘‘மகளிர்’’ எனும் சொல்

இல்மகளிர் - (பதி. 12-23)

எல்வலை மகளிர் - (பதி. 27-6)

ஒண்நுதல் மகளிர் - (பதி. 30-28)

விசும்பு வழங்கு மகளிர் - (பதி. 31-27)

மெல்லியல் மகளிர் - (பதி. 78-5)

குற்றமற்ற மகளிர், வளையலணிந்த மகளிர், ஒளிபொருந்திய நெற்றியை உடைய மகளிர், தெய்வ மகளிர், மென்மையான இயல்புடைய மகளிர் என்று அடைக்கொடுத்தும், உருவகப்படுத்தியும் ஒருபொருட் பன்மொழியில் ‘‘மகளிர்’’ என்னும் சொல் அமைந்திருக்கின்றது.

**புலம்**

‘‘புலம்’’ என்னும் சொல் இடம், நிலம், நாடு என்னும் மூன்று பொருட்களில் வருகின்றன.

இடம் - (பதி. 13-26, 15-13, 28-11, 51-3, 52-2, 61-10, 67-7, 84-9)

நிலம் - (பதி. 21-21, 23-3, 25-3, 26-1, 26-2, 54-12)

நாடு - (பதி. 15-1, 32-11, 33-6, 44-12, 53-1, 62-13, 68-2, 71-18, 81-18)

**யானை**

“யானை” எனும் சொல் களிறு, பிடி, வேழம், மா, அரசுவா என்னும் பொருள்களில் வருகின்றன. ஆனால் அவை பொருள் வேறுபாடுடையதாக அமைகின்றது.

| | | |
|---|---|---|
| களிறு | - | (பதி. 11-6) |
| பிடி | - | (பதி. 12-13, 43-22, 82-6) |
| யானை | - | (பதி. 11-18, 68-9) |
| வேழம் | - | (பதி. 30-11) |
| மா | - | (பதி. 43-4) |
| அரசுவா | - | (பதி. 79-13) |

இந்த ஆறு சொற்களும் பொதுவாக யானையைக் குறிக்க பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் “பிடி” என்னும் சொல் பெண்யானையையும்,“அரசுவா” எனும் சொல் பட்டத்து யானையையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகின்றன.

**திருப்புரைச்சொற்கள்**

பதிற்றுப்பத்தில் மொத்தம் 19 இடங்களில் அடுத்தடுத்த அடிகளில் திருப்புரைச் சொற்கள் இடம்பெற்று வருகின்றன.

இவற்றில் முதல் சீரில் இரண்டு இடங்களில் வந்துள்ளன. அவை

**1.வயிறு,** பசி கூர ஈயவன் (பதி. 20-26)
**வயிறு** மாசு இலீயர், அவன் ஈன்ற தாயே! (பதி. 20-27)

**2.படு** பிணம் பிறங்க பாழ் பல செய்து (பதி. 49-13)
**படு** கண் முரசம் நடுவண் சிலைய் (பதி. 49-14)

இரண்டாவது சீரில் அமையும் திருப்புரைச் சொற்களாகப் பதிற்றுப்பத்தில் 11 இடங்களில் இடம்பெறுகின்றன. அவற்றில் சிலவற்றை இங்கு குறிப்பிட காண்போம்.

1. உளைப் **பொலிந்த** மா (பதி. 22-17)

இழைப் **பொலிந்த** களிறு (பதி. 22-18)

2. வணர் **அமை** நல் யாழ் இளையர் பொறுப்ப, (பதி. 41-2)

பண் **அமை** முதவும் பதயையும், பிறவும், (பதி. 41-3)

1).படு (பதி.46-4,5), 2).இதழ் (பதி.52-18,19), 3).ஊன் (பதி.55-7,8), 4).வினை (பதி. 60-1,2), 5).அன்ன (பதி.61-3,4,5), 6).கொண்டு (பதி.71-23,24), 7).பரந்தன்ன (பதி.78-13,14), 8).போற்றலையே (பதி.79-1,2), 9).அன்ன (பதி.88-28,29)

- **மூன்றாவது சீரில் அடுத்தடுத்த அடிகளில் ஒரே மாதிரியாக அமையும் திருப்புரைச் சொற்கள் இடம் பெறாத நிலையினை இங்கு அறிய முடிகின்றது.**

நான்காவது சீரில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் **ஒரே ஒரு** இடத்தில் மட்டும் இடம்பெறுவதைக் காணமுடிகின்றது.

1.உலகம் புரக்கும் உரு **கெழு** சிறப்பின், (பதி. 81-1)

வண்ணக் கருவிய, வளம் **கெழு,** கமஞ் சூல் (பதி. 81-2)

அடுத்தடுத்த அடியில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள் மீதம் **5** உள்ளன. இவை ஒரே சீரில் அமையாமல் சீர் பிறழ்ந்து வரும் தன்மையை காணமுடிகின்றது.

1. எயில் முகம் சிதையத் **தோட்டி** ஏவலின், (பதி. 38-5)

**தோட்டி** தந்த தொடி மருப்பு யானை (பதி. 38-6)

2.கொல் **பிணி** திருகிய மார்பு கவர் முயக்கத்து (பதி. 50-20)

பொழுது கொள் மரபின் மென் **பிணி** அவிழ, (பதி. 50-21)

3. ஈத்தது இரங்கான்;**ஈத்தொறும்** மகிழான் (பதி. 61-12)

**ஈத்தொறும்** மா வள்ளியன் என நுவலும் என் (பதி. 61-13)

4.கால் கிளர்த்தன்ன கதழ் **பரிப்** புரவிக் (பதி. 80-13)

கடும் **பரி** நெடுந் தேர் மீமிசை நுடங்கு கொடி (பதி. 80-14)

5.அளப்பு அருமையின், இரு விசும்பு **அனையை;** (பதி. 90-15)

கொளக் குறைபடாமையின், முந்நீர் **அனையை;** (பதி. 90-16)

பதிற்றுப்பத்தில் அடுத்தடுத்த அடியில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் முதல் சீரிலும், இரண்டாவது சீரிலும், சீர்கள் மாறி மாறி அடுத்தடுத்து இடம்பெறும் தன்மையினை அறியமுடிகின்றது. ஆனால் மூன்றாம் சீரில் திருப்புரைச் சொற்கள் ஒன்றிவரும் தன்மை காணப்படவில்லை.

**ஒரே பாடலில் பரவி வரும் திருப்புரைச் சொற்கள்**

ஒரே பாடலில் ஒரு சொல் பலமுறை பயன்படுத்தப்பட்டிருக்கும் தன்மையினைப் பதிற்றுப்பத்தில் அறிய முடிகின்றது.இத்திருப்புரைச் சொற்கள் பாடல்களில் தானாகவே அமையும் வகையில் வந்திருக்கின்றனவேதவிர,திட்டமிட்டு எழுதப்பட்டவையாகத்தோன்றவில்லை.

பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்களாகப் பதிற்றுப்பத்தில் 44 இடங்களில் அமைந்துள்ளன. ஒரு சொல் இரண்டு அல்லது மூன்று நான்கு இடங்களில் மட்டும் இடம்பெற்றிருக்கின்றன. ஐந்து இடங்களில் இடம் பெறாத நிலையும், அதற்கு மேலும் இடம்பெறாத நிலையையும் அறிய முடிகின்றது.

ஒரு பாடல் முழுவதும் இரண்டு இடங்களில் மட்டுமே வரும் திருப்புரைச் சொற்களாக 33 சொற்கள் காணப்படுகின்றன. அவை,

1.கலிகெழு துணங்கை ஆடிய **மருங்கின்** (பதி. 13-5)

2.அழல் சென்ற **மருங்கின்** வெள்ளி ஓடாது (பதி. 13-25)

3).வைப்பின் (பதி.15-8,13),4).ஆவுதி (பதி. 21-7,13),5).கண்ணி (பதி.21-20,24),6).பயன் (பதி.22-6-33),7).பிணி (பதி.22-10,12),8).மலி (பதி. 23-8,19),9).கை (பதி.29-2,6),10).மகளிர் (பதி.29-2,6),11).கெழு (பதி.30-1,3), 12).என (பதி.38-14,16), 13).நின் பதி.39-2,17), 14).என (பதி.39-1,6), 15).இளையர் (பதி.41-2,6), 16).படு (பதி.41-22,24), 17).கெழு (பதி.50-4,26),

18).என (பதி.51-2,23), 19).நின் (பதி.53-4,12),20).நின் (பதி.55-2,21),21).வெண் (பதி.55-7,15), 22).நின் (பதி.61-13,18), 23).நின் (பதி.64-14,20), 24).நின் (பதி.65-12,16), 25).இலங்கு (பதி.66-12,19), 26).தெரிந்த (பதி.69-6,8), 27).நின் (பதி.69-11,17), 28).நின் (பதி.71-8,24), 29).என (பதி.73-19,21),30).நின் (பதி.74-23,28),31).அமைந்த (பதி.81-16,19), 32).நின் (பதி.81-17,37), 33.நின் (பதி.84-13,19).

ஒரு பாடலில் மூன்று இடங்களில் மட்டுமே இடம் பெறும் திருப்புரைச் சொற்களாக 8 இடங்களில் அமையப்பெறுகின்றன. அவை,

1. வாழ்க,**நின்** வளனே நின்னுடை வாழ்க்கை, (பதி. 37-1)

வாய்மொழி வாயர் **நின்** புகழ் ஏத்த! (பதி. 37-2)

தொல் நிலைச் சிறப்பின் **நின்** நிழல் வாழ்நர்க்குக் (பதி. 37-10)

2. பார்ப்பவர்க்கு அல்லது பணிவு **அறியலையே** (பதி. 63-1)

மகளிர்க்கு அல்லது மலர்ப்பு **அறியலையே** (பதி. 63-5)

கிளந்த சொல் நீ பொய்ப்பு **அறியலையே** (பதி. 63-7)

3).அல்லது (பதி. 63-1,3,5),4).நீ (பதி. 52-15,23,25),5).அன்ன (பதி. 61-3,4,5) 6).நின் (பதி. 72-3,6,16),7).நின் (பதி. 74-4,23-20),8).நல் (பதி.90-45,49,57)

ஒரு பாடல் முழுவதும் நான்கு இடங்களில் இடம்பெறும் திருப்புரைச் சொற்களாக பதிற்றுப்பத்தில் மூன்று இடங்களில் மட்டுமே வருகின்றன. அவை,

1.வலம் **படு** குழூஉ நிலை அதிர மண்டி, (பதி. 49-9)

நிறம் **படு** குருதி நிலம் படர்ந்து ஓடி, (பதி. 49-11)

**படு** பிணம் பிறங்க, பாழ் பல செய்து, (பதி. 49-13)

**படு** கண் முரசம் நடுவண் சிலைப்ப, (பதி. 49-14)

2.உரு **கெழு** மரபின் அயிரை பரைஇ, (பதி. 88-12)

வியல் உளை அரிமான் மறம் **கெழு** குருசில்! (பதி. 88-15)

ஓவத்து அன்ன உரு**கெழு** நெடுநகர், (பதி. 88-28)

உரு **கெழு** கருவிய பெருமழை சேர்ந்து, (பதி. 88-33)

3. நின் நாள் திங்கள் அனைய **ஆக!** திங்கள் (பதி. 90-51)

யாண்டு ஓரனைய **ஆக!** யாண்டே (பதி. 90-52)

ஊழி அனைய **ஆக!** ஊழி (பதி. 90-53)

வெள்ள பரப்பின் **ஆக!** என உள்ளி (பதி. 90-54)

பாடலில் திருப்புரைச் சொற்களைப் புலவர்கள் பயன்படுத்துவதன் காரணம் பாடலைப் படிப்பவர்கள் எளிதில் மனதில் வைத்துக் கொள்ளவே பாடலின் அடிகளுக்கு ஏற்றவாறு திருப்புரைச் சொற்களைப் புலவர்கள் பயன்படுத்தி இருப்பதை நாம் அறிய முடிகின்றது. இத்திருப்புரைச் சொற்களைக் கவிஞர்கள் திட்டமிட்டுத் தன் கவிதை மொழி நடையில் ஆளாமல் ஒரு ஆற்றொழுக்கைப் போல தானாகவே அமைந்திருக்கும் தன்மையும் இங்கு வெளிப்படுத்தப்படுகின்றது. இத்திருப்புரைச் சொற்கள் புலவர்களின் மொழி ஆளுமைத் தன்மைகளுக்கேற்ப அமைத்திருப்பதையும் அறிய முடிகின்றது.

பாடல் முழுவதும் பரவிவரும் திருப்புரைச் சொற்களில் ‘நின்’ என்ற திருப்புரைச் சொல் 3-ஆம் பத்து, 5-ஆம் பத்து, 6-ஆம் பத்து, 7-ஆம் பத்து, 8-ஆம் பத்து ஆகிய பத்துக்களில் இத்திருப்புரைச் சொற்கள் பரவி வருகின்றன. இவற்றில் ஆறாம் பத்தைப் பாடிய காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் ‘நின்’ என்ற திருப்புரைச் சொல்லை ஆறாம் பத்தில் நான்கு இடங்களில் பயன்படுத்தியிருக்கிறார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. மற்ற புலவர்கள்,‘நின்’ என்ற சொல்லை இரண்டு, மூன்று இடங்களில் மட்டும் ஆண்டுள்ளனர். 3, 5, 7, 8-ஆம் பத்தைப் பாடிய புலவர்கள் ஆண்பாற் புலவர்கள், 6-ஆம் பத்தை பாடிய புலவர் பெண்பாற் புலவர், ஆண்பாற் புலவர்களைவிட மிகுதியாக ‘நின்’ என்ற திருப்புரைச் சொல்லைக் கையாண்டுள்ளனர் என்பது அவரின் மொழி

ஆளுமையின் தனித்தன்மையை வெளிப்படுத்துகின்றது. ஆண்பாற் புலவர்களினின்று பெண்பாற் புலவர்களின் மொழிப்பாங்கு இங்கு தனித்து காணப்படுகிறது.

### அடைகள்

பதிற்றுப்பத்தில் இடம்பெறும் ஒரு சீர் அடைகள், ஓரடிக்குள் இடம்பெறும் அடைகள் சில எடுத்துகாட்டப்படுகின்றன. மற்றும் அடைக்கு முன் பின் அமையும் வாய்பாடுவகைகள் இங்கு ஆராயப்படுகின்றன.

### ஒரு சீருள் இடம் பெறும் அடைகள்

**செவ்**வாய் (பதி. 11-7)

**இருங்**கழி (பதி. 11-9)

**பெருங்**கலி (பதி. 12-25)

**கடுஞ்**சினம் (பதி. 16-7)

**தண்**இயல் (பதி. 18-10)

### ஓரடிக்குள் இடம் பெறும் அடைகள்

**நோன்**புரித் **தடக்கைச்** சான்றோர் மெய்ம்மறை! (பதி. 14-12)

**வெண்பூ** வேளையொடு **பைஞ்சுரை** கலித்து, (பதி. 15-9)

வளம்பல நிகழ்தரு **நனந்**தலை **நல்**நாட்டு (பதி. 15-17)

**கடுங்**கால் கொட்கும் **நன்** பெரும் பரப்பின் (பதி. 17-13)

கொண்டல் **தண்** தளிக் **கமஞ்** சூல் **மா** மழை (பதி. 24-28)

### ஓரடிக்குள் அதிகமான சீர்களில் இடம்பெறும் அடைகள்

மாற்று **அருஞ்** சீற்றத்து **மா இருங்** கூற்றம் (பதி. 51-35)

**வெண்** தோட்டு அசைத்த **ஒண் பூங்** குவளையர் (பதி. 58-2)

மலர்ந்த மார்பின்,**மா வண்** பாரி (பதி. 61-8)

மழை என மருளும் **மா இரும்பல்** தோல் (பதி. 62-2)

**பெருங்** களிற்று யானையோடு **அருங்**கலம் தராஅர் (பதி. 71-21)

**பெயரடைகளுக்கு முன்னும் பின்னும் அமையும் சொல் வகைகள்**

பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தை இயற்றியவர் பரணர். இவர் பாடல்களில் பெயரடைகளுக்கு முன்னும் (இடது), பின்னும் (வலது) அமையும் சொல்வகைகளை ஆராயும் பொழுது நான்கு வகையான வாய்பாடுகள் மிகுதியான நிகழ்வெண்ணிக்கையைப் பெற்றுள்ளன. அவ்வாய்பாடு வகைகளும் அவற்றின் நிகழ்வெண்ணிக்கையும் பின்வருமாறு அமைகின்றன.

| வாய்பாடு | நிகழ்வெண்ணிக்கை |
|---|---|
| 1. பெ-பெ.அ-பெ | 29 |
| 2. 0-பெ.அ-பெ | 24 |
| 3. வி-பெ.அ-பெ | 13 |
| 4. பெ.எ-பெ.அ-பெ | 4 |

பரணர் பாடலில் இந்நான்கு வகையான வாய்பாடுகள் மிகுதியாக இடம்பெறுகின்றன. “0” என்பது சொற்கள் எதுவும் இடம்பெறாத சூழலைச் சுட்டுகின்றது. இங்கு தொடரின் முதல் சொல்லாக பெயர் அமைகிறது. பெயரடைக்கு முன் அமையும் சொல் வகைகளாக பெயர், வினை, பெயரெச்சம் என்ற சொல்வகைகளும், பெயரடைகளுக்கு பின் அமையும் சொல் வகையாக இந்த நான்கு வாய்பாடுகளிலும் பெயர்ச்சொல்லே இடம்பெறுகின்றன.

பதிற்றுப்பத்தில் பெயர்ச்சொற்கள், இடைச்சொற்கள், பெயரடைகள், பெயரெச்சங்கள் இவற்றின் வருகை மிகுதியாக இடம்பெறுகின்றன. திணைகளை ஒப்பிடும்போது சொற்களின் பயன்பாடு குறைவாக ஆளப்பட்டுள்ளன. ஒருபொருட்பன்மொழிகள்,திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றவற்றில் திருப்புரைச் சொற்களும், அடைகளும் மிகுதியாகக் காணப்படுகின்றன.

பதிற்றுப்பத்தில் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட 31 சொல் வகைகளின் நிகழ்வெண்ணிக்கை வரைபடங்களாக மாற்றப்பட்டு விளக்கப்படுகின்றன.

பதிற்றுப்பத்து - நூல்

பெயர் சுட்டு ப.பெ வி.ப.பெ வி.பெ விளி தொ.பெ வி.அ.பெ
பெ.அ பெ.எ எ.ம.பெ.எ வினை வி.அ வி.மு கு.வி.மு எ.ம.வி.மு
வி.எ எ.ம.வி.எ கு.வி வி.தொ திரிபு வியங் நி.எ சொ.உ
ஏவல் கு.எ அ.தொ ஒ.கு இ.சொ உ.சொ இ.இ.சொ


பாடாண் திணை
45%
12%
7%
6%
6%
6%
3%
2%
1%
0%
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ


வாகைத் திணை
41%
13%
7%
7%
6%
6%
5%
2%
1%
0%

## தும்பைத் திணை







## பதிற்றுப்பத்து - திணைகள்




செந்துறைப் பாடாண்பாட்டு
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
51%
10%
8%
8%
7%
2%
2%
2%
1%
0%

## வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு







## பதிற்றுப்பத்து - துறைகள்







குமட்டூர்க் கண்ணனார்
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
45%
13%
7%
7%
6%
6%
2%
2%
1%
0%


பாலைக்கௌதமனார்
47%
12%
7%
7%
6%
5%
3%
1%
0%

## காப்பியாற்றுக் காப்பியனார்







## பரணர்



## காக்கைப்பாடினியார்







## கபிலர்



அரிசில்கிழார்







பெருங்குன்றூர்க்கிழார்






**விகிதப் பகிர்வு - விளக்கம்**

பதிற்றுப்பத்தில் பெயர்ச்சொல் 44%, இடைச்சொற்கள் 12% என்ற விகிதங்களில் இடம்பெறுகின்றன. பெயரடை, வினைச்சொற்களின் விகிதம் 7% என்ற அடிப்படையில் ஒத்தத்தன்மையில் அமைந்துள்ளன. பெயரெச்சம், வினையெச்சம் 6% என்ற அடிப்படையில் சமநிலையில் அமைந்துள்ளன. வினையாலணையும் பெயர் விளிப்பெயர் ஒத்த விகிதாச்சாரங்களைக் கொண்டுள்ளன. வினைமுற்று எதிர்மறை வினைமுற்று குறிப்பு வினைமுற்று முரண்பட்ட விகிதங்களில் அமைந்துள்ளன.

பதிற்றுப்பத்து திணைகளில் பெயர்ச்சொற்களின் விகிதம் பின்வருமாறு அமைந்திருக்கின்றன. பாடாண் திணை 45%, வாகைத்திணை 41%, தும்பைத்திணை 39% என்ற விகித அமைப்பில் மாறுபட்ட போக்கில் அமைந்துள்ளன. பெயரடை 6% பெயரெச்சம் 6%என்ற விகிதத்தில் பாடாண்திணையில் சமவிகிதத்தை எடுத்துக்காட்டுகின்றன. செந்துறைப் பாடாண்பாட்டுத் துறையில் 37 பாடல்கள் இடம்பெறுகின்றன. எனவே

இத்துறையில் சொற்களின் வருகை மிகுதியாக அமைந்துள்ளன. பிறதுறைகளில் பாடல்கள் குறைவாகக் காணப்படுகின்றன. செந்துறைப் பாடாண்பாட்டுத் துறையில் பெயர்ச்சொற்களின் விகிதம் 51%, வஞ்சித்துறைப் பாடாண்பாட்டுத் துறையில் 57% பெயர்ச்சொற்கள் ஆளப்பட்டுள்ளன. மேற்குறிப்பிட்டுள்ள இருதிணைகளிலும் வினைச்சொற்கள் 8% என்ற அடிப்படையில் சமப்போக்கில் அமைந்துள்ளன. பெயரெச்சம் செந்துறைப் பாடாண்பாட்டு மற்றும் வஞ்சித்துறைப் பாடாண் பாட்டில் 8% என்ற அடிப்படையில் சம பாங்கினை வெளிப்படுத்துகின்றன.

பதிற்றுப்பத்து புலவர்கள் பெயர்ச்சொற்களை ஆளும் போக்கில் ஏறக்குறைய சமவிகிதங்களின் போக்கு காணப்படுகின்றது. காப்பியாற்றுக் காப்பியனாரும் பரணரும் பெயர்ச்சொல்லை 44% என்ற சமவிகிதங்களில் பயன்படுத்தியுள்ளனர். பரணர் இடைச்சொற்களை 11% சதவிகிதமும் கபிலர் இடைச்சொற்களை 12% சதவிகிதமும் ஆண்டுள்ளனர். பதிற்றுப்பத்து பாடிய புலவர்களில் இடைச் சொற்களை மிகுதியாக அரிசில்கிழார் 15% பயன்படுத்தியுள்ளார். வினைச்சொற்கள் பரணர் பாடல்களில் 9% அமைந்துள்ளது. மற்ற புலவர்களின் பாடல்களில் குறைவாக இடம்பெறுகின்றன. பெயரடை மற்றும் பெயரெச்சங்களை எட்டு புலவர்களும் 6% முதல் 8% வரை கையாண்டுள்ளதை அறியமுடிகின்றது.

## இயல் - மூன்று

## புறநானூறு : சொற்களின் வருகையும் மொழி ஆளுமையும்

புறநானூற்றில் அமைந்துள்ள சொல் வகைகளின் வருகையை நூல், திணை, துறை, புலவர் அடிப்படையில் ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது. நூல், திணை, துறை, புலவர் போன்றவற்றின் அடிப்படையில் மொழிப் பயன்பாடு மாறுபடுவதற்கான களம் அமைகிறது. சொற்களின் வருகை எண் தரவுகளாக மாற்றப்பட்டு வரைப்படங்களாக விளக்கப்படுகிறது. மேலும் ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றவற்றின் வருகையையும் ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

### புறநானூறு நூல்

புறநானூறு 400 அகவற்பாக்களைக் கொண்டதாகும். கடவுள் வாழ்த்து பாரதம் பாடிய பெருந்தேவனரால் இயற்றப்பட்டதாகும். கடவுள் வாழ்த்து சிவனைப் பற்றியது. புறநானூற்றுச் செய்யுட்கள் முரஞ்சியூர் முடிநாகராயர் முதல் கோவூர்க்கிழார் இறுதியாகப் புலவர்கள் பலராலும் இயற்றப்பட்டதாகும். இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் இன்னாரென்று அறியமுடியவில்லை. இது புறப்பாட்டெனவும் புறமெனவும் அழைக்கப்படுகின்றது. இந்நூல் பொருள் அடிப்படையில் தொகுக்கப்பட்டதாகும். பொருள் என்பது அகம், புறம் இரண்டனுள் புறத்தைக் குறிப்பதாகும். அறன், பொருள் பற்றிப் புறத்தே நிகழும் ஒழுக்கத்தைப் புறமென்று குறிப்பிடுகின்றோம்.

இந்நூல் பண்டைக்கால தமிழ் மன்னர்களான சேர, சோழ, பாண்டியர்கள் மற்றும் சிற்றரசர், அமைச்சர், சேனைத் தலைவர், வீரர்கள் பலருடைய வெற்றியினையும் கடையெழு வள்ளல்களின் சரித்திரங்களும் இந்நூலின்கண் நமக்கு நன்கு புலப்படுகின்றன. இச்செய்யுட்களைப் பாடியவர்கள் ஒரு காலத்தைச் சார்ந்தவரோ, ஒரு குலத்தைச் சார்ந்தவரோ, ஓரிடத்தில் இருந்தவரும் அல்லர். இச்செய்யுட்களை இயற்றியவர்கள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் மற்றும் பெண்பாற்புலவர்களும் இதில் காணப்படுகின்றனர். இந்நூலில் காணப்படும் செய்யுள்களில் மூவேந்தர்களின் புகழ், கொடை, அவர்களது அடையாளப் பூ,

கொடி,தலைநகரம் போன்றவையும் பெண்களின் வீரம் உடன்கட்டை ஏறும் வழக்கம் முதலானவைகளும் குறிப்பிடப்படுகின்றன. புறநானூறு நான்கு பெருந்தெய்வங்களைச் சுட்டுகின்றது. அவை, சிவன், கண்ணன், பலதேவன், முருகன். போர் வேண்டாம் என்னும் நிலையாமைக் குறித்தும் நடுகல் வழிபாடு குறித்தும் செய்திகள் பலவற்றைப் புறநானூறு வெளிப்படுத்துகின்றது.

**புறநானூறு – திணைகள்**

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புறநானூற்றுத் திணைகள் சார்ந்த குறிப்புகள் சில பின்வருமாறு விவரிக்கப்படுகின்றன.

**பொதுவியல் திணை**

வெட்சி முதல் பாடாண் வரை உள்ள புறத்திணைகளில் கூறப்படாதவற்றைப் பொதுவாகக் கூறுவது பொதுவியல் திணை ஆகும். இவை அகத்திணைகளுக்கும் புறத்திணைகளுக்கும் பொதுவானதாகும். பொதுவியல் திணையில் புறநானூற்றில் 74 பாடல்கள் இடம் பெறுகின்றன.

போரில் விழுப்புண்பட்டு இறந்த வீரர்களின் மனைவியர் இரங்கல், நிலையாமை மற்றும் போரில் இறந்த வீரர்களுக்கு நடுகல் எடுத்து வழிபடுதல் போன்றவை பொதுவியல் திணையில் இடம்பெறுகின்றன. அறம் தத்துவம் போன்ற அறக்கருத்துகளும் பொதுவியல் திணையில் கூறப்படுகின்றன.

**கரந்தைத்திணை**

பகைவர்களால் கவர்ந்து செல்லப்பட்ட ஆக்களை மீட்டு வருதல் கரந்தையாகும். கரந்தை வெட்சியின் உட்துறையாக வகுக்கப்பட்டுள்ளது. புறநானூற்றில் கரந்தைத் திணைப் பாடல்களாக 9 பாடல்கள் அமைந்துள்ளன. போர் மலைதல் என்னும் துறையில் 1 பாடலும் கையறுநிலையில் 4 பாடல்களும் வேத்தியல் துறையில் 1 பாடலும் நெடுமொழி துறையில் 1 பாடலும் இடம்பெறுகின்றன.

கரந்தைப் பூச்சூடித் தங்கள் ஆனிரைகளை வெட்சி மறவர்கள் கவராதவாறு போர் தடுக்கும் துறைகள் பற்றிய செய்திகள் சில குறிப்பிடப்படுகின்றன. 1.கரந்தை அரவம், 2.அதிரிடைச் செலவு, 3.போர்

மலைதல், 4.புண்ணொடு வருதல், 5.போர்க்களத்தில் ஒழித்தல், 6.ஆளெறிப்பிள்ளை, 7.பிள்ளைத் தெளிவு, 8.பிள்ளையாட்டு,9.கையறுநிலை, 10.நெடுமொழி கூறல், 11.பிள்ளைப் பெயர்ச்சி, 12.வேத்தியன் மலிபு, 13.குடிநிலை ஆகியனவாகும்.

**வஞ்சித்திணை**

பகைவர் நிலத்தைக் கைப்பற்றுவது வஞ்சித்திணையாகும். மண் ஆசையினால் பிறநாட்டுப் பகுதிகளைத் தமதாக்கிக் கொள்வது. வஞ்சித்திணையின் குறிக்கோள் ''மண்நசை'' ஆகும். மண்ணாசையால் ஒரு வேந்தன் மற்றொரு வேந்தனை அஞ்சும்படி படையெடுத்து போர்செய்வதாகும். இருவரது மண்ணாசையே இப்போருக்குக் காரணமாக அமைகின்றது. வஞ்சித்திணைப் பாடல்களில் வென்றோர் விளக்கமும் தோற்றோர் தேய்வும் பாடப்படுகின்றன. வஞ்சி முல்லைத் திணைக்குப் புறமாகும்.

வஞ்சித்திணையில் நிலம் கவரும் போரின் நிகழ்வுகளாக 13 நிலைகள் குறிப்பிடப்படுகின்றன. 1.படையெடுத்துப் போகும் ஆரவாரம், 2.பகைவர் ஊர்களில் நெருப்புக் கொளுத்துதல், 3.வீரத்துடன் தோன்றும் பெருமை, 4.வீரர்களின் ஊக்கத்திற்கு நிலக்கொடை வழங்குதல், 5.பகைவர்களை வென்று அடக்கி அழித்த வெற்றி, 6.அரசனால் வீரர்கள் சிறப்புப் பட்டம் பெற்றுப் புகழ்ந்துபாடுதல், 7.பகைவர்களை அடக்கிய பேராண்மை, 8.வெள்ளத்தின் பெருக்கைத் தடுக்கும் பெருமை, 9.படைஞர்க்கு மிகுந்த உணவு அளிக்கும் பெருஞ்சோற்று நிலை, 10.வென்ற மன்னர் வெற்றியை ஒளிவீசிக் கொண்டாடுதல், 11.தோற்ற மன்னர் ஒலியிழந்த நிலை,12.வெற்றியைக் கொண்டாடும் வள்ளைப்பாட்டு, 13.புண்பட்ட வீரர்களைத் தழுவிக் காக்கும் தழிஞ்சி.

புறநானூற்றில் 11 பாடல்கள் வஞ்சித்திணையைச் சார்ந்தவையாகும். 4 பாடல்கள் கொற்றவள்ளை துறையையும் 1 பாடல் மழபுலவஞ்சித் துறையையும் 6 பாடல்கள் துணை வஞ்சித்துறையையும் 1 பாடல் பெருஞ்சோற்று நிலை துறையிலும் அமைந்துள்ளன.

### காஞ்சித்திணை

காஞ்சி என்பது நிலையாமையைக் குறிப்பதாகும். உலகில் நிலையாமைமிகுதி என்பதை காஞ்சி புலப்படுத்துகின்றது. காஞ்சி இம்மை வாழ்வில் நிலையாமையையும் இவ்வுலகத்தில் அழிவையும் குறிப்பதாக அமைகிறது. போர் மற்றும் பிறவற்றின் காரணமாக இறந்தவருக்கு இரங்கும் வகையில் அமையும் கையறுநிலைப் பாடல்கள் காஞ்சித்திணையில் இடம்பெறுகின்றன. இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை என்று நிலையாமைப் பற்றி இளம்பூரணர் குறிப்பிடுகின்றார். புறநானூற்றில் காஞ்சித் திணைப் பாடல்களாக 31 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. காஞ்சித்திணை பெருந்திணைக்குப் புறனாக அமைகிறது.

நிலையாமை பற்றிய காஞ்சித்திணையின் உட்கூறாக அமையும் பிரிவுகளைப்பின்வருமாறு குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். 1.கூற்றுவனின் கொடுமையைக் கூறும் வகையில் அமையும் பெருங்காஞ்சி, 2. முதிய வீரர்கள் மற்ற வீரர்களுக்குக் கூறும் அறிவுரை முதுகாஞ்சி, 3.மறப்பண்புகளுடன் புண் கிழித்துச் சாவது மறக்காஞ்சி, 4.பாதுகாப்பற்றுக் கிடக்கும் வீரனைப் போர்க்களத்தில் பாதுகாப்பது பேய்க்காஞ்சி, 5.வீரனின் குணநலன்களைச் சொல்லி அவன் இறந்த பின் இரங்குவது மன்னைக் காஞ்சி, 6.போர் குறித்துச் சூளுரை கூறுவது வஞ்சினக் காஞ்சி, 7.புண்பட்டு கிடந்த போர் வீரனைப் பேய் தொடதவாறு காத்தது தொடாக்காஞ்சி, 8. இறந்த கணவனைச் சாகடித்த வேலினால் மனைவியும் தன் உயிரை மாய்த்துக் கொள்வது ஆஞ்சிக்காஞ்சி, 9.தன்னைப் பகைத்த அரசனுக்கு தன் மகளை மணம் முடித்து கொடுக்க மறுப்பது மகட்பாற்காஞ்சி, 10.போர்க்களத்தில் இறந்து கிடக்கும் தன் கணவனுடன் தன் மார்பையும் முகத்தையும் அணைத்தவாறு தலையோடு தலை மோதிச்சாவது.

### நொச்சித்திணை

பகை மன்னர்களிடமிருந்து மதிலைக் காக்க உள்ளிருந்து வெளியே இருக்கும் பகை மன்னர்களோடு நொச்சிப் பூ சூடிப் போரிடுவது நொச்சித்திணை ஆகும். நொச்சிப் பூவினைச் சிந்துவாரம் என்ற பெயரிலும் அழைப்பதுண்டு. தொல்காப்பியர் நொச்சியை உழிஞையின் உட்பிரிவாக

கருதுகின்றார். எயிலைப் பாதுகாத்தல் நொச்சி என்று குறிப்பிடப்படுகின்றது.

நொச்சித் திணையில் எட்டு துறைகள் இடம்பெறுகின்றன. அவை, 1.மறனுடை பாசி, 2.ஊர்ச்செரு, 3.செருவிடை வீழ்தல், 4.குதிரை மறம், 5.எயிற்போர், 6.எயில்தனை அழித்தல், 7.அழிபடை தாங்கல், 8.மகண்மறுத்து மொழிதல் ஆகியவையாகும். புறநானூற்று நொச்சித்திணையில் 6 பாடல்கள் இடம்பெறுகின்றன.

**புறநானூறு - துறைகள்**

புறநானூற்றுத் துறைகள் புறத்திணைச் செயல்பாடுகளையும், உணர்வு வெளிப்பாடுகளையும் கொண்டது. இவற்றின் அடிப்படையில் மொழி, பயன்பாடு மாறுபடுவதற்கான களம் அமைகிறது. எனவே துறை சார்ந்த சொற்களின் ஆளுமை இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

**கையறுநிலை**

வாட்பூசலில் இறந்தோனைப் பார்த்து, யாழ்ப்பாணர் அவள் பட்டத்தைச் சொல்லுவதாகும். இவ்வகையில் மறத்தலைவன் இறந்த பின், அவனுக்கு ஊர் மக்கள் நடுகல் எடுத்து வழிபடும் நிலையினை புறநானூற்றுப் பாடல்கள் உணர்த்துகின்றன.

**குதிரைமறம்**

பெரிய மதிலில் பாயும் குதிரையின் திறன் கூறுவது குதிரைமறம் ஆகும். இத்துறையிலமைந்த புறப்பாடல் சிற்றரசனின் குதிரை வீரமும், பேரரசனின் குதிரை பின்வாங்கலும் கூறுவதாகும்.

**குறுங்கலி**

குறுங்கலியாவது மடவாரை விரும்ப விகற்பித்த காதலைக் கெடச் சொல்லியது. இப்பொருளில் மன்னன் மடவார் துயர்களை வேண்டுமென கூறுவதாகப் புறப்பாடல்கள் அமைகின்றது.

**நெடுமொழி**

மன்னனுக்கு ஒரு வீரனின் மேம்பாட்டைக் கூறுவதாகும். நெடுமொழி பேசி, வீரர்களை மன்னன் ஊக்குவிப்பதாக இத்துறைப் பாடல்கள் அமைகின்றன.

**தாபத நிலை**

கணவன் இறந்ததைக் கேள்வியுற்று, அவனது மனைவி நோன்பு மேற்கொள்வதைக் கூறுவது தாபத நிலை ஆகும்.

**புறநானூறு - புலவர்கள்**

புறநானூற்றுப் புலவர்கள் பற்றிய சிறு குறிப்புகள் பின்வருமாறு விவரிக்கப்படுகின்றன.

**உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்**

இவர் சேரமான் அந்துவருஞ்சேரலிரும்பொறையால் ஆதரிக்கப்பெற்றவர். புறநானூற்றில் மட்டுமே இவர் பாடல்களைப் புனைந்துள்ளார். புறநானூற்றில் 13 பாடல்கள் இவருடையதாகும். ஆய் என்னும் வள்ளலின் கொடைச்சிறப்பும் வீரச்சிறப்பும் இவரது பாடல்களில் காணப்படுகின்றன.

**ஔவையார்**

புறம் பாடுவதில் மிகவும் புலமைப்பெற்றவர். அதியமான் நெடுமானஞ்சியின் குணங்களைப் பாராட்டிப் பாடிய பாடல்கள் பலவும் காணப்படுகின்றன. அகப்பாடல்கள் புறப்பாடல்கள் என்று மொத்தம் 59 பாடல்களை இயற்றியுள்ளார். பெண்பாற் புலவர்களில் ஔவையார் மட்டுமே மிகுதியான பாடல்களைப் பாடியுள்ளார். அகநானூற்றில் 4 பாடல்களும், புறநானூற்றில் 33 பாடல்களும் குறுந்தொகையில் 15 பாடல்களும் நற்றிணையில் 7 பாடல்களும் இவருடையதாகும்.

**மாங்குடி மருதனார்**

மாங்குடி மருதனார் எட்டுத்தொகையில் மொத்தம் 12 பாடல்களை இயற்றியுள்ளார். அகநானூற்றில் 1 பாடலும் புறநானூற்றில் 6 பாடல்களும்

நற்றிணையில் 2 பாடல்களும் குறுந்தொகையில் 3 பாடல்களும் இவர் இயற்றியதாகும்.

**மோசிகீரனார்**

மோசி என்பது ஓர் ஊர். இவரால் பாடப்பட்டோர் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை. வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே என்பது இவருடைய பாடல்களில் ஒன்று. இவர் மொத்தம் 9 பாடல்களை பாடியுள்ளார். அகநானூற்றில் 1 பாடலும் குறுந்தொகையில் 2 பாடல்களும் நற்றிணையில் 1 பாடலும் புறநானூற்றில் 5 பாடல்களும் இவருடையதாகும்.

**இடைக்காடனார்**

இடைக்காடு என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்பதால் இவரை இடைக்காடனார் என்று அழைக்கின்றனர். இவர் கபிலரின் தோழர். கவி பாடுவதில் மிகவும் ஆற்றல் பெற்றவர். இவர் பெரும்பொருளைச் சிறுகவியில் கூறும் இயல்புடையவர். சுருங்கச் சொல்வதில் மிகவும் விருப்பமுடையவர். இவருடைய பாடல்கள் பெரும்பான்மையாக முல்லைத்திணையிலும் சிறுபான்மையாக மருதத்திணையிலும் அமைந்துள்ளன.

**ஒக்கூர் மாசாத்தியார்**

இவர் ஒரு பெண்பால் புலவர் ஆவார். இவரின் செய்யுளில் மறக்குடிமகளின் வீரச்செயல் மிகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன. அகநானூற்றில் 3 பாடல்களும் குறுந்தொகையில் 5 பாடல்களும் புறநானூற்றில் 1 பாடலும் இவர் இயற்றியதாகும்.

**புறநானூறு : சொற்களின் வருகை**

புறநானூற்றில் அமைந்துள்ள 400 பாடல்களின் சொல் வருகையும் நூல் அடிப்படையில் இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

**புறநானூறு சொற்களின் வருகை**

**அட்டவணை 3.1**

புறநானூற்றில் ஆளப்பட்டுள்ள சொற்களின் வருகை இங்கு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன.

| வ.எண் | சொல் வகைகள் | நிகழ்வெண்ணிக்கை |
|---|---|---|
| 1 | பெயர் | 14436 |
| 2 | சுட்டு | 317 |
| 3 | ப.பெ | 658 |
| 4 | வி.ப.பெ | 9 |
| 5 | வி.பெ | 95 |
| 6 | விளி | 290 |
| 7 | தொ.பெ | 332 |
| 8 | வி.அ.பெ | 381 |
| 9 | பெ.அ | 1360 |
| 10 | பெ.எ | 2063 |
| 11 | எ.ம.பெ.எ | 254 |
| 12 | வினை | 852 |
| 13 | வி.அ | 130 |
| 14 | வி.மு | 976 |
| 15 | கு.வி.மு | 297 |
| 16 | எ.ம.வி.மு | 83 |
| 17 | வி.எ | 1785 |
| 18 | எ.ம.வி.எ | 118 |
| 19 | கு.வி | 95 |
| 20 | வி.தொ | 22 |
| 21 | திரிபு | 209 |
| 22 | வியங் | 136 |
| 23 | நி.எ | 137 |
| 24 | சொ.உ | 39 |
| 25 | ஏவல் | 41 |
| 26 | கு.எ | 301 |
| 27 | அ.தொ | 17 |
| 28 | ஒ.கு | 31 |
| 29 | இ.சொ | 4943 |
| 30 | உ.சொ | 77 |
| 31 | இ.இ.சொ | 34 |

மேற்காணும் அட்டவணை, ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட சொல் வகைகள் புறநானூற்றில் அமைந்துள்ள போக்கைச் சுட்டுகிறது.

புறநானூற்றில் 14,436 பெயர்ச்சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. 4,939 இடைச்சொற்கள் கையாளப்பட்டுள்ளன. பெயரெச்சங்கள் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. எதிர்மறைப் பெயரெச்சங்களின் வருகை மிக குறைவு. ஏவலும் சொல்லுருபும் ஏறக்குறைய ஒத்த அளவில் இடம்பெற்றுள்ளன. பெயரடைகள் அதிகமாகக் காணப்படுகின்றன. வினையடைகள் மிக குறைவான போக்கைக் கொண்டுள்ளன. வியங்கோளும் நிபந்தனை எச்சமும், ஒத்தபான்மையை வெளிப்படுத்துகின்றன. சுட்டுப்பெயரும் குறையெச்சமும் சற்றொத்த நிலையில் அமைந்துள்ளன. வினைமுற்றுகள் மிகுதியாகவும் குறிப்பு வினைமுற்றுகள் குறைவாகவும் இடம்பெறுகின்றன. தொழிற்பெயரும் வினையாலணையும் பெயரும் முரண்பட்ட பாங்கில் அமைந்துள்ளன. பதிலீட்டுப்பெயர்கள் மிகுதியாகவும், வினாப்பெயர்கள் குறைவாகவும் காணப்படுகின்றன. வினாப்பெயரும் குறைவினைகளும் சமஅளவில் ஆளப்பட்டுள்ளன. வினைச்சொற்கள் அதிகமாகவும் எதிர்மறை வினைமுற்றுகள் குறைவாகவும் இடம்பெறுகின்றன. வினையெச்சங்கள் மிகுதியாகவும் எதிர்மறை வினையெச்சங்கள் மிகக் குறைவாகவும் அமைந்துள்ளன.

புறநானூற்றில் 293 விளிப்பெயர்கள் இடம்பெறுகின்றன. அவற்றில் அண்மை விளி 202, சேய்மை விளி 91 ஆகும்.

**அண்மை விளிகள்**

பொருத (புறம். 2-11), பெரும (புறம். 2-12), கணவ (புறம். 3-6), மார்ப (புறம் 3-16), வளவ (புறம். 7-10), காவல (புறம். 17-8), இரவல (புறம். 48-7), பொறைய (புறம். 53-5), மாற (புறம். 56-20), பாண (புறம். 68-4), பேக (புறம். 143-6), குமண (புறம். 159-25), வெற்ப (புறம். 200-5), கிழவ (புறம். 201-18), வேட்டுவ (புறம்.205-9), செல்வ (புறம். 213-17), நாட (புறம். 236-5).

**சேய்மை விளிகள்**

கோவே (புறம். 17-40), வேந்தே (புறம். 18-12), வேலே (புறம்.21-13),பறம்பே (புறம்.109-1), குன்றே (புறம். 111-1), நாடே (புறம். 119-7),

மாவே (புறம்.146-11), நிலனே (புறம். 187-4), தலையே (புறம். 239-21), பண்பே (புறம். 245-7), கூற்றே (புறம். 255-4), தாயே (புறம். 270-6), மகனே (புறம்.366-6).

கோவே! வேந்தே! தாயே! பெண்டே போன்ற விளிப்பெயர்கள் புறநானூற்றில் ஆளப்பட்டுள்ளன. அனைவருக்கும் குறைவில்லாது கொடைகளை வழங்கும் குடநாட்டு மன்னனே! வளமுடைய பழைய ஊரில் அரசாளும் வலிமைமிக்க அரசனே! என்று வேந்தனை விளித்து போற்றும் பண்பு இங்கு வெளிப்படுகின்றது.

தாயே!, பெண்டே! என்று அரசனது தாயை விளித்து அவனது பெருமையைக்கூறும் வகையிலும் விளிப்பெயர்கள் புறநானூற்றில் அமைந்துள்ளன.

புறநானூற்றில் இடம்பெறும் வியங்கோள் வினைமுற்றுக்கள் இங்கு சில எடுத்துக்காட்டப்படுகின்றன.

மருக (புறம். 3-5), வாடுக (புறம். 6-21), செலியர் (புறம். 6-23), வாழிய (புறம். 9-8), செழிய (புறம். 18-27), பெறுக (புறம். 32-4), வாழ்க (புறம். 34-16), களைக (புறம். 42-8), உயர்க (புறம். 58-29), பொலிக (புறம். 62-19), தணிக (புறம்.70-4), பிரிக (புறம். 71-6), குழைக (புறம். 73-14), செல்க (புறம். 93-10) ஆழ்க(புறம்.132-2), போழ்க (புறம். 132-2), தூர்க (புறம். 132-3).

வாழ்க, களைக, பொலிக, தணிக, செல்லுக முதலிய வியங்கோள் வினைமுற்றுகள் புறநானூற்றில் இடம்பெறுகின்றன. பாணர்க்கு நீங்காத செல்வம் அளித்த எம் அரசன் வளவன் வாழ்க என்றும் வெற்றியை உடைய போர்க்களத்தில் அரசனது வேல்கள் உயர்ந்து விளங்க வேண்டும் என்றும் வெல்லும் போர் செழிக்க வேண்டும் என்றும் போர் குறித்தச் செய்திகளை வாழ்த்தியும் அரசனை வாழ்த்தியும், புறநானூற்றில் வியங்கோள் வினைமுற்றுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

புறநானூற்றில் இடம்பெறும் நிபந்தனையெச்சங்கள் இங்கு சில எடுத்துக் காட்டப்படுகின்றன.

ஆயின் (புறம். 13-1), பெறின் (புறம். 17-26), அறியின் (புறம். 20-5), உணின் (புறம். 20-14), எனின் (புறம். 57-4), வரின் (புறம். 111-4), வினவின் (புறம். 212-1), எண்ணின் (புறம். 302-9), முனையின்(புறம்.381-1).

புறநானூற்றில் இடம்பெறும் ஒலிக்குறிப்புச் சொற்கள் பின்வருமாறுஅமைகின்றன.

இழுமென - (புறம். 3-3, 93-1, 159-18, 176-5, 237-18, 399-33)

கல்லென் - (புறம். 31-11, 84-4, 184-8, 240-12, 301-4, 362-19,387-34)

ஒல்லென - (புறம். 144-13, 170-4)

புல்லென் - (புறம். 78-8, 240-11, 252-2, 327-2, 331-4)

துடுமென – (புறம். 243-9)

கல்லென – (புறம். 160-2, 301-14, 320-9, 351-3, 361-1)

வல்லென – (புறம். 361-15)

மெல்லென – (புறம். 361-17)

இம்மென – (புறம். 367-16)

கதுமென – (புறம். 364-11)

விம்மென – (புறம். 372-1)

துடுமென – தொடித்தலை விழுத்தண்டினார், கதுமென - கூகைக் கோழியார்.

விம்மென – மாங்குடி கிழார், வல்லென, மெல்லென – ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

தொடித்தலை விழுத்தண்டினார், கூகைக் கோழியார், மாங்குடி கிழார் முதலிய புலவர்கள் மேற்குறிப்பிட்டுள்ள ஒலிக்குறிப்புச் சொற்களை புறநானூற்றில் ஒரே ஒரு இடத்தில் மட்டுமே கையாண்டுள்ளனர்.

“இழுமென” என்னும் ஒலிக்குறிப்புச் சொல் முரசு என்ற இசைக்கருவியின் ஒலியைக் குறிக்கும் வகையிலும் மேலும் ஆற்றுநீர், அருவி நீரின் ஓசையைக் குறிப்பிடவும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கல்லென், கல்லென்ற, கல்லென முதலிய ஒலிக்குறிப்புச் சொற்கள் ஆராவரத்தைக் குறிப்பிடும் ஓசைக்காக ஆளப்பட்டுள்ளன.

‘‘ஒல்லென்’’ என்னும் ஒலிக்குறிப்புச் சொல் ஒல்லென முழங்கும் தேரின் ஓசையைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

‘‘துடுமென’’ என்ற சொல் ஓடும் நீரைக் குறிப்பிடவும் நீர் தொடர்பான ஓசையைக் குறிப்பிடவும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

‘‘கதுமென’’,‘‘வல்லென’’ போன்ற ஒலிக்குறிப்புச் சொற்கள் விரைவுப்பொருள் குறித்து இடம்பெறுகின்றன.

‘‘மெல்லென’’ என்னும் ஒலிக்குறிப்புச் சொல் மென்மைப்பொருள் குறித்து வருகின்றன.

‘‘இம்மென’’குறிக்கும் ஒலிக்குறிப்புச் சொல் இடிமுழக்கம் முழங்கிப் பெய்யும் மழையைக் குறிக்கும் சொல்லாக பயன்படுத்தப்பட்டுள்ளன.

**புறநானூறு : சொற்களின் வருகை – திணைகள்**

புறநானூற்றில் 11 திணைகள் இடம்பெறுகின்றன. பாடாண் திணையில் மிகுதியான பாடல்கள் அமைந்திருக்கின்றன. பாடாண் திணை – 140, பொதுவியல் - 73, வாகை – 77, தும்பை - 33, காஞ்சி-26, கரந்தை – 11, வஞ்சி – 11, நொச்சி – 6, பெருந்திணை – 5, வெட்சி–3, கைக்கிளை-3, உ.வே.சா. திணை இறந்த பாடல்களாக 12 பாடல்களைக் குறிப்பிடுகின்றார். இத்திணைகள் இங்கு ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன.

## புறநானூறு சொற்களின் வருகை – திணைகள்

### அட்டவணை 3.2

திணை அடிப்படையில் சொற்களின் வருகை இங்கு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன.

| வ. எண் | சொல் வகைகள் | பாடாண் 140 | பொது வியல் 73 | வாகை 77 | கைக்கிளை 3 | தும்பை 33 | கரந்தை 11 | காஞ்சி 26 | நொச்சி 6 | வெட்சி 3 | வஞ்சி 11 | பெருந்திணை 5 | திணை இறந்த பாட்டுக்கள் 12 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 5981 | 2300 | 2987 | 54 | 605 | 345 | 950 | 142 | 150 | 385 | 151 | 386 |
| 2 | சுட்டு | 131 | 41 | 49 | 5 | 19 | 19 | 28 | 2 | 5 | 5 | 5 | 8 |
| 3 | ப.பெ. | 305 | 104 | 117 | 6 | 23 | 13 | 33 | 8 | 4 | 25 | 4 | 16 |
| 4 | வி.ப.பெ | 3 | 0 | 5 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 |
| 5 | வி.பெ | 47 | 15 | 15 | 0 | 9 | 4 | 3 | 0 | 0 | 1 | 0 | 1 |
| 6 | விளி | 138 | 34 | 67 | 0 | 6 | 14 | 4 | 2 | 0 | 13 | 9 | 3 |
| 7 | தொ.பெ | 151 | 51 | 58 | 3 | 15 | 9 | 26 | 2 | 4 | 9 | 2 | 2 |
| 8 | வி.அ.பெ | 156 | 68 | 69 | 0 | 17 | 4 | 29 | 0 | 6 | 14 | 2 | 16 |
| 9 | பெ.அ | 546 | 199 | 319 | 3 | 57 | 16 | 91 | 8 | 13 | 55 | 15 | 38 |
| 10 | பெ.எ | 815 | 282 | 492 | 10 | 120 | 48 | 120 | 19 | 29 | 51 | 21 | 56 |
| 11 | எ.ம.பெ.எ | 118 | 35 | 36 | 0 | 14 | 14 | 20 | 2 | 1 | 2 | 2 | 10 |
| 12 | வினை | 353 | 99 | 193 | 1 | 55 | 16 | 57 | 10 | 5 | 29 | 8 | 26 |
| 13 | வி.அ | 57 | 28 | 20 | 0 | 3 | 5 | 4 | 2 | 0 | 1 | 2 | 8 |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 14 | வி.மு | 373 | 178 | 181 | 9 | 46 | 28 | 55 | 23 | 6 | 38 | 17 | 20 |
| 15 | கு.வி.மு | 115 | 53 | 65 | 2 | 12 | 5 | 17 | 2 | 3 | 12 | 3 | 8 |
| 16 | எ.ம.வி.மு | 36 | 16 | 9 | 0 | 7 | 0 | 10 | 0 | 1 | 0 | 1 | 3 |
| 17 | வி.எ | 748 | 269 | 378 | 3 | 77 | 54 | 119 | 9 | 20 | 56 | 19 | 33 |
| 18 | எ.ம.வி.எ | 48 | 18 | 29 | 0 | 4 | 2 | 8 | 0 | 1 | 5 | 2 | 1 |
| 19 | கு.வி | 42 | 20 | 17 | 0 | 4 | 1 | 3 | 1 | 0 | 2 | 0 | 5 |
| 20 | வி.தொ | 6 | 3 | 5 | 0 | 2 | 0 | 4 | 0 | 0 | 1 | 0 | 1 |
| 21 | திரிபு | 113 | 21 | 36 | 0 | 8 | 5 | 4 | 1 | 0 | 10 | 10 | 1 |
| 22 | வியங் | 80 | 17 | 24 | 0 | 4 | 2 | 3 | 0 | 0 | 3 | 2 | 1 |
| 23 | நி.எ | 57 | 18 | 27 | 0 | 3 | 1 | 14 | 4 | 0 | 8 | 0 | 5 |
| 24 | சொ.உ | 21 | 4 | 6 | 0 | 1 | 1 | 2 | 0 | 0 | 0 | 0 | 4 |
| 25 | ஏவல் | 12 | 4 | 9 | 0 | 7 | 1 | 2 | 0 | 3 | 2 | 0 | 1 |
| 26 | கு.எ | 128 | 43 | 71 | 0 | 11 | 6 | 15 | 3 | 3 | 11 | 5 | 5 |
| 27 | அ.தொ | 8 | 5 | 2 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 |
| 28 | ஒ.கு | 12 | 6 | 6 | 1 | 2 | 0 | 1 | 0 | 0 | 1 | 1 | 1 |
| 29 | இ.சொ | 1982 | 861 | 948 | 27 | 263 | 126 | 297 | 79 | 48 | 142 | 41 | 129 |
| 30 | உ.சொ | 36 | 13 | 11 | 0 | 1 | 1 | 8 | 1 | 1 | 2 | 2 | 1 |
| 31 | இ.இ.சொ | 12 | 8 | 4 | 0 | 1 | 1 | 1 | 0 | 0 | 4 | 0 | 3 |

பொதுவியல் வாகைத் திணையை ஒப்பிட வாகைத் திணையில் பெயர்ச்சொற்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. வினாப்பெயர்கள் வாகைத் திணை மற்றும் பொதுவியல் திணையில் சமஅளவில் ஆளப்பட்டுள்ளன. காஞ்சித் திணையில் சுட்டுப்பெயர்களின் வருகை சற்று மிகுதியாக இடம்பெறுகின்றன. வினையாலணையும் பெயர் வாகைத் திணை மற்றும் பொதுவியலில் சற்றொப்ப நிலையில் அமைந்துள்ளன. வினைச்சொற்கள் கரந்தைத் திணை மற்றும் வஞ்சித் திணையை ஒப்பிட வஞ்சித் திணையில் அதிகம் இடம்பெறுகின்றன. பெயரெச்சங்கள் தும்பைத் திணை மற்றும் காஞ்சித் திணையில் சமநிலையில் கையாளப்பட்டுள்ளன. எதிர்மறைப் பெயரெச்சங்கள் பொதுவியல் வாகையில் ஒத்த தன்மையில் அமைந்துள்ளன. வினைமுற்றுகள் கரந்தை மற்றும் நொச்சித் திணையில் சற்றொத்த நிலையில் காணப்படுகின்றன.

தும்பை வஞ்சியில் பெயரடைகள் ஏறக்குறைய சமநிலையில் ஆளப்பட்டுள்ளன. பொதுவியல் திணை மற்றும் வாகைத் திணையை ஒப்பிட பெயரெச்சங்கள் வாகையில் மிகுதியாக இடம்பெறுகின்றன. தும்பை கரந்தை முதலிய திணைகளில் பெயரெச்சங்கள் சமஅளவில் கையாளப்பட்டுள்ளன. வினையெச்சங்கள் பாடாண் திணையில் மிகுதி. வஞ்சித் திணை மற்றும் பெருந்திணையிலும் திரிபு சமஅளவில் இடம்பெறுகின்றன. வாகைத்திணையில் வியங்கோளின் வருகை மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. அடுக்குத்தொடர் தும்பையிலும் வஞ்சியிலும் ஒத்த போக்கில் அமைந்துள்ளன. ஒலிக்குறிப்புச் சொற்கள் பாடாணில் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ளன. இடைச்சொற்கள் ஒவ்வொரு திணையிலும் மாறுபட்ட தன்மையில் காணப்படுகின்றன.

### புறநானூறு : சொற்களின் வருகை –துறைகள்

புறநானூற்று துறைகளில் இயன்மொழி வாழ்த்து – 58, கையறுநிலை – 41, அரசவாகை – 33, வல்லாண்முல்லை – 25, மகட்பாற்காஞ்சி – 20, பரிசில் கடாநிலை – 17, பரிசில் துறை – 18, பொருண்மொழிக் காஞ்சி - 18, மறக்காஞ்சி – 11 பாடல்கள் அமைந்துள்ளன. மற்ற துறைகளில் பத்துக்கும் குறைவான பாடல்களே இடம்பெற்றுள்ளன. இத்துறைகள் ஒப்பீட்டளவில் இங்கு ஆராயப்படுகின்றன.

## புறநானூறு சொற்களின் வருகை – துறைகள்

### அட்டவணை 3.3

துறை அடிப்படையில் சொற்களின் வருகை இங்கு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன.

| வ. எண் | சொல் வகைகள் | இயன்மொழி 58 | கையறு நிலை 41 | அரச வாகை 33 | வல்லாண் முல்லை 25 | மகட் பாற்காஞ்சி 20 | பரிசில் கடா நிலை 17 | பரிசிற்றுறை 18 | பொருண் மொழிகாஞ்சி 18 | மறக்களவழி 11 | கடைநிலை 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 2101 | 1242 | 1271 | 813 | 707 | 804 | 646 | 428 | 666 | 621 |
| 2 | சுட்டு | 33 | 23 | 21 | 18 | 26 | 24 | 23 | 13 | 8 | 16 |
| 3 | ப.பெ. | 109 | 50 | 63 | 25 | 25 | 26 | 38 | 24 | 18 | 38 |
| 4 | வி.ப.பெ | 0 | 0 | 8 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 5 | வி.பெ | 16 | 8 | 6 | 1 | 3 | 3 | 4 | 2 | 0 | 3 |
| 6 | விளி | 47 | 17 | 36 | 8 | 1 | 18 | 28 | 11 | 8 | 8 |
| 7 | தொ.பெ | 56 | 14 | 34 | 10 | 24 | 23 | 24 | 27 | 6 | 12 |
| 8 | வி.அ.பெ | 65 | 24 | 40 | 8 | 21 | 17 | 15 | 18 | 18 | 11 |
| 9 | பெ.அ | 299 | 90 | 152 | 81 | 129 | 51 | 40 | 57 | 57 | 59 |
| 10 | பெ.எ | 275 | 178 | 236 | 117 | 85 | 121 | 110 | 47 | 99 | 77 |
| 11 | எ.ம.பெ.எ | 32 | 24 | 12 | 10 | 13 | 16 | 16 | 0 | 18 | 15 |
| 12 | வினை | 129 | 60 | 87 | 37 | 46 | 44 | 53 | 12 | 50 | 48 |
| 13 | வி.அ | 18 | 11 | 8 | 3 | 4 | 3 | 14 | 4 | 9 | 13 |

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 14 | வி.மு | 151 | 112 | 77 | 46 | 44 | 54 | 35 | 37 | 30 | 36 |
| 15 | கு.வி.மு | 46 | 19 | 42 | 18 | 15 | 11 | 16 | 19 | 5 | 10 |
| 16 | எ.ம.வி.மு | 19 | 4 | 3 | 2 | 10 | 6 | 8 | 6 | 0 | 1 |
| 17 | வி.எ | 261 | 163 | 154 | 73 | 75 | 110 | 82 | 55 | 132 | 105 |
| 18 | எ.ம.வி.எ | 19 | 8 | 9 | 13 | 2 | 10 | 4 | 3 | 6 | 0 |
| 19 | கு.வி | 17 | 1 | 10 | 4 | 3 | 5 | 4 | 8 | 6 | 5 |
| 20 | வி.தொ | 2 | 1 | 4 | 0 | 3 | 0 | 0 | 1 | 2 | 0 |
| 21 | திரிபு | 29 | 13 | 22 | 2 | 0 | 28 | 22 | 1 | 7 | 10 |
| 22 | வியங் | 28 | 8 | 10 | 2 | 0 | 10 | 11 | 5 | 7 | 8 |
| 23 | நி.எ | 19 | 3 | 10 | 10 | 9 | 9 | 10 | 10 | 6 | 2 |
| 24 | சொ.உ | 3 | 3 | 0 | 3 | 2 | 5 | 10 | 1 | 3 | 3 |
| 25 | ஏவல் | 5 | 0 | 1 | 3 | 1 | 0 | 0 | 2 | 1 | 1 |
| 26 | கு.எ | 35 | 25 | 37 | 8 | 10 | 13 | 28 | 7 | 25 | 16 |
| 27 | அ.தொ | 1 | 3 | 1 | 0 | 0 | 1 | 0 | 3 | 1 | 0 |
| 28 | ஒ.கு | 2 | 2 | 2 | 4 | 1 | 1 | 0 | 1 | 3 | 0 |
| 29 | இ.சொ | 689 | 445 | 427 | 288 | 213 | 268 | 238 | 228 | 173 | 167 |
| 30 | உ.சொ | 15 | 9 | 7 | 3 | 2 | 6 | 3 | 2 | 1 | 4 |
| 31 | இ.இ.சொ | 3 | 2 | 3 | 0 | 0 | 1 | 2 | 1 | 2 | 0 |

| வ. எண் | சொல் வகைகள் | பெருங் காஞ்சி 9 | வாழ்த்தியல் 9 | செவியறிவுறூஉ 8 | தானைமறம் 8 | துணைவஞ்சி 6 | உண்டாட்டு 5 | ஆனந்தபையுள் 5 | குதிரைமறம் 5 | குறுங்கலி 5 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 362 | 525 | 439 | 234 | 181 | 150 | 233 | 124 | 151 |
| 2 | சுட்டு | 6 | 11 | 4 | 6 | 4 | 5 | 2 | 5 | 5 |
| 3 | ப.பெ. | 18 | 33 | 28 | 7 | 16 | 4 | 11 | 2 | 4 |
| 4 | வி.ப.பெ | 0 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 5 | வி.பெ | 0 | 7 | 1 | 7 | 1 | 0 | 4 | 0 | 0 |
| 6 | விளி | 3 | 6 | 23 | 7 | 5 | 0 | 9 | 0 | 9 |
| 7 | தொ.பெ | 6 | 4 | 9 | 5 | 4 | 4 | 4 | 3 | 2 |
| 8 | வி.அ.பெ | 14 | 16 | 13 | 7 | 11 | 6 | 2 | 2 | 2 |
| 9 | பெ.அ | 28 | 37 | 65 | 19 | 28 | 14 | 19 | 7 | 15 |
| 10 | பெ.எ | 48 | 86 | 61 | 39 | 23 | 29 | 27 | 21 | 23 |
| 11 | எ.ம.பெ.எ | 10 | 9 | 3 | 6 | 2 | 1 | 7 | 2 | 2 |
| 12 | வினை | 23 | 27 | 23 | 19 | 16 | 5 | 11 | 10 | 8 |
| 13 | வி.அ | 10 | 7 | 1 | 1 | 0 | 0 | 3 | 0 | 2 |
| 14 | வி.மு | 15 | 22 | 25 | 9 | 18 | 6 | 15 | 13 | 17 |
| 15 | கு.வி.மு | 6 | 7 | 5 | 6 | 11 | 3 | 4 | 1 | 3 |
| 16 | எ.ம.வி.மு | 1 | 0 | 4 | 0 | 0 | 1 | 1 | 4 | 1 |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 17 | வி.எ | 64 | 90 | 37 | 12 | 31 | 16 | 22 | 12 | 20 |
| 18 | எ.ம.வி.எ | 5 | 4 | 5 | 0 | 4 | 1 | 4 | 1 | 2 |
| 19 | கு.வி | 7 | 2 | 6 | 0 | 2 | 0 | 3 | 0 | 0 |
| 20 | வி.தொ | 1 | 0 | 3 | 0 | 0 | 0 | 1 | 1 | 0 |
| 21 | திரிபு | 1 | 5 | 0 | 7 | 10 | 0 | 5 | 0 | 10 |
| 22 | வியங் | 2 | 10 | 4 | 0 | 2 | 0 | 3 | 1 | 2 |
| 23 | நி.எ | 1 | 4 | 4 | 0 | 7 | 0 | 1 | 0 | 0 |
| 24 | சொ.உ | 3 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 |
| 25 | ஏவல் | 2 | 0 | 3 | 6 | 1 | 3 | 0 | 0 | 0 |
| 26 | கு.எ | 8 | 15 | 11 | 2 | 4 | 3 | 3 | 2 | 5 |
| 27 | அ.தொ | 1 | 1 | 2 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 28 | ஒ.கு | 2 | 2 | 2 | 3 | 0 | 0 | 0 | 0 | 1 |
| 29 | இ.சொ | 118 | 171 | 165 | 72 | 81 | 48 | 72 | 41 | 41 |
| 30 | உ.சொ | 0 | 2 | 2 | 1 | 1 | 1 | 1 | 0 | 2 |
| 31 | இ.இ.சொ | 4 | 1 | 1 | 1 | 4 | 0 | 2 | 0 | 0 |

| வ. எண் | சொல் வகைகள் | நெடுமொழி 5 | முதுமொழிக் காஞ்சி 5 | மூதின்முல்லை 5 | தாபதநிலை 4 | பாண்பாட்டு 4 | பூவை நிலை 4 | முதுபாலை 4 | விறலியாற்றுப்படை 4 | உவகைக்கலுழ்ச்சி 3 | எருமை மறம் 3 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 183 | 243 | 124 | 126 | 158 | 128 | 77 | 92 | 54 | 67 |
| 2 | சுட்டு | 5 | 2 | 3 | 1 | 2 | 3 | 0 | 0 | 0 | 2 |
| 3 | ப.பெ. | 11 | 17 | 5 | 3 | 2 | 9 | 8 | 2 | 4 | 2 |
| 4 | வி.ப.பெ | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 5 | வி.பெ | 0 | 0 | 5 | 0 | 1 | 3 | 2 | 1 | 0 | 0 |
| 6 | விளி | 1 | 8 | 1 | 2 | 1 | 4 | 3 | 4 | 0 | 0 |
| 7 | தொ.பெ | 4 | 10 | 7 | 1 | 2 | 6 | 0 | 2 | 1 | 0 |
| 8 | வி.அ.பெ | 5 | 20 | 1 | 3 | 1 | 3 | 0 | 2 | 1 | 0 |
| 9 | பெ.அ | 13 | 18 | 6 | 10 | 9 | 7 | 6 | 12 | 1 | 5 |
| 10 | பெ.எ | 40 | 44 | 17 | 17 | 27 | 10 | 8 | 15 | 14 | 10 |
| 11 | எ.ம.பெ.எ | 2 | 3 | 0 | 1 | 4 | 3 | 1 | 4 | 3 | 0 |
| 12 | வினை | 11 | 11 | 9 | 4 | 8 | 8 | 3 | 6 | 7 | 3 |
| 13 | வி.அ | 1 | 2 | 2 | 0 | 1 | 0 | 0 | 1 | 2 | 0 |
| 14 | வி.மு | 14 | 17 | 11 | 6 | 6 | 13 | 8 | 6 | 4 | 6 |
| 15 | கு.வி.மு | 8 | 6 | 2 | 3 | 2 | 4 | 3 | 3 | 1 | 0 |

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 16 | எ.ம.வி.மு | 0 | 2 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 0 | 1 |
| 17 | வி.எ | 20 | 24 | 13 | 12 | 25 | 14 | 9 | 9 | 14 | 10 |
| 18 | எ.ம.வி.எ | 2 | 0 | 1 | 1 | 0 | 2 | 1 | 1 | 0 | 0 |
| 19 | கு.வி | 4 | 0 | 0 | 3 | 0 | 1 | 1 | 1 | 1 | 1 |
| 20 | வி.தொ | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 |
| 21 | திரிபு | 2 | 2 | 0 | 2 | 0 | 1 | 2 | 1 | 0 | 0 |
| 22 | வியங் | 0 | 2 | 4 | 2 | 2 | 2 | 0 | 1 | 0 | 0 |
| 23 | நி.எ | 1 | 3 | 0 | 0 | 0 | 1 | 3 | 4 | 2 | 0 |
| 24 | சொ.உ | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 25 | ஏவல் | 1 | 1 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 2 |
| 26 | கு.எ | 2 | 2 | 1 | 6 | 4 | 2 | 3 | 0 | 1 | 2 |
| 27 | அ.தொ | 0 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 28 | ஒ.கு | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 29 | இ.சொ | 57 | 102 | 44 | 35 | 53 | 46 | 42 | 24 | 19 | 34 |
| 30 | உ.சொ | 2 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 1 |
| 31 | இ.இ.சொ | 0 | 2 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 |

| வ. எண் | சொல் வகைகள் | பழிச்சுதல் 3 | புலவராற்றுப் படை 3 | மகண் மறுத்தல் 3 | மழபுல வஞ்சி 3 | வஞ்சினக் காஞ்சி 3 | ஏர்க்கள உருவகம் 2 | ஏறாண் முல்லை 2 | செருவிடை வீழ்தல் 2 | தாபாத வாகை 2 | தொகை நிலை 2 | நீண் மொழி 2 | நூழிலாட்டு 2 | பார்ப்பன வாகை 2 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | **54** | **72** | **75** | **128** | **142** | **182** | **23** | **45** | **25** | **93** | 86 | 41 | 87 |
| 2 | சுட்டு | 5 | 2 | 2 | 1 | 2 | 3 | 2 | 0 | 0 | 1 | 0 | 1 | 0 |
| 3 | ப.பெ. | 6 | 4 | 5 | 5 | 5 | 2 | 0 | 3 | 0 | 6 | 2 | 0 | 6 |
| 4 | வி.ப.பெ | 0 | 0 | | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 5 | வி.பெ | 0 | 4 | 0 | 0 | 0 | 0 | 3 | 0 | 0 | 1 | 1 | 0 | 0 |
| 6 | விளி | 0 | 2 | 0 | 4 | 0 | 4 | 0 | 2 | 0 | 0 | 3 | 0 | 3 |
| 7 | தொ.பெ | 3 | 3 | 1 | 2 | 1 | 1 | 0 | 1 | 2 | 2 | 2 | 2 | 2 |
| 8 | வி.அ.பெ | 0 | 2 | 0 | 0 | 5 | 5 | 1 | 0 | 0 | 2 | 1 | 1 | 2 |
| 9 | பெ.அ | 3 | 5 | 6 | 20 | 9 | 19 | 1 | 2 | 5 | 6 | 5 | 6 | 11 |
| 10 | பெ.எ | 10 | 9 | 10 | 15 | 22 | 33 | 2 | 5 | 5 | 17 | 12 | 9 | 14 |
| 11 | எ.ம.பெ.எ | 0 | 3 | 0 | 0 | 7 | 5 | 1 | 1 | 0 | 3 | 2 | 0 | 1 |
| 12 | வினை | 1 | 2 | 3 | 8 | 7 | 19 | 0 | 5 | 1 | 5 | 5 | 3 | 6 |
| 13 | வி.அ | 0 | 0 | 2 | 2 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 14 | வி.மு | 10 | 9 | 18 | 9 | 9 | 8 | 2 | 4 | 5 | 10 | 9 | 2 | 6 |
| 15 | கு.வி.மு | 2 | 4 | 2 | 1 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 | 1 | 1 |

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 16 | எ.ம.வி.மு | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 |
| 17 | வி.எ | 3 | 2 | 5 | 16 | 18 | 38 | 6 | 4 | 1 | 10 | 15 | 3 | 16 |
| 18 | எ.ம.வி.எ | 0 | 0 | 0 | 0 | 4 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 2 | 5 |
| 19 | கு.வி | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 1 | 0 | 1 | 1 | 1 | 0 |
| 20 | வி.தொ | 0 | 0 | 0 | 1 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 21 | திரிபு | 0 | 3 | 0 | 0 | 3 | 2 | 1 | 1 | 0 | 1 | 2 | 0 | 2 |
| 22 | வியங் | 0 | 0 | 0 | 0 | 2 | 3 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 2 |
| 23 | நி.எ | 0 | 1 | 4 | 0 | 5 | 1 | 0 | 0 | 0 | 0 | 3 | 0 | 1 |
| 24 | சொ.உ | 0 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 |
| 25 | ஏவல் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 26 | கு.எ | 0 | 0 | 1 | 8 | 1 | 11 | 1 | 2 | 0 | 0 | 0 | 1 | 0 |
| 27 | அ.தொ | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 28 | ஒ.கு | 1 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 |
| 29 | இ.சொ | 25 | 41 | 56 | 35 | 51 | 83 | 16 | 15 | 11 | 34 | 24 | 17 | 17 |
| 30 | உ.சொ | 0 | 0 | 0 | 1 | 3 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 31 | இ.இ.சொ | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 |

பரிசில் துறையில் பெயர்ச்சொற்களின் வருகை மிகுதியாக காணப்படுகின்றது. வினைமுற்றுகள் பரிசில் துறை மற்றும் பொருண்மொழிக் காஞ்சியில் சற்றொத்த நிலையில் இடம்பெறுகின்றன. அரசவாகை வல்லாண்முல்லையில் நிபந்தனை எச்சங்கள் சம அளவில் கையாளப்பட்டுள்ளன. மகட்பாற் காஞ்சித்துறை மற்றும் வல்லாண்முல்லையில் வினையெச்சங்கள் ஏறக்குறைய ஒரே அளவில் அமைந்துள்ளன. இயன்மொழித் துறை மற்றும் அரசவாகையில் குறையெச்சங்கள் ஒத்த போக்கினை வெளிப்படுத்துகின்றன.

முதுபாலையில் வினையெச்சங்கள் குறைவாக ஆளப்பட்டுள்ளன. குறுங்கலி, நெடுமொழி ஆகிய துறைகளில் வினையெச்சங்கள் சமஅளவில் இடம்பெறுகின்றன. பெயரடைகள் தானைமறம், பாணாற்றுப்படை ஆகிய இரு துறைகளிலும் சற்றொத்த நிலையில் காணப்படுகின்றன. தானைமறத் துறையில் பெயரெச்சங்கள் மிகுதி. பாணாற்றுப்படைத் துறையில் பெயரெச்சங்கள் குறைவு. மூதின்முல்லைத் துறை மற்றும் தாபாதநிலைத் துறையில் பெயரெச்சங்களின் போக்கு சமநிலையில் உள்ளன. பூவைநிலை, உவகைக்கலுழ்ச்சி முதலிய துறைகளில் வினையெச்சங்கள் சம பாங்கினை வெளிப்படுத்துகின்றன.

சுட்டுப்பெயர்கள் உண்டாட்டு, குதிரைமறம், குறுங்கலி, நெடுமொழி ஆகிய துறைகளில் ஒத்த பான்மையைக் கொண்டிருக்கின்றன. தொழிற்பெயர்கள் மகட்பாற்காஞ்சி, பரிசில்கடாநிலை, பரிசிற்துறையில் சமபோக்கில் ஆளப்பட்டுள்ளன. குறிப்பு வினைமுற்றுகள் கையறுநிலை பொருண்மொழிக்காஞ்சியில் சமஅளவில் இடம்பெற்றுள்ளன. மறக்களவழியில் பெயரெச்சங்கள் மிகுதியாகவும் கடைநிலையில் குறைவாகவும் அமைந்துள்ளன. வினைமுற்றுகள் பெருங்காஞ்சியில் குறைவாகவும் செவியறிவுஉ துறையில் அதிகமாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. திரிபு ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மையில் அமைந்துள்ளன.

**புறநானூறு : சொற்களின் வருகை –புலவர்கள்**

157 புலவர்களால் பாடப்பட்ட புறப்பொருள் பற்றி பாடல்களின் தொகுதியே புறநானூறு ஆகும். புறநானூற்றுப் புலவர்களான ஔவையார், கபிலர், பரணர், கோவூர்க்கிழார், முடமோசியார், பெருஞ்சித்திரனார் ஆகியோர் பாடல்களில் இடம்பெறும் சொற்களின் வருகை இங்கு ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன.

## புறநானூறு சொற்களின் வருகை – புலவர்கள்

### அட்டவணை 3.4

புலவர்கள் அடிப்படையில் சொற்களின் வருகை இங்கு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன.

| வ. எண் | சொல் வகைகள் | ஔவை | கபிலர் | பரணர் | கோவூர் | முடமோ | பெருஞ்சி |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 993 | 812 | 492 | 700 | 406 | 475 |
| 2 | சுட்டு | 20 | 18 | 15 | 17 | 6 | 9 |
| 3 | ப.பெ. | 46 | 35 | 11 | 34 | 15 | 27 |
| 4 | வி.ப.பெ | 0 | 0 | 0 | 0 | 1 | 0 |
| 5 | வி.பெ | 17 | 2 | 0 | 1 | 3 | 1 |
| 6 | விளி | 15 | 16 | 7 | 12 | 8 | 9 |
| 7 | தொ.பெ | 16 | 14 | 11 | 17 | 6 | 11 |
| 8 | வி.அ.பெ | 27 | 19 | 7 | 19 | 7 | 15 |
| 9 | பெ.அ | 72 | 73 | 60 | 81 | 30 | 25 |
| 10 | பெ.எ | 146 | 102 | 69 | 88 | 48 | 84 |
| 11 | எ.ம.பெ.எ | 14 | 14 | 16 | 12 | 6 | 12 |
| 12 | வினை | 61 | 46 | 25 | 46 | 26 | 28 |
| 13 | வி.அ | 8 | 7 | 0 | 6 | 4 | 6 |
| 14 | வி.மு | 48 | 63 | 50 | 50 | 15 | 34 |
| 15 | கு.வி.மு | 18 | 25 | 8 | 9 | 12 | 12 |
| 16 | எ.ம.வி.மு | 5 | 5 | 6 | 0 | 0 | 4 |
| 17 | வி.எ | 126 | 98 | 54 | 115 | 37 | 80 |
| 18 | எ.ம.வி.எ | 9 | 4 | 1 | 9 | 4 | 4 |
| 19 | கு.வி | 4 | 4 | 1 | 5 | 2 | 2 |
| 20 | வி.தொ | 1 | 0 | 2 | 2 | 0 | 0 |
| 21 | திரிபு | 16 | 9 | 6 | 10 | 9 | 13 |
| 22 | வியங் | 7 | 9 | 0 | 10 | 4 | 5 |
| 23 | நி.எ | 6 | 11 | 5 | 4 | 4 | 6 |
| 24 | சொ.உ | 3 | 2 | 2 | 0 | 0 | 4 |
| 25 | ஏவல் | 1 | 1 | 0 | 2 | 0 | 0 |
| 26 | கு.எ | 12 | 20 | 10 | 16 | 7 | 18 |
| 27 | அ.தொ | 0 | 0 | 0 | 1 | 0 | 0 |
| 28 | ஒ.கு | 2 | 0 | 1 | 0 | 0 | 2 |
| 29 | இ.சொ | 353 | 297 | 148 | 215 | 130 | 182 |
| 30 | உ.சொ | 4 | 6 | 0 | 1 | 5 | 3 |
| 31 | இ.இ.சொ | 0 | 0 | 0 | 1 | 1 | 0 |

புறநானூற்றில் ஔவையார், கபிலர், பரணர், கோவூர்க்கிழார், முடமோசியார், பெருஞ்சித்திரனார் ஆகியோர் பாடல்கள் ஒப்பு நோக்கப்பட்டன. முடமோசியார் பாடல்களில் சொற்களின் வருகை குறைவாக இடம்பெறுகின்றன. பெயர்ச்சொற்கள் ஔவையார் பாடல்களில் மிகுதியாகவும் முடமோசியார் பாடல்களில் குறைவாகவும் கையாளப்பட்டுள்ளன. சுட்டுப்பெயர்கள் கபிலர் கோவூர்க்கிழார் பாடல்களில் சற்றொத்த நிலையில் அமைந்துள்ளன. பதிலீட்டுப்பெயர்கள் ஔவையார் பாடல்களில் அதிகமாகவும் பரணர் பாடல்களில் குறைவாகவும் இடம்பெறுகின்றன. வினாப்பெயர்கள் ஔவையார் பாடல்களில் மட்டுமே மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கபிலர் பாடல்களில் விளிப்பெயர்கள் மிகுதியாகவும் முடமோசியார் பெருஞ்சித்திரனார் பாடல்களில் சற்றொப்ப நிலையிலும் அமைந்துள்ளன. பரணர் பெருஞ்சித்திரனார் பாடல்களில் தொழிற்பெயர்கள் ஒத்த போக்கினையும் முடமோசியார் பாடல்களில் மாறுபட்ட தன்மையினையும் வெளிப்படுத்துகின்றன. வினையாலனையும் பெயர்கள் ஔவையார் பாடல்களில் மிகுதியாகவும் கபிலர் கோவூர்க்கிழார் பாடல்களில் சமநிலையிலும் பெருஞ்சித்திரனார் பாடல்களில் மாறுபட்ட தன்மையினையும் வெளிப்படுத்துகின்றன.

பெயரடைகள் கோவூர்க்கிழார் பாடல்களில் மிகுதியாகவும் ஔவையார் கபிலர் பாடல்களில் ஒத்த போக்கிலும் முடமோசியார் பெருஞ்சித்திரனார் பாடல்களில் குறைவாகவும் இடம் பெறுகின்றன. பெயரெச்சங்கள் ஔவையார் பாடல்களில் அதிகமாகவும் கோவூர்க்கிழார் பெருஞ்சித்திரனார் பாடல்களில் சற்றொத்த நிலையிலும் அமைந்திருக்கின்றன. எதிர்மறைப் பெயரெச்சங்கள் முடமோசியார் பாடல்களில் குறைவாகவும் ஔவையார் கபிலர் பாடல்களில் சமமாகவும் ஆளப்பட்டுள்ளன.

வினைச்சொற்கள் புலவர்களிடையே மாறுபட்ட தன்மையில் அமைந்திருக்கின்றன. குறிப்பு வினைமுற்றுகள் கபிலர் பாடல்களில் மிகுதியாகவும் முடமோசியார் பெருஞ்சித்திரனார் பாடல்களில் சமபோக்கும் காணப்படுகின்றன. எதிர்மறை வினைமுற்றுகள் பரணர் பாடல்களில் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. ஔவையார் கோவூர்க்கிழார் பாடல்களில் வினையெச்சங்கள் மிகுதியாக இடம்பெறுகின்றன. கபிலர் முடமோசியார்

பாடல்களில் திரிபு சமநிலையில் அமைந்திருக்கின்றன. குறையெச்சங்கள் ஔவையார் பரணர் பாடல்களில் சற்றொப்ப நிலையில் ஆளப்பட்டுள்ளன.

பரணர் ‘‘கொல்’’ என்னும் இடைச்சொல்லை தம் பாடல்களில் ஆண்டுள்ளார். ‘‘கொல்’’ என்னும் இடைச்சொல் ஐயப்பொருளில் மட்டுமே இடம்பெறும்.‘‘பெருங்கவின் இழப்பது கொல்லோ’’ என்னும்பாடல் வரியின் மூலம் யானைகள் மோதிக்கொள்வதால் மென்மையான வயல்களை உடைய ஊர் தன் மிக்க அழகினை இழந்துவிடுமோ? என்றும் அகன்ற இடமாகக் காணப்படும் நம் நாடு இனி எத்தகைய துன்பத்தை அடைந்துவிடுமோ? என்றும் போர்ப் பூசலினால் நாடு எத்தன்மையில் காணப்படுமோ என்ற ஐயத்தை தம் பாடல்களின் வாயிலாக வெளிப்படுத்துகின்றார்.

மேலும், புறநானூற்றில் ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் ஆகியவற்றின் ஆளுமையை விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**ஒருபொருட்பன்மொழிகள்**

புறநானூற்றில் யாணர், மெய், நீர், இனம் போன்ற சொற்கள் ஒருபொருட்பன்மொழிகளாக ஆளப்பட்டுள்ளன. அவை இங்கு ஆராயப்படுகின்றன.

**யாணர்**

‘‘யாணர்’’ என்னும் சொல் புதுவருவாய், புதுப்பெயல், செல்வம், புதுமை என்ற பொருள்களில் வருகின்றன.

புதுவருவாய் - (புறம். 2-11, 7-12, 52-11, 61-12, 63-14, 66-6, 71-11, 116-14, 158-1, 168-7, 173-3, 212-6, 240-2, 375-9, 376-6, 400-23.)

புதுப்பெயல் - (புறம். 205-10)

செல்வம் - (புறம். 260-8)

புதுமை - (புறம். 326-11)

இல் யாணர் (புறம். 61-12), கலி யாணர் (புறம். 205-10) வாடா யாணர் (புறம். 240-2), இன் யாணர் (புறம். 400-23)

ஒருபொருட்பன்மொழிகள் அடைக்கொடுத்தும், உருவகப்படுத்தியும் வருவது இயல்பு. ஆனால் புறநானூற்றில் "யாணர்" என்னும் சொல் அடைக்கொடுத்தும், ஒரு சிறு மாறுபாடுடன் எதிர்மறைப் பெயரெச்சத்தைக் கொண்டு வருகின்றன என்பதை இங்கு குறிப்பிடமுடிகின்றது.

**மெய்**

"மெய்" என்னும் சொல் அறிவு, உண்மை, உடல் என்ற மூன்று பொருள்களில் வருகின்றன.

| | | |
|---|---|---|
| அறிவு | - | (புறம். 25-11) |
| உடல் | - | (புறம். 45-9, 69-1, 100-2, 167-6, 188-5, 259-5, 274-7, 368-8, 399-8) |
| உண்மை | - | (புறம். 10-3, 139-6, 166-6, 167-7) |

**நீர்**

"நீர்" என்னும் சொல் தன்மை, கடல், நீங்கள், கண்ணீர், நீர் பொருள்களில் வருகின்றன. இச்சொல் புறநானூற்றில் 150 பாடல்களுக்கு மட்டுமே ஆரயாப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| தன்மை | - | (புறம். 9-9, 13-13) |
| கடல் | - | (புறம். 1-12, 2-5, 6-6, 9-10, 14-6, 17-37, 22-23, 24-15, 24-16, 42-16, 44-7, 49-6, 51-1, 55-17, 58-10, 62-14, 99-3) |
| நீங்கள் | - | (புறம். 110-6, 113-6) |
| கண்ணீர் | - | (புறம். 136-7) |
| நீர் | - | (புறம். 16-6, 18-18, 21-8, 64-7, 68-9, 75-7, 94-2, 96-7, 104-3, 105-7, 116-1, 118-3, 137-7, 150-27) |

“நீர்” என்னும் சொல் தன்மை, கடல், நீங்கள், கண்ணீர் என்ற பொருள்களில் ஒருபொருட் பன்மொழிகளாக வருவதுடன், நீர்நிலைகளையும் (புறம். 16-6) நீர் மிகுந்த மடு (புறம். 37-10) காவிரி ஆற்று நீர் (புறம். 43-22) போன்ற “நீர்” தொடர்புடையவைகளையும் குறிக்கின்றது.

**இனம்**

“இனம்” என்னும் சொல் நிரை, திரள், கூட்டம், தொகுதி என்ற நான்கு பொருள்களில் வருகின்றன.

நிரை - (புறம். 15-2, 18-8, 98-7, 137-1, 138-1, 138-2, 157-9)

திரள் - (புறம். 270-2, 145-9, 392-9)

தொகுதி - (புறம். 153-9, 257-8)

கூட்டம் - (புறம். 13-7, 199-3, 398-10)

சுறாக்கூட்டம், ஆணினம், மானினம், மீனினம், புலியினம், குதிரை இனம் போன்றவைகளைக் குறிப்பிட பெரும்பாலும் இச்சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**திருப்புரைச் சொற்கள்**

புறநானூற்றில் 100 பாடல்களுக்கு மட்டும் திருப்புரைச் சொற்கள் ஆராயப்படுகின்றன.

**ஒரே அடியில் வரும் திருப்புரைச் சொற்கள்**

ஒரே அடியில் வரும் திருப்புரைச் சொற்கள் புறநானூற்றில் 25 இடங்களில் வருகின்றன.

முதல் சீரிலும் ஆறாவது சீரிலும் ஒரே இடத்தில் மட்டும் வருகின்றன. அவை

❖ **நின்** கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும் **நின்** (புறம். 2-9)

முதல் சீரிலும் நான்காம் சீரிலும் நான்கு இடத்தில் வருகின்றன.

1. **நசை** தர வந்தோர் **நசை** பிறக்கு ஒழிய, (புறம். 15-15)

2. **தட்டோர்** அம்ம, இவண் **தட்டோரே;** (புறம். 18-29)
3. **நின்** நிழற் பிறந்து, **நின்** நிழல் வளர்ந்த, (புறம். 38-10)
4. **ஒருகால்** மார்பு ஒதுங்கின்றே;**ஒருகால்** (புறம். 80-3)

முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் நான்கு இடத்தில் வருகின்றன.

1. **தள்ளாதோர்** இவண் **தள்ளாரோரே** (புறம். 18-30)
2. **செல்வை** ஆயின், **செல்வை** ஆகுவை; (புறம். 70-16)
3. **ஆற்றல்** உடையோர் **ஆற்றல்** போற்றாது, என் (புறம். 73-5)
4. **எய்தினம்** ஆயின், **எய்தினம்** சிறப்பு எனக் (புறம். 75-3)

இரண்டாம் சீரிலும் ஏழாம் சீரிலும் இரண்டு இடத்தில் வருகின்றன.

1. மழை **என** மருளும் பல் தோல், மலை **எனத்** (புறம். 17-34)
2. பூ **இல்** வறுத் தலை முடிப்பவும், நீர் **இல்**

இரண்டாம் சீரிலும் ஆறாம் சீரிலும் மூன்று இடத்தில் வருகின்றன.

1. இரு **குடை** பின்பட ஓங்கிய ஒரு **குடை**, (புறம். 31-3)
2. குண **கடல்** பின்னது ஆக, குட **கடல்** (புறம். 31-13)
3. நீர் **மிகின்,** சிறையும் இல்லை; தீ **மிகின்** (புறம். 51-1)

இரண்டாம் சீரிலும் ஐந்தாம் சீரிலும் ஐந்து இடத்தில் வருகின்றன.

1. புதுப் **புள்** வரினும், பழம் **புள்** போகினும், (புறம். 20-18)
2. நாடு **கெழு** செல்வத்துப் பீடு **கெழு** வேந்தே! (புறம். 35-12)
3. நின் **நிழற்** பிறந்து, நின் **நிழல்** வளர்ந்த, (புறம். 38-10)
4. முதிர் **வார்** இப்பி முத்த **வார்** மணல், (புறம். 53-1)
5. முரசு **கெழு** வேந்தர் அரசு **கெழு** திருவே. (புறம். 75-12)

இரண்டாம் சீரிலும் நான்காம் சீரிலும் ஐந்து இடத்தில் வருகின்றன.

1. உண்டி **கொடுத்தோர்** உயிர் **கொடுத்தோரே:** (புறம். 18-19)
2. வல்லார் **ஆயினும்,** வல்லுநர் **ஆயினும்,** (புறம். 27-15)
3. அடுநை **ஆயினும்,** விடுநை**ஆயினும்,** (புறம். 36-1)
4. நாடன் **என்கோ?** ஊரன் **என்கோ?** (புறம். 49-1)
5. வல்லார் **ஆயினும்,** வல்லுநர் **ஆயினும்** (புறம். 57-1)

மூன்றாம் சீரிலும் ஆறாம் சீரிலும் ஒரு இடத்தில் வருகின்றன.

❖ மண் முழா **மறப்ப,** பண் யாழ் **மறப்ப** (புறம். 65-1)

**அடுத்தடுத்த அடிகளில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள்**

புறநானூற்றில் மொத்தம் 37 இடங்களில் அடுத்தடுத்த அடிகளில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் இடம்பெற்று வருகின்றன.

இவற்றில் முதல் சீரில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் 6 இடங்களில் வந்துள்ளன. அவை,

1. **உண்டி** கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே; (புறம். 18-19)
   **உண்டி** முதற்றே உணவின் பிண்டம்; (புறம். 18-20)
2. **பாண்** முற்றுக, நின் நாள் மகிழ் இருக்கை (புறம். 29-5)
   **பாண்** முற்று ஒழிந்த பின்றை, மகளிர் (புறம். 29-6)
3. **நாடு** எனப்படுவது நினதே அத்தை; ஆங்க (புறம். 35-11)
   **நாடு** கெழு செல்வத்துப் பீடு கெழு வேந்தே! (புறம். 35-12)
4. நீ (புறம். 38-5,6). 5. யாண்டு (புறம். 86-2,3) 6. தோல் (புறம். 98-10,11)

இரண்டாவது சீரில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் புறநானூற்றில் 100 பாடல்களில் 19 இடங்களில் வந்துள்ளன. அவை.

1. ஊர் **இல்ல,** உயவு அரிய, (புறம். 3-17)
   நீர் **இல்ல,** நீள் இடைய, (புறம். 3-18)
2. தன் **கதிர்** மதியம் போலவும், தெறு சுடர் (புறம். 6-27)
   ஒண் **கதிர்** ஞாயிறு போலவும் (புறம். 6-28)
3. ஏர் **உடைய** வழுக் கழஞ்சின் (புறம். 11-12)
   சீர் **உடைய** இழை பெற்றிசினே (புறம். 11-13)

4. நல் (புறம். 16-17, 18) 5. அல்லது (புறம். 20-10,11) 6. துஞ்சும் (புறம். 20-16,17) 7. வரை (புறம். 21, 1,2) 8. நின் (புறம். 24-24,25), 9.உண்மையும் (புறம். 27-11,12), 10. ஆக (புறம். 29-25,26), 11. ஞாயிற்று (புறம். 30-1,2), 12.இல் (புறம். 44-6,7) 13. ஆயின் (புறம். 44-11,12) 14. துஞ்சு (புறம். 54-13,14) 15. நிற (புறம். 58-14, 15) 16.அனையை (புறம்.

59-6,7) 17.காவலின் (புறம். 71-18,19) 18.களைந்த (புறம். 77, 1-2) 19.புரி (புறம். 93-7,8)

மூன்றாவது சீரில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள் 5 இடங்களில் வருகின்றன. அவை.

1. கோதை மார்பின் **கோதையானும்,** (புறம். 48-1)
   கோதையைப் புணர்ந்தோர் **கோதையானும்,** (புறம். 48-2)
2. என்னைக்கு ஊர் **இ.ஃ.து** அண்மையானும் (புறம். 85-1)
   என்னைக்கு நாடு **இ.ஃ.து** அண்மையானும் (புறம். 85-2)
3. 'ஆடு ஆடு'**என்ப,** ஒரு சாரோரே; (புறம். 85-3)
   'ஆடு அன்று'**என்ப,** ஒரு சாரோரே; (புறம். 85-4)
4. நோக்கும்வாய் (புறம். 38-5,6) 5. உருவின் (புறம். 58-14,14,15)

நான்காவது சீரில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள் மூன்று இடங்களில் வருகின்றன. அவை.

1. ஒரு நீ ஆகல் **வேண்டினும்,** சிறந்த (புறம். 18-15)
   நல் இசை நிறுத்தல் **வேண்டினும்,** மற்று அதன் (புறம். 18-16)
2. தேய்தல் உண்மையும், பெருகல் **உண்மையும்,** (புறம். 27-11)
   மாய்தல் உண்மையும், பிறத்தல் **உண்மையும்** (புறம். 85-1)
3. என்னைக்கு ஊர் இ.ஃ.து **அன்மையானும்,** (புறம். 85-1)
   என்னைக்கு நாடு இ.ஃ.து **அன்மையானும்** (புறம். 85-2)

ஐந்தாவது சீரில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் இரண்டு இடங்களில் மட்டுமே பயின்று வந்துள்ளன. அவை,

1. களிறே, முந்நீர் வழங்கு நாவாய் **போலவும்,** (புறம். 13-5)
   பல் மீன் நாப்பண் திங்கள் **போலவும்,** (புறம். 13-6)
2. 'ஆடு ஆடு' என்ப, ஒரு **சாரோரே;** (புறம். 85-3)
   'ஆடு அன்று' என்ப, ஒரு **சாரோரே;** (புறம். 85-4)

ஆறாவது சீரில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் ஒரே ஒரு இடத்தில் மட்டுமே இடம்பெறுகின்றன. அவை.

- ❖ சிற்றில் நல் தூண் பற்றி,‘நின் **மகன்** (புறம். 86-1)
  யாண்டு உளனோ? என வினவுதி; என் **மகன்** (புறம். 86-2)

புறநானூற்றில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு சீர்களில் திருப்புரைச் சொற்கள் ஒன்றி வருவதை அறிய முடிகின்றது. ஒன்று முதல் ஆறு சீர்களில்ஒன்றிணைந்து வருவதுடன், மாறுபட்ட சீர்களில் அமைந்திருக்கும் திருப்புரைச் சொற்களும் இப்பனுவலில் இடம் பெறுகின்றன.

**மாறுபட்ட சீர்களில் வரும் திருப்புரைச் சொற்கள்**

மாறுபட்ட சீர்களில் அமையும் திருப்புரைச் சொற்களாக 10 இடங்களில் வருகின்றன. அவை,

**முதல் சீரும் நான்காவது சீரும் (1-4)**

- ❖ **கடி** மரம் தடியும் ஓசை தன் ஊர் (புறம். 36-9)
  நெடு மதில் வரைப்பின் **கடி** மனை இயம்ப, (புறம். 39-10)

**மூன்றாம் சீரும் இரண்டாம் சீரும்: (3-2)**

- ❖ தட்டோர் அம்ம,**இவண்** தட்டோரே; (புறம். 18-29)
  தள்ளாதோர் **இவண்** தள்ளாதோரே (புறம். 18-30)

**மூன்றாம் சீரும் நான்காம் சீரும்: (3-4)**

1. இன்றே போல்க,**நும்** புணர்ச்சி; வென்று வென்று (புறம். 58-28)
   அடுகளத்து உயர்க,**நும்** வேலே; கொடுவரிக் (புறம். 58-29)
2. தலைப்பாடு அன்று,**அவன்**ஈகை; (புறம். 70-18)
   நினைக்க வேண்டா; வாழ்க,**அவன்** தாளே! (புறம். 70-19)

**மூன்றாம் சீரும் ஐந்தாம் சீரும் (3-5)**

- ❖ பிறிது தெறல் **அறியார்,** நின் நிழல் வாழ்வோரே; (புறம். 20-9)
  திருவில் அல்லது கொலை வில் **அறியார்;** (புறம். 20-10)

**நான்காம் சீரும் மூன்றாம் சீரும்**

❖ இரு மருந்து விளைக்கும் **நல்** நாட்டுப் பொருநன், (புறம். 70-9)
கிள்ளி வளவன் **நல்** இசை உள்ளி (புறம். 70-10)

**நான்காம் சீரும் ஆறாம் சீரும்**

❖ நாடன் என்கோ? ஊரன் **என்கோ?** (புறம். 49-1)
பாடு இமிழ், பனிக் கடற் சேர்ப்பன் **என்கோ?** (புறம். 49-2)

**ஐந்தாம் சீரும் நான்காம் சீரும்**

❖ அறவை ஆயின்,'நினது' எனத் **திறத்தல்;** (புறம். 44-11)
மறவை ஆயின், போரொடு **திறத்தல்** (புறம். 44-12)

❖ ஆனா ஈகை, அடு போர், அண்ணல்! **நின்** (புறம். 42-1)
யானையும் மலையின் தோன்றும்; பெரும! **நின்** (புறம். 42-2)

**ஆறாம் சீரும் ஐந்தாம் சீரும்**

❖ இரும் பனை வெண் தோடு மலைந்தோன் **அல்லன்;** (புறம். 45-1)
கருஞ் சினை வேம்பின் தெரியலோன் **அல்லன்;** (புறம். 45-2)

**பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்கள்**

புறநானூற்றில் 100 பாடல்கள் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்கள் 41 இடங்களில் வருகின்றன. இவை பாடலில் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து இடங்களில் வரும் திருப்புரைச் சொற்களாக இடம் பெறுகின்றன. இரண்டு இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள் 20 இடங்களிலும், மூன்று இடங்களில் வருவன 11 இடங்களிலும், நான்கு இடத்தில் வருவன 9 இடங்களிலும், ஐந்து இடங்களில் வருவன ஆறு இடங்களில் அமைந்திருக்கின்றன.

**இரண்டு இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள்**

1. பணியியர் **அத்தை,** நின் குடையே – முனிவர் (புறம். 6-17)
   செலியர் **அத்தை,** நின் வெகுளி – வால் இழை (புறம். 6-23)
2. துப்பு உறுவர் புறம் **பெற்றிசினே** (புறம். 11-9)
   சீர் உடைய இழை **பெற்றிசினே** (புறம். 11-13)

3. இல் (புறம். 28-1,5) 4. முற்றுக (புறம். 29-5,7) 5. நின் (புறம். 31-8,14) 6.நின் (புறம். 33-8,15) 7.என (புறம். 34-4,6) 8.கெழு (புறம். 39-8,18) 9.நின் (புறம். 40-3,6) 10.என (புறம். 43-15,19) 11.இல் (புறம். 44-6,8) 12.நின் (புறம். 50-9,11) 13. இலமே (புறம். 61-17,19) 14. நாள் (புறம். 65-6,12) 15.இலையே (புறம். 69-17,21) 6.அமர் (புறம். 71-4,6) 17.யான் (புறம். 71-16,19) 18.ஆடு (புறம். 85-3,4). 19.அவர் (புறம். 97-4,8) 20.மரபின் (புறம். 99,2,4).

### மூன்று இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள்

1. செல்லும் உலகத்துச் செல்வம் **வேண்டினும்,** (புறம். 18-13)
   ஒரு நீ ஆகல் **வேண்டினும்,** சிறந்த (புறம். 18-15)
   நல் இசை நிறுத்தல் **வேண்டினும்,** மற்று அதன் (புறம். 18-16)
2. நின்று நிலைஇயர் **நின்** நாள்மீன்: நில்லாது (புறம். 24-24)
   படாஅச் செலீஇயர், **நின்** பகைவர் மீனே (புறம். 24-25)
   நின்று மூத்த யாக்கை அன்ன, **நின்**(புறம். 24-27)
3. நின் புகழும் அன்றே (புறம். 39-4,7,10) 4.இல்லை (புறம். 51-1,2,3) 5.என (புறம். 55-8,11,12) 6.அன்ன (புறம். 55-13,14,15). 7. இலனே (புறம். 77-7,10,13) 8.நின் (புறம். 98-2,6,12) 9.என (புறம். 17-34,36,39)

### நான்கு இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள்

1. செவ் வானத்து வனப்புப் **போன்றன;** (புறம். 4-2)
   கொல்ல் ஏற்றின் மருப்புப் **போன்றன;** (புறம். 4-4)
   எருத்து வவ்விய புலி **போன்றன;** (புறம். 4-9)
   உயிர் உண்ணும் கூற்றுப் **போன்றன;** (புறம். 4-12)
2. பணியியர் அத்தை, **நின்** இடையே – முனிவர் (புறம். 6-17)
   இறைஞ்சுக, பெரும! **நின்** சென்னி – சிறந்த (புறம். 6-19)
   வாடுக, இறைவ! **நின்** கண்ணி – ஒன்னார் (புறம். 6-21)
   செலியர் அத்தை **நின்** வெகுளி – வால் இழை (புறம். 6-23)
3. அல்லது (புறம். 20-8,10,11,14) 4. நின் (புறம். 39-4,7,10,17) 5.நின் (புறம். 42-1,2,8,21) 6. ஒத்தீயே (புறம். 56-11,12,13,14) 7.நின் (புறம். 57-4,6,8,10) 8.கெழு (புறம். 58-13,17,22,32)

### ஐந்து இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள்

❖ பாண் முற்றுக, **நின்** நாள் மகிழ் இருக்கை! (புறம். 29-5)
தோள் முற்றுக, **நின்** சாந்து புலர் அகலம்! ஆங்கே (புறம். 29-7)
பெற்றனர் உவக்கும் **நின்** படை கொள் மாக்கள், (புறம். 29-17)
ஊழிற்றாக, **நின்** செய்கை! விழவில் (புறம். 29-22)
நகைப்புறன் ஆக, **நின்** சுற்றம்! (புறம். 29-25)

### ஆறு இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள்

❖ மண் முழா மறப்ப, பண் யாழ் **மறப்ப,** (புறம். 65-1)
இருங் கண் குழிசி கவிழ்ந்து இழுது **மறப்ப,** (புறம். 65-2)
சுரும்பு ஆர் தேறல் சுற்றம் **மறப்ப,** (புறம். 65-3)
உழவர் ஓதை **மறப்ப,** விழவும் (புறம். 65-4)
அகலுள் ஆங்கண் சீறூர் **மறப்ப,** (புறம். 65-5)

ஆறு இடங்களில் இடம்பெறும் திருப்புரைச் சொற்களைக் கழாத்தலையார் மட்டுமே பயன்படுத்தியுள்ளார். குறிப்பாக ‘‘மறப்ப’’ என்னும் சொல்லை தம் பாடலில் மீண்டும் மீண்டும் ஆண்டுள்ளார். தலைவன் இறந்தபின் வாழ்க்கை நடத்துதல் எளிதன்று என வருந்தி, நாடு செயலற்று வருந்தும் நிலைமையைக் குறிப்பிடும் வகையில் ‘‘மறப்ப’’ என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளன. இப்பாடல் கையறுநிலை எனும் துறையில் அமைந்துள்ளது. சொற்கள் மறித்து வரும் இயல்பு இங்கு வெளிப்படுகின்றது.

### அடைகள்

புறநானூற்றில் இடம்பெறும் ஒருசீர் அடைகள், ஓரடிக்குள் இடம்பெறும் அடைகள் சில எடுத்துக்காட்டப்படுகின்றன மற்றும் அடைக்கு முன்பின் அமையும் வாய்பாடு வகைகள் இங்கு ஆராயப்படுகின்றன.

### ஒரு சீருள் இடம்பெறும் அடைகள்

**பெருஞ்**சோற்று (புறம். 2-16)

**அருந்**திறல் (புறம். 3-18)

**கருங்**கை (புறம். 3-13)

**செந்**தொடை (புறம். 3-20)

**தண்**கதிர் (புறம். 6-27)

ஒண், வெண், செவ், இருங், அருங், நல், ஒள், கடுங், பைந், தடக் போன்ற ஓரசைச் சொற்கள் சீர்நிரப்பு அடைகளாக வருகின்றன.

**ஓரடிக்குள் இடம்பெறும் அடைகள்**

**கடுங்** கண்ண கொல் களிற்றால் (புறம். 14-1)

**ஒண்** படைக் **கடுந்** தார் முன்பு தலைக் கொண்மார் (புறம். 15-14)

**பெருந்** தண் பணை பாழ் ஆக (புறம். 16-16)

ஏம **நல்** நாடு ஒள் எரி ஊட்டினை, (புறம். 16-17)

**கருங்** கைக் கொல்லன் **செந்** தீ மாட்டிய (புறம். 21-7)

**ஓரடிக்குள் அதிகமான சீர்களில் இடம்பெறும் அடைகள்**

**தெண்** கழிமிசைத் **தீப்** பூவின் (புறம். 17-12)

**பொலந்** தோட்டுப் **பைந்** தும்பை (புறம். 22-20)

**அறு** கயமருங்கின் **சிறு** கோல் **வெண்** கிடை (புறம். 75-8)

**பெருஞ்** சீர் **அருங்** கொண்டியளே; **கருஞ்** சினை (புறம். 338-5)

**கருங்**கண் கொண்ட **நெருங்**கல் **வெம்** முலை (புறம். 345-10)

**பெயரடைக்கு முன்னும் பின்னும் அமையும் சொல்வகைகள்**

புறநானூற்றில் கபிலர் பாடல்களில் பெயரடைக்கு முன் பின் அமையும் சொல்வகைகளை ஆராயும் பொழுது மூன்று வகையான வாய்பாடுகள் இடம்பெறுகின்றன. அவ்வாய்பாடு வகைகளும் அவற்றின் நிகழ்வெண்ணிக்கையும் பின்வருமாறு குறிப்பிடுகின்றன.

| வாய்பாடு | நிகழ்வெண்ணிக்கை |
|---|---|
| 1. 0–பெ.அ-பெ | 35 |
| 2. பெ-பெ.அ-பெ | 20 |
| 3. பெ-அ.பெ.அ-பெ | 9 |

கபிலர் பாடல்களில் பெயரடைக்கு முன் அமையும் சொல் வகைகளாக பெயர், பெயரடை என்ற சொல் வகைகளும், பெயரடைகளுக்குப் பின் அமையும் சொல் வகையாக இந்த மூன்று வாய்பாடுகளிலும் பெயர்ச்சொற்களே இடம்பெறுகின்றன.

புறநானூற்றில் பெயர்ச்சொற்கள் இடைச்சொற்கள் பெயரெச்சங்கள் பெயரடைகள் எதிர்மறை வினைமுற்று இவற்றின் வருகை மிகுதியாகக் காணப்படுகின்றன. பாடாண்திணைப் பாடல்கள் அதிகமான சொல்வகைகளைப் பெற்றுக் காணப்படுகின்றன. ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றவற்றில் திருப்புரைச் சொற்களும் அடைகளும் மிகுதியாக இடம்பெறுகின்றன.

ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட 31 சொல்வகைகளின் வருகை புறநானூற்றில் நிகழ்வெண்ணிக்கை வரைபடங்களாக மாற்றப்பட்டு விளக்கப்படுகின்றன.


புறநானூறு - நூல்
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
47%
16%
7%
6%
4%
3%
3%
2%
1%
0%


புறநானூறு - திணைகள்
பாடாண் திணை
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
47%
16%
7%
6%
4%
3%
3%
2%


பொதுவியல் திணை
47%
18%
6%
6%
4%
4%
2%
2%

## வாகைத் திணை




## தும்பைத் திணை




கரந்தைத் திணை
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
47%
17%
7%
7%
3%
3%
2%
2%
2%
2%
2%
1%
1%
1%
1%
1%
0%


காஞ்சித் திணை
49%
15%
6%
6%
5%
3%
3%
2%
2%
1%
1%
1%
1%
1%
1%
0%


வஞ்சித் திணை
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
44%
16%
6%
6%
6%
4%
3%
3%
2%
1%
0%


புறநானூறு - திணைகள்
6000
5000
4000
3000
2000
1000
0
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
பாடாண் 140
பொது வியல் 73
வாகை 77
கைக்கிளை 3
தும்பை 33
கரந்தை 11
காஞ்சி 26
நொச்சி 6
வெட்சி 3
வஞ்சி 11
பெருந்திணை 5
திணை இறந்த பாட்டுக்கள் 12


புறநானூறு - துறைகள்
இயன்மொழி வாழ்த்து
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
46%
15%
7%
6%
6%
3%
3%
2%
1%
0%


கையறுநிலை
48%
17%
7%
6%
4%
4%
2%
2%
1%
0%

## அரச வாகை

பெயர் | சுட்டு | ப.பெ. | வி.ப.பெ | வி.பெ | விளி | தொ.பெ | வி.அ.பெ
பெ.அ | பெ.எ | எ.ம.பெ.எ | வினை | வி.அ | வி.மு | கு.வி.மு | எ.ம.வி.மு
வி.எ | எ.ம.வி.எ | கு.வி | வி.தொ | திரிபு | வியங் | நி.எ | சொ.உ
ஏவல் | கு.எ | அ.தொ | ஒ.கு | இ.சொ | உ.சொ | இ.இ.சொ

46% 1% 2% 0% 0% 1% 1% 1% 5% 8% 0% 3% 0% 3% 2% 0% 6% 0% 0% 0% 1% 0% 0% 0% 0% 0% 0% 1% 0% 15% 0% 0%



## புறநானூறு - திணைகள்

600
400
200
0

பெயர் சுட்டு ப.பெ. வி.ப.பெ வி.பெ விளி தொ.பெ வி.அ.பெ பெ.அ பெ.எ எ.ம.பெ.எ வினை வி.அ வி.மு கு.வி.மு எ.ம.வி.மு வி.எ எ.ம.வி.எ கு.வி வி.தொ திரிபு வியங் நி.எ சொ.உ ஏவல் கு.எ அ.தொ ஒ.கு இ.சொ உ.சொ இ.இ.சொ




புறநானூறு - புலவர்கள்
ஔவையார்
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
48%
17%
7%
6%
4%
3%
2%
1%
0%


கபிலர்
47%
17%
6%
6%
4%
4%
3%
2%
1%
0%


பரணர்
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
49%
15%
7%
6%
5%
5%
2%
2%
1%
0%


கோவூர்க்கிழார்
47%
14%
8%
6%
5%
3%
3%
2%
1%
0%


பெருஞ்சித்திரனார்
44%
17%
8%
7%
3%
3%
3%
2%
2%
1%
0%


புறநானூறு - புலவர்கள்
1000
800
600
400
200
0
பெயர்
ப.பெ.
வி.பெ
தொ.பெ
பெ.அ
எ.ம.பெ.எ
வி.அ
கு.வி.மு
வி.எ
கு.வி
திரிபு
நி.எ
ஏவல்
அ.தொ
இ.சொ
இ.இ.சொ
ஔவை
கபிலர்
பரணர்
கோவூர்
முடமோ
பெருஞ்சி

### விகிதப் பகிர்வு - விளக்கம்

புறநானூற்றில் பெயர்ச்சொற்கள் 47%, இடைச்சொற்கள் 16% காணப்படுகின்றன. அடுக்குத்தொடர் ஒலிக்குறிப்புச் சொற்கள் இணைப்பிடைச் சொற்கள் விகித அடிப்படையில் ஒத்திசைவைக் கொண்டுள்ளன. பெயர் சொல்லை ஆளும்போக்கில் வாகைத்திணையை (48%) ஒப்பிட பொதுவியல் (47%) திணையில் சொற்களின் விகிதாச்சாரம் குறைவாக உள்ளன. இதே போன்றே காஞ்சியை (47%) ஒப்பிட தும்பைத் திணையில் (39%) விகிதாச்சாரம் குறைவாக உள்ளது. கரந்தையும் (47%), வஞ்சியும் (44%), காஞ்சியும் (49%) புறநானூற்றுத் துறைகளில் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மையில் அமைந்துள்ளன. வினைச்சொல்லை ஆளும்போக்கில் வாகைத்திணையை ஒப்பிட பொதுவியலில் குறைவாகக் காணப்படுகிறது.

புறநானூற்றில் துறைகளை ஒப்பிட இயன்மொழி வாழ்த்து கையறு நிலை அரச வாகை வல்லாண் முல்லை மகட்பாற் காஞ்சி பரிசில் கடாநிலை ஆகிய துறைகள் ஒப்புநோக்கப்பட்டன. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட 31 சொல்வகைகளையும் ஆளும் முறையில் குறிப்பிடத்தக்க தனிப்போக்குகள் எதுவும் காணப்படவில்லை. வஞ்சித்துறையில் பெயரெடை, பெயரெச்சங்கள் 6% என்ற அடிப்படையில் சமவிகிதத்தைக் கொண்டுள்ளன.

கரந்தைத் திணையில் பெயரெச்சம் 7%, காஞ்சித்திணையில் பெயரெச்சம் 6% காணப்படுகிறன. சுட்டுப் பெயர்களை ஆளும்போக்கில் தும்பையும் கரந்தையும் ஒத்துள்ளன. தும்பைத் திணையில் 20% இடைச்சொற்களும், கரந்தைத் திணையில் 17% இடைச்சொற்களும் இடம்பெறுவதை வரைபடங்கள் உணர்த்துகின்றன.

புறநானூற்றுப் புலவர்களை ஒப்பிட்டு நோக்கும்போது முடமோசியார் பாடல்களில் சொற்களின் விகிதாச்சாரம் குறைவாக இடம்பெறுகின்றன. ஔவையார் பரணர் பாடல்களில் சில குறிப்பிட்ட சொல் வகைகள் ஒரே விகித அமைப்பில் காணப்படுகின்றன. ஔவையார் கபிலர் இருவரும் இடைச்சொற்களை 17% பெயரடைகளை 4% எதிர்மறைப் பெயரெச்சங்களை 6% என்று சொற்களைச் சமபோக்கில் ஆண்டுள்ளனர்.

## இயல் - நான்கு

## குறுந்தொகை : சொற்களின் வருகையும் மொழி ஆளுமையும்

குறுந்தொகையின் மொழி ஆளுமையை நூல், திணை, துறை, கூற்று புலவர் அடிப்படையில் ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது. சொற்களின் வருகை எண் தரவுகளாக மாற்றப்பட்டு வரைப்படங்களாக விளக்கப்படுகிறது. ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் போன்றவற்றின் வருகையை ஆராய்வதாகவும் இவ்வியல் அமைகிறது.

### குறுந்தொகை நூல்

திப்புத்தோளார் முதலாக அம்மூவனார் இறுதியாக 204 புலவர்களால் இயற்றப்பட்டது குறுந்தொகை. இதன் சிற்றெல்லை 4 அடி; பேரெல்லை 8 (307) அடி, 9 (391) அடியில் உள்ள பாடல்களும் இத்தொகை நூலில் இடம்பெற்றுள்ளன. நல்ல ‘‘குறுந்தொகை’’ என்ற அடையுடன் இந்நூல் சிறப்பிக்கப்படுகிறது. தொகை நூல்களில் முதலாவதாகத் தொகுக்கப்பெற்றது குறுந்தொகை. இறையனார் களவியல் உரையாசிரியர், குறுந்தொகை நானூறு என்று இந்நூலை சிறப்பித்துக் கூறுகிறார். கடவுள் வாழ்த்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். திணை, கைகோள், கூற்று, கேட்போர், பயன், மெய்ப்பாடு, எச்சம் ஆகிய அகப்பொருள் மரபுகளைக் கொண்டு, கற்போர்க்கு எளிதில் புலனாகும் வண்ணம் சிறு சிறு தொடர்களால் பாடல் அடிகள் அமைந்துள்ளன. குறுந்தொகையில் அதிகமாக 28 பாடல்களை கபிலர் பாடியுள்ளார். கபிலருக்கு அடுத்தபடியாக அதிக எண்ணிக்கையில் பாடல்களைப் பாடியவர் பரணர். பாடல்களின் எண்ணிக்கை 17.

### குறுந்தொகை - திணைகள்

வரையும் வரை சார்ந்த இடமும் குறிஞ்சி என அழைக்கப்படுகின்றது. குறிஞ்சி நிலத்தில் பூக்கும் மலர் குறிஞ்சித் திணைப் பாடல்களில் களவின் அடையாளமாக விளங்குகின்றன. இந்நிலத்தில் வாழ்வோரை கானவன், குறவன், புனவன் என்று அழைக்கின்றனர். மகளிரைக் கொடிச்சி என்றும், தலைமகளை நாடன், வெற்பனென்னும் திணை நிலைப் பெயர்களால் குறிப்பிடுகின்றனர். குறவர்

முருகனையும் மலையர மகளிரையும் வழிபடுவர். குறிஞ்சி நிலத்துக்கு வளப்பத்தைத் தருவது அருவி ஆகும். அருவியின் மலைச்சாரலில் காந்தள், வேங்கை மரம் முதலியவைகள் இயல்பாகவே வளர்கின்றன. அருவியின் ஓசை கேட்பதற்கு இனிமையாக உள்ளதால், முழவின் ஒலியையும் முரசின் முழக்கையும் உவமையாகக் கூறுகின்றனர். தலைவி அருவியை முன்னிலைப்படுத்திக் கூறுவதாகக் குறுந்தொகை செய்யுட்கள் அமைந்துள்ளது.

புறவும் புறவு சார்ந்த இடமும் முல்லை ஆகும். முல்லை என்பது அழகான வெண்ணிற மலரைக் குறிக்கும் பூவாகும். மகளிர் முல்லையைத் தம்முடைய இல்லத்தின் தோட்டத்தில் நட்டு வைக்கும் இயல்புடையவர்களாகக் காணப்படுகின்றனர். தங்களின் கற்பு நெறிப்பட்ட வாழ்வின் அடையாளமாக முல்லை மலரை மகளிர் சூடிக்கொள்கின்றனர். முல்லை நிலம் கார்காலத்தில் வளம் பெற்றுத் திகழ்வதாக அமைகிறது. இந்நிலத்தில் செம்மண் மிகுதியாக பரந்திருப்பதால், இதனைச் செம்புலம் என்று அழைக்கின்றனர். இங்குள்ள ஊரைச் சீறூரென்று குறிப்பிடுகின்றனர். முல்லை நிலத்தில் வாழ்வோரை இடையர் என்று அழைக்கப்படுகின்றனர். இவர்கள் ஆடுகளையும், பசுக்களையும் மேய்ப்பவராகவும் நிலத்தை உழுது வரகு முதலியவற்றை விதைப்பவராகவும் விளங்குகின்றனர். மழை பெய்யும் காலத்தில் தலையில் கவிழ்ப்பதற்குப் பறியோலையே பயன்படுத்துகின்றனர். இரவு நேரங்களில் ஆடுகளோடு மேய்ப்புலத்திலேயே தங்கிவிடுதலும் இவர்களின் வழக்கமாக அமைகிறது. முல்லை நில மக்கள் பால்சோற்றினை உணவாக உட்கொள்ளும் தன்மையுடையவராகக் காணப்படுகின்றனர்.

பழனமும் பழனம் சார்ந்த இடமும் மருதம் என்று பகுக்கப்படுகின்றன. மருதம் ஒரு குறிப்பிட்ட மரத்தைக் குறிப்பதாகும். மருதம் ஆற்றங்கரையில் வளரும் ஒரு மரமாகும். இது ஆற்றங்கரையில் வளர்வதால் உழவு நிலங்களுக்குரிய கருப்பொருளாக அமைகின்றது. மருத நிலத்து மக்கள் நாகரீக வாழ்க்கை மேற்கொள்ளுபவராக திகழ்கின்றனர். இந்நிலத் தலைவனை ஊரன், மகிழ்நன் என்று அழைக்கின்றனர். மருத திணைக்குரிய பாடல்களில் தலைவன், தலைவி, தோழி, பரத்தை ஆகியோர் இடம்பெறுகின்றனர். இவற்றில் தலைவன், தோழி கூற்றுக்களும் செயல்பாடுகளும் மிகுதியாக அமைந்திருக்கின்றன.

மருதநில மக்களின் வரைவில் மன்றல் என்னும் முரசு முழக்கப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

திரையும் திரை சார்ந்த இடமும் நெய்தல் என்று குறிப்பிடப்படுகின்றது. நெய்தல் மலர் நீல நிறமுடையதாகும். இம்மலர் பெண்களின் கண்களுக்கு ஒப்புமையாகக் கூறப்படுகின்றது. நெய்தல் மலர் கடற்கரைப் பகுதிகளில் அதிகமாகக் காணப்படுகின்றது. கடற்கரையையும், கடற்கரைச் சோலையையும் கானல் என்று அழைக்கின்றனர். உப்பளங்கள் கடற்கரையில் அதிகமாக அமைந்துள்ளன. அவற்றை உப்புவிளைக் கழனி என்று குறிப்பிடுகின்றோம். நெய்தல் நிலமகளிர் உப்பை விற்று அதற்கு மாற்றாக வெண்ணெல்லைப் பெற்று உண்ணும் வழக்கம் காணப்படுகின்றது. நெய்தல் நிலத் தலைவன் கொண்கன், சேர்ப்பன், துறைவன், புலம்பன் என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றனர்.

சுரமும் சுரம் சார்ந்த இடமும் பாலை என்று அழைக்கப்படுகின்றது. பாலை சான்ற சுரம் சேர்ந்து ஒருசார் என மதுரைக்காஞ்சி (அடி-314) குறிக்கின்றது. தொல்காப்பியர் பாலை நிலத்தை நடுவுநிலைத் திணை எனக் குறிப்பிடுகின்றார். பாலை என்பது ஒரு வகை மரத்தைக் குறிப்பிடுகின்றது. இது வறண்ட நிலப் பகுதியில் காணப்படும் மரமாகும். பாலை என்பது பிரிவின் குறியீடாகும். ஒரு வகை பண்ணையும் பாலை என்று குறிப்பிடுகின்றோம். பாலை நிலத்தில் வெம்மை மிகுதியாக காணப்படுவதால் நீர் நிலைகள் வற்றியும் மரங்கள் உலர்ந்தும் விலங்கினங்கள் வலிமையற்றும் காணப்படுகின்றன. பாலை நிலத்தில் நெல்லி மரங்கள் வளர்க்கப்பட்டிருக்கும் அதனை, ‘‘அறந்தலைப்பட்ட நெல்லி’’ என்று புலவர் கூறுகின்றார். வழிப்போவார் அதனை உண்டு தாகம் தணித்துக்கொள்வர். உடலும் உள்ளமும் உயிரும் வெம்மையால் தீகின்ற பாலைநிலத்தில் அன்பும் அறமும் பிற திணைகளைக் காட்டிலும் மேலோங்கி நிற்கின்றன. பாலை நிலத்திண்கண் செல்வோர் ஒரு துணையுமின்றிப் பருந்தின் ஒலியை உசாவுத்துணையாகக் கொள்கின்றனர். பாலை நிலத்து வாழ்வாரை எயினர் என்று அழைக்கின்றனர்.

**குறுந்தொகை –துறைகள்**

திணை சார்ந்த நிகழ்வுகள், செயல், சூழல், மன உணர்வு ஆகியவற்றை வெளிப்படுத்துவன துறை ஆகும். வேண்டல், அறிவுறுத்தல்,

நயத்தல், அழுங்குவித்தல் போன்ற மொழிவழிச் செயல்பாடுகளும் துறை சார்ந்து வெளிப்படுகின்றன. இவற்றின் அடிப்படைகளைக் கொண்டு நோக்கும் பொழுது மொழிப் பயன்பாடு மாறுபடுவதற்கான களம் அமைகிறது. குறுந்தொகையில் இடம்பெறும் சில குறிப்பிட்ட துறைகள் பற்றிய குறிப்புகள் பின்வருமாறு சுட்டப்படுகின்றன.

**இயற்கைப் புணர்ச்சி**

தலைவனும் தலைவியும் நல்வினையால் மனம் உடன்பட்டு தாமே கூடுதல் இயற்கைப் புணர்ச்சி ஆகும்.

**இடந்தலைப்பாடு**

இயற்கைப் புணர்ச்சியில் தலைவன் முன்னர் தான் தலைவியைச் சந்தித்த இடத்தில் மீண்டும் அதே இடத்தில் தலைவியைக் கூடுதல் இடந்தலைப்பாடு ஆகும்.

**பாங்கற்கூட்டம்**

பாங்கனின் உதவியால் மூன்றாம் நாள் தலைவன் தலைவியைக் கூடுதல் பாங்கற் கூட்டம் ஆகும்.

**பாங்கியிற் கூட்டம்**

பாங்கியின் உதவியினால் தலைவியைத் தலைவன் கூடும் கூட்டம் பாங்கியற் கூட்டம் ஆகும்.

**மடலேற்றம்**

மடலேற்றம் என்பது தான் விரும்பிய தலைவியை தலைவன் பெறாத நிலை வரும்போது பனை ஓலையால் குதிரை போன்ற உருவம் அமைத்து தன் படத்தையும் தலைவியின் படத்தையும் எழுதிக் கையில் வைத்துக்கொண்டு வீதியில் செல்லுதல்.

**பகற்குறி**

பகற்காலத்தில் வீட்டிற்கு வெளியே தலைவன் தலைவியைச் சந்தித்துப் பேசுதல் பகற்குறி என்றழைக்கப்படுகிறது. இச்சந்திப்பில்

இடையூறு ஏற்படாமல் தோழி தலைவனுக்கு அவ்வப்பொழுது குறியிடம் பெயர்த்துக் கூறுகின்றாள்.

**இரவுக்குறி**

தலைவியின் இல்லத்தின் எல்லைக்குள் அமைவது இரவுக்குறியாகும்.

**இரவுக்குறியிடையீடு**

தலைவன் தலைவியைச் சில சமயம் காண இயலாமல் சென்றுவிடுவான். காவல் மிகுதியால் தலைவி தலைவனைக் காணுதல் அரிதாகும். இச்சூழலில் தலைவன் மிக வருந்தி மீள்வான். இவ்வாறு இரவுக்குறியிடத்தே தலைவன் தலைவியைக் காணாமல் தடைப்படுதலை ‘‘இரவுக்குறியிடையீடு’’ என்பர்.

**வரைவுகடாவுதல்**

களவில் கூடும் தலைவனை, விரைந்து வந்து தலைவியை மணந்து கொள்ள வேண்டும் எனத் தோழி வற்புறுத்துவது வரைவு கடாவுதல் எனப்படும்.

**அறத்தொடு நிற்றல்**

தலைவி தன் களவைத் தோழிக்கும் பிறருக்கும் முறையே வெளிப்படுத்துதல் அறத்தொடு நிற்றலாகும். திருமணம் எதிர்கொள்ளாத நேரத்திலும், பிறர் வரைவு நேரும் இடத்திலும் காவல் கைமிகுந்த இடத்திலும் அறத்தொடு நிற்றல் நிகழ்கின்றது.

**வரைவு**

தலைவனுக்கும் தலைவிக்கும் நடைபெறும் திருமணம் வரைவு என அழைக்கப்படுகின்றது. இன்னானுக்கு இன்னாள் உரிமையுடையவள் எனப் பலருக்கும் அறிவிக்கின்ற நிகழ்ச்சி வரைவு ஆகும்.

## குறுந்தொகை - கூற்றுகள்

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட குறுந்தொகைக் கூற்றுகள் சார்ந்த குறிப்புகள் சில பின்வருமாறு விவரிக்கப்படுகின்றன.

### தலைவன்

தலைவன் தலைவியின் பண்பு நலன்களையும் அழகையும் தலைவியின் நற்குணங்களையும் பாராட்டும் வகையிலும் தலைவன் கூற்றுகள் இடம்பெறுகின்றன. பொருள் வயிற்பிரிய எண்ணிய தலைவன் தன் கருத்தைத் தலைவிக்கு உணர்த்துவதாகவும் தலைவன் கூற்று அமைகிறது. ஊழின் வன்மையால் இணைந்த நாம் இனி நம்மிடையே பிரிவு என்பது காண்பது அரிது என்று தன் காதலை வெளிப்படுத்தும் வகையில் தலைவியைப் பிரிய நேரிடும்போது தன் மிகுந்த துன்பத்தைத் தோழியிடம் கூறுவதாகவும், தலைவியிடம் தான் கொண்ட அன்பினையும், காதலினையும், தலைவியின் நறுமையும் மென்மையும் நன்னிறத்தையும் நினைத்து நினைத்து தன் நெஞ்சிற்குக் கூறி இரங்கும் வகையிலும் தலைவனது கூற்றுகள் காணப்படுகின்றன. தலைவியைப் பிரிந்துச் சென்ற தலைவன் துயிலும் பொழுது கனவில் தலைவியைக் கண்டு பிரிவாற்றாமலும், தலைவியைத் தன்னுடன் சேர்த்து வைக்க வேண்டியும், களவுக் காலத்தில் ஏற்படும் சிறு சிறு இடையூறுகளுக்கு வருந்துவதாகவும் மடலேறுவதாகவும் தலைவன் கூற்றுகள் அமைகின்றன.

### தலைவி

தலைவிக் கூற்றானது தலைவனை எண்ணி வருந்தும் வகையில் மிகுதியான பாடல்கள் அமைந்துள்ளன. தலைவி தன் காதலை வெளிப்படையாகவோ, தலைவனைப் புகழும் நோக்கிலும் இவளது கூற்றுகள் அமையாது. தலைவன் இரவுக்குறியில் வரும்போது வழியில் ஏற்படும் இன்னல்களை நினைத்தும், களவினால் உண்டாகும் துன்பங்களை எண்ணியும் அச்சமுறும் வகையில் தலைவியின் கூற்றுகள் அமைந்திருக்கின்றன. தலைவனைச் சந்திக்க முடியாமல் இச்செறிப்பு நேரத்தில் தோழியின் உதவியை எதிர்பார்த்தும், உடன்போக்கு மேற்கொண்டபோது தன்னை தேடாமலிருக்கும்படியும் கூறுவதாகத் தலைவி கூற்றுகள் இடம்பெறுகின்றன. தலைவன் பிரிந்த காலத்தில் தலைவியின் மேனியில் பசலை ஏற்பட்டதை அறிந்து தலைவி தோழியை நோக்கி

தலைவன் தன்னுடன் இருக்கும் நேரங்களில் இத்தகைய பசலை ஏற்படவில்லை என்று தன் மனநிலையை வெளிப்படுத்துகிறார். தன் மனதை தானே நொந்து கொள்ளும் வகையிலும், தலைவனது பருவ வரவு கண்டு உள்ளம் மகிழும் வண்ணமும், தனது மனநிலையைத் தோழிக்கு உணர்த்துவதாகவே தலைவியின் கூற்றுகள் பெரும்பான்மையாகக் காணப்படுகின்றது.

## தோழி

தோழி தலைவியுடன் மிகவும் ஒன்றிய நெஞ்சினையுடையவளாகக் காணப்படுகிறாள். தலைவியின் களவொழுக்கத்தில் தலைவனுக்குக் குறியிடம் கூறுதலும் குறியிடம் பெயர்தலும் வரைவு கடாவியும் தாய்க்கு அறத்தொடு நின்றும் இல்வாழ்க்கையில் துணைபுரிந்தும் தலைவன் பிரிந்த காலத்தில் தலைவியை ஆற்றுவிக்கும் வகையிலும் தோழியின் கூற்றுகள் காணப்படுகின்றன. தோழி தன் இனிய சொற்களாலும் அச்சுறுத்தும் சொற்களாலும் தலைவனிடம் விரைவில் தலைவியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தும் வகையில் சில பாடல்கள் அமைந்துள்ளன. தோழி தலைவியின் திருமணத்தை நடத்தி செல்லும் திருமண வழிகாட்டியாகத் திகழ்கிறாள். தோழியின் கூற்றுகளில் அறத்தொடு நிற்றல் என்னும் துறை எல்லாத் துறைகளிலும் முதன்மையானதாக விளங்குகின்றது. தலைவியின் களவுக்காதலை முறைப்படி கூறும் அறிவு நுட்பமும் செயல்திறனும் தோழிக் கூற்றுகளில் வெளிப்படுத்தப்படுகின்றன. நாணத்தாலும் அடக்கத்தாலும் தன் மன உணர்வுகளை வெளிப்படுத்த இயலாத போது தோழி பேசுகிறாள். ஒழுக்க நெறிக் கருத்துக்களை தோழி கூறுகையில் தாயைப் போலவே முதியவளாக விளங்குகிறாள். பிரிவு காலத்தில் தலைவன் குறித்த நேரத்தில் வந்துவிடுவான் என்று தோழி தலைவியை ஆற்றுவிப்பாளாகக் காணப்படுகிறாள். தலைவன் தான் சொன்ன காலத்தில் வந்தமையால் தோழி தலைவனை அன்போடு பாராட்டுவாள். தலைவன் புனலாடல், களியாட்டு, ஆடல்பாடல் ஆகியவற்றைப் பரத்தையோடு மேற்கொள்வதும் தலைவனது தீய செயல்களின் காரணமாகத் தலைவியின் மன துயரை தோழி கூறுபவளாகவும் விளங்குகிறாள்.

### பரத்தையர்

பரத்தையரில் இற்பரத்தை காதற்பரத்தை, சேரிப்பரத்தை என்று மூன்று வகையர் உண்டு. இப்பரத்தையர்கள் தலைவனோடு தேரில் சென்று நீராடுதல், தம்மிடத்தே ஈடுபடத்செய்தல் தலைவியைப் பழித்துக் கூறும் இயல்பினையுடையவராகக் காணப்படுவர். பரத்தை விறலியிடம் தலைவி மீது கொண்ட அன்பினால் தலைவனைத் தலைவியிடம் செல்லுமாறும், சில பாடல்களில் பரத்தையின் நல்லெண்ணமும் தூய காதலும் வெளிப்படுத்தப்படுகின்றன. பரத்தை தன் நலன்களைக் கருதாமல் தலைவனைக் கண்டித்துப் பேசும் பாடல்களும் பரத்தைக் கூற்றில் அமைந்துள்ளன.

### செவிலி

செவிலியானவள் நற்றாயின் தோழியாகவும் தலைவியின் உயிர்த்தோழிக்குத் தாயாகவும் விளங்குகிறாள் என்று இலக்கண நூல்கள் கூறுகின்றன. செவிலி தலைவியிடம் பேரன்பு கொண்டவளாகவும் அவளைப் பாதுகாத்தும் வேண்டிய உணவுகளைக் கொடுத்தும் இரவு நேரங்களில் தன்னுடனே தூங்கச் செய்தும் காவல் புரிந்தும் அவள் பிரிந்த காலத்தில் வருந்தித் தேடிச் சென்றும் அவளுடைய இல்வாழ்க்கையைக் கண்டு இன்புற்று மகிழ்பவளாகவும் காணப்படுகிறாள். தலைவி ஆம்பல் மலரைக் காட்டிலும் மிகவும் மென்மையானவள் அத்தகைய தலைவியானவள் பாலை வழியில் சென்றதை எண்ணி தாய்க்கு நிகராக செவிலி வருத்தமடைகிறாள். நாணமும் அச்சமும் கொண்ட தலைவி சுரத்திடைச் செல்வதற்குத் துணிந்ததை எண்ணியும் தலைவியினை நினைத்து இரங்குவதாயும் செவிலிக் கூற்றுப் பாடல்கள் அமைந்துள்ளன.

### நற்றாய்

நற்றாயும் செவிலியும் வேறுபாடின்றி ஒரே குணநலனுடன் காணப்படுகின்றனர். தலைவி உடன் போக்கு மேற்கொண்ட போது தன் மகள் பாலை நிலத்தின் கண் எவ்வாறு செல்வாள் என்று தன் துயரை வெளிப்படுத்தும் போது தாயின் எல்லையற்ற அன்பு புலப்படுகின்றது. மகள் தன்னைவிட்டு பிரிந்து சென்றாலும் அவள் மீது உள்ள அன்பும் அக்கறையும் வெளிப்படும் வகையில் பாலை வெம்மை என்பதனால் மழை வர வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறாள். தலைவியின்

உடன்போக்கைச் சற்றும் எதிர்பாரதவளாகவும் உடன்போக்கை மேற்கொண்ட தலைவியின் செயல் நேர்மையானதாகவும் தனது மகள் காதலனுடன் திரும்பிவர வேண்டும் என்றும் நற்றாயின் கூற்றுகள் அமைந்துள்ளன.

**பாங்கன்**

பாங்கனது கூற்று பொதுவாகவே காதலை இடித்துரைப்பதாகவும் தலைவனது உளநலத்தினை கருதுவதாகவும் இடம்பெறுகின்றன. தலைவன் தலைவியின் நினைவினால் உள்ளம் அழிந்து, உடல் மெலிந்து தலைவனது தளர்ந்த உடலினைக்கண்டு பாங்கன் தலைவியிடம் காமத்தின் இயல்பினைக் கூறுவதாகப் பாங்கன் கூற்றுகள் அமைந்துள்ளன.

**பாணன்**

பாணன் கூற்றுகள் மிக குறைவானதாகவே காணப்படுகின்றன. பாணன் கூற்று இரு நிலைகளில் இடம்பெறுகின்றன. அவை, தலைவனிடத்திலிருந்து கொண்டு வரும் செய்தியை மறுப்பதாகவும், பாசறைகளில் தலைவனிடம் பேசுவதாகவும் அமைந்துள்ளன. கூதிர் பருவத்தில் வெள்ளப்பெருக்கிடையே பாசறையில் தலைவனுக்குச் செய்தி கூறும் வகையிலும் பாணன் கூற்றுகள் அமைந்துள்ளன.

**குறுந்தொகை - புலவர்கள்**

குறுந்தொகையில் 401 பாடல்களை 206 புலவர்கள் பாடியுள்ளனர். அவர்களுள் குறிப்பிட்ட சில புலவர்களைப் பற்றிய சுருக்கமான குறிப்புகள் பின்வருமாறு வழங்கப்படுகின்றன.

**அள்ளூர் நன்முல்லையார்**

‘‘பிண்ட நெல்லின் அள்ளூர் அன்ன’’ என்று தன் ஊரை உவமைப்படுத்திய புலவர் ஆவார். இவரை கவர்ந்த அக இலக்கிய மாந்தர் தலைவி. குறுந்தொகையில் 9 பாடல்களும் அகநானூற்றில் ஒன்றும் புறநானூற்றில் ஒன்றுமாகப் பாடியுள்ளார்.

**இளங்கீரனார்**

இவர் அகப்பாடல்களை மட்டுமே பாடியுள்ளார். தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது என்ற ஒரு துறை பற்றியே பெரும்பாலான பாடல்கள் அமைந்துள்ளன. அகநானூற்றில் 9 பாடல்களும் குறுந்தொகையுள் 1 பாடலும் நற்றிணையில் 6 பாடல்களும் இவர் இயற்றியதாகும்.

**உலோச்சனார்**

உலோச்சனார் நெய்தல் திணையை நன்கு அறிந்தவர். நெய்தல் திணைப்பாடுவதில் வல்லவர். இவர் தோழிக்கூற்றுகளை அதிகமாகப் பாடியுள்ளார். அகநானூற்றில் 7 பாடல்களும் குறுந்தொகையில் 4 பாடல்களும் புறநானூற்றில் 3 பாடல்களும் நற்றிணையில் 20 பாடல்களும் இவர் இயற்றியதாகும்.

**குன்றியனார்**

எட்டுத்தொகையுள் மொத்தம் 10 பாடல்களை இயற்றியுள்ளார். இவர் அகப்பாடல்கள் மட்டுமே புனைந்துள்ளார். முல்லைத்திணைத் தவிர்த்து ஏணைய நான்கு திணைகளிலும் பாடியுள்ளார். இவரின் பாடல்கள் வரைவை நோக்கியப் பாடல்களாகக் காணப்படுகின்றன. குறுந்தொகையில் 6 பாடல்களும் நற்றிணையில் 2 பாடலும் அகநானூற்றில் 2 பாடல்களும் இவர் இயற்றியதாகும்.

**குறுந்தொகை : சொற்களின் வருகை**

குறுந்தொகையில் அமைந்துள்ள 401 பாடல்களின் சொல் வருகையும்நூல் அடிப்படையில் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**குறுந்தொகை சொற்களின் வருகை**

**அட்டவணை 4.1**

குறுந்தொகையில் இடம்பெறும் சொற்களின் வருகை இங்கு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன.

| வ.எண் | சொல் வகைகள் | நிகழ்வெண்ணிக்கை |
|---|---|---|
| 1 | பெயர் | 6310 |
| 2 | சுட்டு | 186 |
| 3 | ப.பெ | 423 |
| 4 | வி.ப.பெ | 7 |
| 5 | வி.பெ | 80 |
| 6 | விளி | 178 |
| 7 | தொ.பெ | 209 |
| 8 | வி.அ.பெ | 149 |
| 9 | பெ.அ | 721 |
| 10 | பெ.எ | 983 |
| 11 | எ.ம.பெ.எ | 71 |
| 12 | வினை | 215 |
| 13 | வி.அ | 25 |
| 14 | வி.மு | 718 |
| 15 | கு.வி.மு | 171 |
| 16 | எ.ம.வி.மு | 55 |
| 17 | வி.எ | 728 |
| 18 | எ.ம.வி.எ | 55 |
| 19 | கு.வி | 20 |
| 20 | வி.தொ | 50 |
| 21 | திரிபு | 30 |
| 22 | வியங் | 76 |
| 23 | நி.எ | 107 |
| 24 | சொ.உ | 11 |
| 25 | ஏவல் | 16 |
| 26 | கு.எ | 102 |
| 27 | அ.தொ | 17 |
| 28 | ஒ.கு | 21 |
| 29 | இ.சொ | 2486 |
| 30 | உ.சொ | 34 |
| 31 | இ.இ.சொ | 3 |

மேற்காணும் அட்டவணை, ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட சொல் வகைகள் குறுந்தொகையில் அமைந்துள்ள போக்கைக் காட்டுகிறது.

குறுந்தொகையில் 6,310 பெயர்ச்சொற்கள் இடம்பெறுகின்றது. பெயர்ச்சொற்கள் மிகுதியாக அமைவது மொழியின் பண்பாக அமைகின்றது. பெயர்ச்சொற்களை அடுத்து 2,533 இடைச்சொற்கள் குறுந்தொகையில் ஆளப்பட்டுள்ளன. பெயரெச்சங்கள் மிகுதியாக காணப்படுகின்றன. எதிர்மறை வினைமுற்றும், எதிர்மறை வினையெச்சமும் ஒத்த போக்கினை உடையதாக அமைகின்றது. பெயரெச்சங்களை விட பெயரடைகளின் வருகை மிக குறைவானதாக அமைந்துள்ளது. வினாப்பெயரும், வியங்கோளும் சம அளவில் இடம்பெறுகின்றன. பெயரடையும், வினையெச்சமும் ஏறக்குறைய ஒத்த போக்கைக் கொண்டுள்ளன. பதிலீட்டுப்பெயர்கள் மாறுபட்ட போக்கினையும், ஒலிக்குறிப்புச் சொற்களும் வினையடைகளும் ஒரே போக்கில் ஆளப்பட்டுள்ளன. வினைச் சொற்களும் தொழிற்பெயரும் சற்று ஒத்த நிலையில் அமைந்துள்ளன. வினைமுற்றுகள் சற்று மிகுதியாக இடம்பெறுகின்றன.

ஏவலும், அடுக்குத்தொடரும் சற்று மாறுபட்ட தன்மையில் அமைந்திருக்கின்றன. குறையெச்சமும், நிபந்தனையெச்சமும் சற்று ஒத்த நிலையில் அமைந்துள்ளன. பெயரடைகளும் வினையெச்சமும் ஒத்த தன்மையில் காணப்பட்டாலும் எதிர்மறை வினையெச்சங்கள் குறுந்தொகையில் மிக குறைவாக ஆளப்பட்டுள்ளன. பெயரெச்சங்களின் வருகை மிகுதியாக இடம்பெறகின்றன. எதிர்மறைப் பெயரெச்சங்களின் வருகை மிக குறைவு. தொழிற்பெயர் வினையாலணையும் பெயர் இரண்டும் முரண்பட்ட நிலையில் அமைந்துள்ளன. வினைத்தொகை மிகுதியாக இடம்பெறுகின்றன. திரிபு குறைவாக ஆளப்பட்டுள்ளன.

ஏவல், அடுக்குத்தொடர் போன்றவை இலக்கிய வழக்கில் குறைவாகக் காணப்படுவதால் அவற்றின் வருகையும் குறுந்தொகையில் குறைவாக அமைந்துள்ளன.

எதிர்மறைப் பெயரெச்சம் எதிர்மறை வினையெச்சம் போன்ற சொல் வகைகள் மிக குறைவாக ஆளப்பட்டுள்ளன. குறுந்தொகை அகநூல் என்பதனால் தலைவன் தலைவியின் காதல், திருமணம் முதலியவைகளை

ஏற்கும் வகையில் நேர்மறையான செய்திகளே இடம்பெறுகின்றன. எனவே எதிர்மறையான சொற்கள் குறைவாக இடம்பெற்றிருக்கின்றன.

குறுந்தொகையில் 178 விளிப்பெயர்கள் இடம்பெறுகின்றன. அவற்றில் அண்மை விளி 154, சேய்மை விளி 24 ஆகும்.

**அண்மை விளிகள்**

நாட (குறுந்.18-2), சேர்ப்ப (குறுந்.49-2), மகிழ்ந (குறுந்.53-1), கொண்க (குறுந்.114-2), பெரும (குறுந்.124-2), பாக (குறுந்.250-4), துறைவ (குறுந்.303-2), வெற்ப (குறுந்.355-5), பாண (குறுந்.359-1),வேல(குறுந்.362-1).

**சேய்மை விளிகள்**

நெஞ்சே (குறுந்.11-4), மகளே (குறுந்.23-1), நிலவே (குறுந்.47-4), கனவே (குறுந்.147-4), மகனே (குறுந்.156-1), முல்லையே (குறுந்.162-3), கடலே (குறுந்.163-1), நமரே (குறுந்.281-6).

நாட! சேர்ப்ப! மகிழ்ந! போன்ற விளிப்பெயர்கள் குறுந்தொகையில் ஆளப்பட்டுள்ளன. மலைப்பக்கத்து நாடனே, கடற்கரைத் தலைவனே என்று திணைநிலப் பெயர்களைச் சார்ந்து விளிப்பெயர்கள் இடம்பெறுகின்றன.

நெஞ்சே! நிலவே! கனவே! கடலே! முதலிய விளிப்பெயர்கள் தலைவன், தலைவி இருவரும் கூறும் வகையில் அமைந்துள்ளன. கனவே! தன் காதலியை கனவில் காட்டியதால் தலைவன் கனவை விளித்துப் பாராட்டுகின்றான். கடலே! தலைவி தன் ஆற்றாமையை கடலின் மேல் ஏற்றிக் கூறும் வகையிலும் விளிப்பெயர்கள் குறுந்தொகையில் ஆளப்பட்டுள்ளன.

குறுந்தொகையில் இடம்பெறும் வியங்கோள் வினைமுற்றுகள் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

வாழியர் (குறுந்.19-3), பாடுக (குறுந்.23-4), வருக (குறுந்.56-4), செல்க (குறுந்.141-2), கூறுக (குறுந்.170-1), அமைக (குறுந்.175-7),முடுக (குறுந்.189-2), உண்க (குறுந்.201-1), உறுக (குறுந்.248-2), தீர்க (குறுந்.251-4), கழிக (குறுந்.325-3), பெறுக(குறுந்.389-2), உணீஇயர் (குறுந்.27-4), செலீஇயர் (குறுந்.117-3), பெறீஇயர் (குறுந்.367-2).

வருக, செல்க, கூறுக, அமைக, உண்க, தீர்க போன்ற வியங்கோள் வினைமுற்றுகள் குறுந்தொகையில் பயன்படுத்தப்பட்டுள்ளன. வளையல் அணிந்த தலைவி தன்னுடன் சேர்ந்து உண்பதற்கு வருவாளாகுக, நம் மனையில் உள்ளவன் அமுதத்தை உண்ண வேண்டும் என்றும் தலைவனை நெஞ்சே நீ வாழ்வாயாக என்றும் தலைவன் தலைவி மனம் விரும்பியவாறு அமைய வேண்டும் தனிமை கழிய வேண்டும் என்று கூறும் வகையில் வியங்கோள் வினைமுற்றுகள் அமைந்துள்ளன.

குறுந்தொகையில் இடம்பெறும் சில நிபந்தனையெச்ச வடிவங்கள் கீழே குறிப்பிடப்படுகின்றன.

எனின் (குறுந்.77-2), போதின் (குறுந்.191-5), தரின் (குறுந்.196-4), கேட்பின் (குறுந்.253-1),கடவின் (குறுந்.276-6), கடையின் (குறுந்.340-1), ஆடின் (குறுந்.354-2), சேறலின் (குறுந்.355-3), செப்பின் (குறுந்.368-3), இருப்பின் (குறுந்.370-1), கிடப்பின் (குறுந்.370-3), சேரின் (குறுந்.370-5)

இருப்பின், கிடப்பின், சேரின் என்ற நிபந்தனையெச்ச வடிவங்களை வில்லகவிரலினார் குறுந்தொகை 370வது பாடலில் மூன்று இடங்களில் கையாண்டுள்ளார். மற்ற புலவர்கள் ஒன்று, இரண்டு இடங்களில் மட்டுமே நிபந்தனையெச்சங்களைப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

**குறுந்தொகையில் இடம்பெறும் ஒலிக்குறிப்புச் சொற்கள்**

நள்ளென் (குறுந்.6-1, குறுந்.160-4, குறுந்.163-5) நள்ளென (குறுந்.118-2) கல்லென் (குறுந்.179-1, குறுந்.311-3), கல்லென்றவ்வே (குறுந்.24-6), தவ்வென (குறுந்.59-4, குறுந்.356-4), இழுமென (குறுந்.345-6, குறுந்.351-3), புல்லென் (குறுந்.177-2, குறுந்.183-5), புல்லென்று (குறுந்.19-2, குறுந்.41-5), ஆஅ/ஒல் (குறுந்.28-3), துட்கென்றது (குறுந்.157-2), பையென (குறுந்.177-4), ஐ (குறுந்.261-4), கல்லென (குறுந்.262-1), மெல்லென் (குறுந்.278-2).

புல்லென், பையென என்ற இரண்டு ஒலிக்குறிப்புச் சொற்களை உலோச்சன் மட்டுமே குறுந்தொகையில் 177-வது பாடலில் கையாண்டுள்ளார். மற்ற புலவர்கள் எவரும் இரண்டு ஒலிக்குறிப்புச் சொற்களை தம்முடைய பாடல்களில் பயன்படுத்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## குறுந்தொகை : சொற்களின் வருகை – திணைகள்

குறிஞ்சியில் 144 பாடல்களும், முல்லையில் 45 பாடல்களும் மருதத்தில் 50 பாடல்களும், நெய்தலில் 70 பாடல்களும், பாலையில் 92 பாடல்களும், குறுந்தொகையில் அமைந்துள்ளன. சொற்களின் வருகை திணை அடிப்படையில் இங்கு ஒப்பீட்டு ஆராயப்படுகின்றன.

### குறுந்தொகை சொற்களின் வருகை – திணைகள்
### அட்டவணை 4.2

திணை அடிப்படையில் சொற்களின் வருகை இங்கு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன.

| வ.எண் | | குறிஞ்சி 144 | முல்லை 45 | மருதம் 50 | நெய்தல் 70 | பாலை 92 |
|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 2273 | 722 | 772 | 1060 | 1483 |
| 2 | சுட்டு | 72 | 17 | 24 | 33 | 40 |
| 3 | ப.பெ | 153 | 38 | 68 | 80 | 84 |
| 4 | வி.ப.பெ | 1 | 2 | 2 | 2 | 0 |
| 5 | வி.பெ | 38 | 6 | 13 | 6 | 17 |
| 6 | விளி | 65 | 18 | 25 | 34 | 36 |
| 7 | தொ.பெ | 87 | 18 | 23 | 32 | 49 |
| 8 | வி.அ.பெ | 36 | 29 | 8 | 20 | 56 |
| 9 | பெ.அ | 272 | 89 | 82 | 122 | 156 |
| 10 | பெ.எ | 329 | 128 | 120 | 180 | 226 |
| 11 | எ.ம.பெ.எ | 28 | 7 | 10 | 12 | 14 |
| 12 | வினை | 88 | 21 | 16 | 30 | 60 |
| 13 | வி.அ | 5 | 4 | 6 | 4 | 6 |
| 14 | வி.மு | 274 | 77 | 82 | 129 | 156 |
| 15 | கு.வி.மு | 76 | 16 | 20 | 30 | 29 |
| 16 | எ.ம.வி.மு | 16 | 8 | 3 | 6 | 22 |
| 17 | வி.எ | 251 | 96 | 87 | 123 | 171 |
| 18 | எ.ம.வி.எ | 13 | 3 | 5 | 13 | 21 |
| 19 | கு.வி | 7 | 0 | 3 | 6 | 4 |
| 20 | வி.தொ | 12 | 8 | 7 | 16 | 7 |
| 21 | திரிபு | 11 | 2 | 6 | 10 | 1 |
| 22 | வியங் | 22 | 9 | 9 | 19 | 17 |
| 23 | நி.எ | 33 | 11 | 21 | 19 | 23 |
| 24 | சொ.உ | 7 | 2 | 0 | 0 | 2 |
| 25 | ஏவல் | 8 | 3 | 1 | 2 | 2 |
| 26 | கு.எ | 35 | 18 | 7 | 14 | 28 |
| 27 | அ.தொ | 5 | 2 | 2 | 2 | 6 |
| 28 | ஒ.கு | 3 | 3 | 2 | 6 | 7 |
| 29 | இ.சொ | 904 | 273 | 297 | 435 | 577 |
| 30 | உ.சொ | 6 | 2 | 6 | 11 | 9 |
| 31 | இ.இ.சொ | 1 | 0 | 0 | 1 | 1 |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 15 | கு.வி.மு | 49 | 40 | 89 | 14 | 2 | 4 | 3 | 0 | 0 | 0 | 0 |
| 16 | எ.ம.வி.மு | 2 | 2 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 0 |
| 17 | வி.எ | 126 | 149 | 219 | 17 | 16 | 9 | 10 | 0 | 0 | 4 | 2 |
| 18 | எ.ம.வி.எ | 0 | 5 | 7 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 | 0 | 0 |
| 19 | கு.வி | 1 | 1 | 6 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 20 | வி.தொ | 4 | 8 | 8 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 21 | திரிபு | 54 | 79 | 86 | 7 | 23 | 2 | 12 | 0 | 0 | 1 | 4 |
| 22 | வியங் | 8 | 48 | 85 | 0 | 6 | 0 | 4 | 0 | 0 | 0 | 0 |
| 23 | நி.எ | 15 | 16 | 44 | 2 | 2 | 1 | 3 | 0 | 0 | 0 | 0 |
| 24 | சொ.உ | 3 | 3 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 25 | ஏவல் | 1 | 1 | 4 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 26 | கு.எ | 64 | 62 | 111 | 10 | 10 | 1 | 10 | 0 | 0 | 3 | 0 |
| 27 | அ.தொ | 2 | 8 | 4 | 2 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 28 | ஒ.கு | 1 | 3 | 2 | 0 | 0 | 1 | 1 | 0 | 0 | 0 | 0 |
| 29 | இ.சொ | 337 | 598 | 759 | 87 | 56 | 42 | 50 | 3 | 2 | 5 | 4 |
| 30 | உ.சொ | 18 | 19 | 20 | 0 | 0 | 1 | 2 | 0 | 0 | 0 | 0 |
| 31 | இ.இ.சொ | 0 | 2 | 3 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |

பெயர்ச்சொற்களை ஒப்பீட்டு நோக்கும் போது தலைவன், தலைவி, தோழி ஆகிய மூன்று கூற்றுகளிலும் ஒத்த பான்மை காணப்படுகின்றது. தலைவன், தோழி இவர்கள் கூற்றை ஒப்பிடும்போது பதிலீட்டுப் பெயர்கள், வினாப்பெயர்கள், விளிப்பெயர்கள் தோழிக்கூற்றில் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. தோழிக்கூற்றில் சுட்டுப்பெயர்களின் போக்கு மிகுதியாக காணப்படுகின்றன. குறிப்பு வினைமுற்றுகள் தலைவன் கூற்றில் அதிகமாகவும் தலைவி கூற்றில் குறைவாகவும் கையாளப்பட்டுள்ளது. நிபந்தனையெச்சம் தோழிக்கூற்றில் மிகுதியாக ஆளப்படும் போக்கு காணப்படுகின்றது. தலைவன் தலைவி கூற்றில் நிபந்தனையெச்சம் ஒத்த போக்கில் ஆளப்பட்டுள்ளது. வினையெச்சம் தலைவன் தலைவி கூற்றுகளில் ஒத்த போக்கும், தோழி கூற்றில் மிகுதியான போக்கும் காணப்படுகின்றது.

திரிபு தலைவி தோழி கூற்றுகளில் மிகுதியான போக்கும் தலைவன் கூற்றில் குறைவான போக்கிலும் இடம்பெறுகின்றன. தலைவன் கூற்றில் வியங்கோள் மிக குறைவு. தோழிக்கூற்றில் வியங்கோளின் வருகை மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. தலைவி கூற்றில் வியங்கோள் மிகுந்து வந்துள்ளன. தலைவன், தலைவி, கூற்றுகளில் குறையெச்சங்களின் வருகை ஒத்த பான்மையினை வெளிப்படுத்துகின்றது. பெயரடைகள் தோழிக்கூற்றில் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. தலைவன் கூற்றைவிட தலைவிக்கூற்றில் பெயரடைகள் மிகுந்துள்ளன. தோழிக்கூற்றில் வினைச்சொற்களின் பயன்பாடு மிகுதியாக ஆளப்பட்டுள்ளது. வினையெச்சம் வினைமுற்றும் தோழிக்கூற்றில் ஒத்த போக்கில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

காதற்பரத்தைக் கூற்றில் 22 பாடல்களும் செவிலிக் கூற்றில் 17 பாடல்களும் ஐங்குறுநூற்றில் இடம்பெறுகின்றன. காதற் பரத்தையின் கூற்றில் பெயரெச்சத்தின் பயன்பாடும் வினையெச்சத்தின் பயன்பாடும் குறைவாக ஆளப்பட்டுள்ளது. திரிபுச் சொற்கள் செவிலி கூற்றிலும் பரத்தைக் கூற்றிலும் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. இடைச்சொற்களின் பயன்பாடு செவிலி கூற்றில் மிகுதியாக அமைந்துள்ளன. செவிலி காதற்பரத்தைக் கூற்றில் பதிலீட்டுப்பெயர்களின் ஆளுமை ஒத்த போக்கில் கையாளப்பட்டுள்ளன.

**ஐங்குறுநூறு : சொற்களின் வருகை – புலவர்கள்**

ஐங்குறுநூற்றில் ஐந்திணைகளைத் திணைக்கு நூறு பாடல்களாக ஓரம்போகியார், அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார், பேயனார் ஆகியோர் பாடல்களை எழுதியுள்ளனர். ஐங்குறுநூற்று புலவர்கள் கையாண்டுள்ள சொல்வகைகள் ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன.

**ஐங்குறுநூறு சொற்களின் வருகை - புலவர்கள்**

**அட்டவணை 5.5**

புலவர்கள் அடிப்படையில் சொற்களின் வருகை இங்கு அட்டவணைப்படுத்தப்பட்டு ஒப்பு நோக்கி ஆராயப்படுகின்றன.

| வ.எண் | சொல் வகைகள் | ஓரம் போகியார் | அம்மூவனார் | கபிலர் | ஓதலாந்தையார் | பேயனார் |
|---|---|---|---|---|---|---|
| 1 | பெயர் | 946 | 801 | 920 | 947 | 965 |
| 2 | சுட்டு | 4 | 9 | 5 | 3 | 2 |
| 3 | ப.பெ | 76 | 42 | 83 | 69 | 51 |
| 4 | வி.ப.பெ | 1 | 0 | 1 | 1 | 0 |
| 5 | வி.பெ | 23 | 16 | 14 | 5 | 4 |
| 6 | விளி | 62 | 62 | 82 | 55 | 61 |
| 7 | தொ.பெ | 30 | 16 | 39 | 32 | 39 |
| 8 | வி.அ.பெ | 11 | 29 | 23 | 39 | 14 |
| 9 | பெ.அ | 190 | 218 | 296 | 319 | 230 |
| 10 | பெ.எ | 122 | 120 | 170 | 169 | 121 |
| 11 | எ.ம.பெ.எ | 4 | 1 | 4 | 0 | 0 |
| 12 | வினை | 82 | 72 | 84 | 97 | 75 |
| 13 | வி.அ | 8 | 3 | 5 | 3 | 5 |
| 14 | வி.மு | 130 | 101 | 95 | 116 | 120 |
| 15 | கு.வி.மு | 22 | 24 | 65 | 44 | 46 |
| 16 | எ.ம.வி.மு | 1 | 1 | 1 | 2 | 0 |
| 17 | வி.எ | 95 | 104 | 105 | 117 | 131 |
| 18 | எ.ம.வி.எ | 2 | 5 | 6 | 0 | 0 |
| 19 | கு.வி | 3 | 1 | 0 | 0 | 4 |
| 20 | வி.தொ | 3 | 8 | 5 | 5 | 0 |
| 21 | திரிபு | 76 | 44 | 45 | 55 | 48 |
| 22 | வியங் | 68 | 25 | 26 | 26 | 6 |
| 23 | நி.எ | 16 | 9 | 25 | 19 | 14 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 24 | சொ.உ | 2 | 0 | 1 | 3 | 1 |
| 25 | ஏவல் | 0 | 3 | 1 | 0 | 2 |
| 26 | கு.எ | 40 | 31 | 41 | 65 | 94 |
| 27 | அ.தொ | 5 | 1 | 6 | 5 | 0 |
| 28 | ஒ.கு | 1 | 2 | 2 | 3 | 0 |
| 29 | இ.சொ | 398 | 339 | 386 | 423 | 397 |
| 30 | உ.சொ | 8 | 8 | 16 | 18 | 10 |
| 31 | இ.இ.சொ | 2 | 0 | 2 | 0 | 1 |

பெயர்ச்சொற்கள் அம்மூவனார் பாடல்களில் குறைவாகக் காணப்படுகின்றன. மற்ற நான்கு புலவர்களின் பாடல்களிலும் பெயர்ச்சொற்களின் போக்கு ஒத்த தன்மையினை வெளிப்படுத்துகின்றது. ஓதலாந்தையார் பாடல்களில் பெயரடை, பெயரெச்சங்களின் பயன்பாடு மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. கபிலர், ஓதலாந்தையார் பாடல்களில் வினைத்தொகை ஒத்த போக்கில் காணப்படுகின்றன. திரிபு அம்மூவன், கபிலர், பேயனார் பாடல்களில் சம அளவிலும், ஓரம்போகியார் பாடல்களில் மிகுந்தும் ஆளப்பட்டுள்ளன. வினைச்சொற்களை ஓரம்போகியாரும் கபிலரும் ஒத்த போக்கில் ஆண்டுள்ளனர். ஓதலாந்தையார் பாடல்களில் வினைச்சொற்களின் ஆளுமை அதிகமாகக் காணப்படுகிறது. அம்மூவன் கபிலர் பாடல்களில் வினையெச்சங்களின் போக்கு ஒத்த தன்மையினை வெளிப்படுத்துகின்றது. பேயனார் பாடல்களில் வினையெச்சங்களின் வருகை மிகுதி. வியங்கோள் அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார் பாடல்களில் சமபோக்கும் ஓரம்போகியார் பாடல்களில் வியங்கோளின் ஆளுமைமிகுந்தும் இடம்பெறுகின்றன.

ஓரம்போகியார் பேயனார் பாடல்களில் நிபந்தனையெச்சங்களின் போக்கு ஒத்த தன்மையில் அமைந்துள்ளன. பேயனார் பாடல்களில் குறையெச்சங்கள் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ளன. ஓரம்போகியார் கபிலர் பாடல்களில் குறையெச்சங்களின் போக்கு மிகுதியாக அமைந்திருக்கின்றன. அம்மூவனாரும், கபிலரும், ஒலிக்குறிப்புச் சொற்களை ஒத்த போக்கில் கையாண்டுள்ளனர். ஓதலாந்தையார் பாடல்களில் ஒலிக்குறிப்புச் சொற்கள் மிகுதியாக உள்ளன.

கபிலர் பாடல்களில் விளிப்பெயர்கள் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. பதிலீட்டுப்பெயர்கள் அம்மூவனார் பாடல்களில் குறைவாகக் கையாளப்பட்டுள்ளன. ஓரம்போகியார் பாடல்களில் குறிப்பு வினைமுற்றின் ஆளுமை குறைவாகக் காணப்படுகின்றன. இடைச்சொற்களின் வருகை ஓதலாந்தையார் பாடல்களில் மிகுதியாகவும், ஓரம்போகியார் பேயனார் பாடல்களில் ஒத்த போக்கிலும் அமைந்திருக்கின்றன. அம்மூவனார் பாடல்களில் இடைச்சொற்களின் ஆளுமை குறைவாகக் காணப்படுகின்றன.

ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் முதலியவற்றின் வருகையை எடுத்துக்காட்டுவதாக இவ்வியல் அமைகிறது.

**ஒருபொருட் பன்மொழிகள்**

ஐங்குறுநூற்றில் கோடு, பரி, பார்ப்பு, வளை போன்ற சொற்கள் ஒருபொருட்பன்மொழிகளாக ஆளப்பட்டுள்ளன. அவை இங்கு ஆராயப்பட்டுள்ளன.

**கோடு**

“கோடு” என்னும் சொல் கொம்பு, சங்கு, உச்சி, சிகரம் போன்ற பொருள்களில் ஆளப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| கொம்பு | - | (ஐங். 92-1, 94-1, 95-1, 98-1) |
| சங்கு | - | (ஐங். 191-1, 192-1, 194-1, 196-1) |
| உச்சி | - | (ஐங். 177-2, 318-5) |
| சிகரம் | - | (ஐங். 358-1) |

ஓரம்போகியார், அம்மூவன் மட்டுமே ஒருபொருட்பன்மொழிகளைப் பயன்படுத்திருக்கின்றனர். ஓரம்போகியார் 94, 98 ஆகிய பாடல்களில் தடங்கோட்டு என்றும், 92, 95 ஆகிய பாடல்களில் கருங்கோட்டு என்றும் அடைகளை பயன்படுத்தியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

அம்மூவனார் 191, 194 ஆகிய பாடல்களில் கடற்கோடு என்றும், 161ஆம் பாடலில் கருங்கோட்டு என்றும், 177ஆம் பாடலில் நெருங்கோட்டு என்றும் அடைகளைக் கொடுத்துச் சிறப்பித்துள்ளார்.

**பரி**

'பரி' என்னும் சொல் நடை, குதிரை, வருத்தம், செலவு என்ற பொருள்களில் இடம்பெறுகின்றன.

நடை - (ஐங்.13-1)

குதிரை - (ஐங். 134-2, 474-3)

வருத்தம் - (ஐங்.392-3)

செலவு - (ஐங். 422-1, 465-1, 489-5)

இச்சொற்கள் அடைகளையும், எச்சங்களையும், உருவகங்களையும் ஏற்காமல் தனித்து அமைந்திருக்கின்றன.

**பார்ப்பு**

"பார்ப்பு" என்னும் சொல் முதலை, ஆமை, குரங்கு என்று மூன்று பொருள்களில் இடம்பெற்றுள்ளன.

முதலை - (ஐங். 41-1)

ஆமை - (ஐங். 43-2, 44-1)

குரங்கு - (ஐங். 280-1)

இவற்றில் குரங்கு மட்டும் வன்குரங்கு என்று வன் என்ற அடையைப் பெற்று வருகின்றன.

**வளை**

"வளை" என்னும் சொல் சங்கு, கைவளை என்ற இரண்டு பொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கைவளை - (ஐங். 20-5, 27-3, 54-3, 133-3, 136-2, 140-3, 163-4, 165-4, 185-3, 192-4, 193-4, 194-1, 197-1, 198-1, 199-4, 200-1, 218-2, 257-2, 269-3, 285-4, 310-2, 422-4, 471-1)

சங்கு - (ஐங். 106-3, 195-1, 196-1)

எல்வளை, தெறிவளை, வெண்ணிறவளை, அழகிய வளை, செறிவுற்ற வளை என்று கைவளையை உருவகப்படுத்தியும், அடைக்கொடுத்தும் புலவர்கள் சொற்களை ஆண்டுள்ளனர்.

**திருப்புரைச் சொற்கள் - மருத திணை**

ஐங்குறுநூற்றில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள் திணை அடிப்படையில் இங்கு ஆராயப்படுகின்றன.

**முதல் சீரில் வரும் திருப்புரைச் சொற்கள்**

1. **செவ்**விரல் சிவந்த சேயரி மழைக் கண் (ஐங்.52-2)
   **செவ்**வாய்க் குறுமகள் இனைய, (ஐங். 52-3)
2. **யார்** மகள், இவள்? எனப் பற்றிய மகிழ்ந! (ஐங். 79-2)
   **யார்** மகள் ஆயினும் அறியாய்; (ஐங். 79-3)
3. **பொய்கை** ஊரன் மகள், இவள்; (ஐங். 97-3)
   **பொய்கை**ப் பூவினும் நறுந் தண்ணியளே (ஐங். 97-4)

ஒரே அடியில் இடம்பெறும் திருப்புரைச் சொற்களாக 13 இடங்களில் வருகின்றன.

1. **வாழி** ஆதன், **வாழி** அவினி! (ஐங். 1-1)
2. பால் **பல** ஊறுக! பகடு **பல** சிறக்க! (ஐங். 3-2)
3. **ஊரன்** ஆயினும் **ஊரன்** அல்லன்னே (ஐங். 15-4)
4. நம் **மறந்து** அமைகுவன் ஆயின், நாம் **மறந்து** (ஐங். 36-2)
5. வாழி (ஐங். 2-1), 6. வாழி (ஐங். 3-1), 7. வாழி (ஐங். 4-1)

8. வாழி (ஐங். 5-1), 9. வாழி (ஐங். 6-1), 10. வாழி (ஐங். 7-1)

11. வாழி (ஐங். 8-1), 12. வாழி (ஐங். 9-1) 13. வாழி (ஐங்.10-1)

இத்திருப்புரைச் சொற்களில் ஓரம்போகியார் வாழ்க! என்று வாழ்த்துதலுக்குரிய சொல்லை அதிகம் பயன்படுத்தியிருக்கிறார். அவினி என்ற அரசன் ஓரம்போகியார் காலத்தில் ஆண்டவன் என்றும், அவனை வாழ்த்திய புலவர் அவன் குடிகளையும் செல்வக்கடுங்கோ வாழியாதனையும் தோழி வாயிலாக வாழ்த்தினார் என்று இங்கு அறிய

முடிகின்றது. அரசனை வாழ்த்தியே இந்த முதற் பத்தில் வாழி என்று புலவர் சிறப்பித்து வாழ்த்தியிருப்பது இங்கு புலனாகிறது.

**அடுத்தடுத்த இரண்டாம் அடியில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள்**

அடுத்தடுத்த அடியில் இடம் பெறும் திருப்புரைச் சொற்களாக மருதத்தில் 11 இடத்தில் வருகின்றன.

**இரண்டாம் சீரில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள்**

1. ஆற்றுக **தில்ல,** யாமே; (ஐங். 12-3)
   தோற்க **தில்ல,** என் தட மென் தோளே (ஐங். 12-4)

2. அம்பணத்து **அன்ன** யாமை ஏறி, (ஐங். 43-1)
   செம்பின் **அன்ன** பார்ப்புப் பல துஞ்சும் (ஐங். 43-2)

3. வாய் (ஐங். 52-3,4) 4. நலம் (ஐங். 57-3,4) 5. மருந்து (ஐங். 59-3,4), 6. ஒல்லுமோ (ஐங். 71-4,5), 7. மகள் (ஐங். 79-2,3),8. துறை (ஐங். 88-1,2),9.மாண்குணம் (ஐங். 90-1,2), 10. கொல் (ஐங். 90-1,2), 11. ஊரன் (ஐங். 96-3,4)

**மூன்றாம் சீரில் வரும் திருப்புரைச் சொற்கள்**

❖ வேழ மூதூர் **ஊரன்** (ஐங். 15-3)
  ஊரன் ஆயினும் **ஊரன்** அல்லன்னே (ஐங். 15-4)

மாறுபட்ட சீர்களில் நான்கு திருப்புரைச் சொற்கள் அமைந்திருக்கின்றன.

**மூன்றாம் சீரும் ஐந்தாம் சீரும்**

❖ யாணர் ஊர! **நின்** மாண் இழை அரிவை? (ஐங். 42-2)
  காவிரி மலிர் நிறை அன்ன **நின்** (ஐங். 42-3)

**மூன்றாம் சீரும் இரண்டாம் சீரும்**

❖ யாணர் ஊரன் **வாழ்க** (ஐங். 1-5)
  பாணனும் **வாழ்க!** என வேட்டேமே (ஐங். 1-6)

**இரண்டாம் சீரும் ஐந்தாம் சீரும்**

❖ விண்டு **அன்ன** வெண்ணெற் போர்வின், (ஐங். 58-1)
கை வண் விராஅன், இருப்பை **அன்ன** (ஐங். 58-2)

**முதல் சீரும் மூன்றாம் சீரும்**

❖ **மகிழ்நன்** மாண்குணம் வண்டு கொண்டன கொல்? (ஐங். 90-1)
வண்டின் மாண்குணம் **மகிழ்நன்** கொண்டான் கொல்? (ஐங். 90-2)

**பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்கள்**

பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்கள் 2 இடங்களில் வருவன 13 இடங்களிலும், 3 இடங்களில் வருவன 2 இடங்களிலும் வருகின்றன.

1. **என** வேட்டோளே, யாயே; யாமே (ஐங். 1-3)
   பாணனும் வாழ்க! **என** வேட்டேமே (ஐங். 1-6)
2. இருஞ் சாய் **அன்ன** செருந்தியொடு வேழம் (ஐங். 18-1)
   பொருந்து மலர் **அன்ன** என் கண் அழ, (ஐங். 18-3)
3. ‘**தன்** பார்ப்புத் தின்னும் அன்பு இல் முதலையொடு (ஐங். 41-1)
   **தன்** சொல் உணர்ந்தோர் மேனி (ஐங். 18-3)
4. என (ஐங். 2-3,6), 5. என (ஐங். 3-3,6), 6. என (ஐங். 4-3,6), 7.என (ஐங். 5-3,6) 8. என (ஐங். 6-3,6), 9. என (ஐங் 7-3,6), 10.என (ஐங். 8-3,6), 11. என (ஐங். 9-3,6), 12. என (ஐங். 10-3,6), 13. நின் (ஐங் 77-1,4)

**மூன்று இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள்**

1. வேழ மூதூர் **ஊரன்** (ஐங். 15-3)
   **ஊரன்** ஆயினும் **ஊரன்** அல்லன்னே (ஐங். 15-4)
2. **யார்** மகள், இவள்? எனப் பற்றிய மகிழ்ந! (ஐங். 79-2)
   **யார்** மகள் ஆயினும் அறியாய்: (ஐங். 79-3)
   நீ **யார்** மகனை, எம் பற்றியோயே? (ஐங். 79-4)

**ஒரே அடியில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் - நெய்தல் திணை**

ஒரே அடியில் இடம் பெறும் திருப்புரைச் சொற்களில் முதல் சீரிலும் நான்காம் சீரிலும் அமையும் திருப்புரைச் சொற்களாக 11 இடங்களில் அமைந்திருக்கின்றன. முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் 1 இடத்திலும் முதல் சீரிலும் ஐந்தாம் சீரிலும் 1 இடத்திலும் அமைந்திருக்கின்றன.

**முதல் சீரும் நான்காம் சீரும்**

1. **அன்னை,** வாழி! வேண்டு **அன்னை!** உதுக்காண் (ஐங். 101-1)
2. **நெய்தல்** இருங் கழி **நெய்தல்** நீக்கி (ஐங். 184-1)
3. அன்னை (ஐங். 102-1), 4. அன்னை (ஐங். 103-1) 5. அன்னை (ஐங்.104-1), 6. அன்னை (ஐங். 105-1), 7. அன்னை (ஐங். 106-1), 8. அன்னை (ஐங். 107-1), 9. அன்னை (ஐங். 108-1), 10. அன்னை (ஐங். 109-1), 11. அன்னை (ஐங். 110-1)

**முதல் சீரும் மூன்றாம் சீரும்**

❖ **காலை** அன்ன **காலை** முந்துறுத்தே (ஐங். 116-4)

**முதல் சீரும் ஐந்தாம் சீரும்**

❖ **என்** செயப் பசக்கும் - தோழி - **என்** கண்ணே? (ஐங். 169-5)

**அடுத்தடுத்த அடிகளில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள்**

அடுத்தடுத்த அடிகளில் இடம்பெறும் திருப்புரைச் சொற்களாக அம்மூவனார் பாடல்களில் ஆறு இடங்களில் வருகின்றன.

**இரண்டாம் சீரில் வரும் திருப்புரைச் சொற்கள்**

1. இனிய **செய்த** நின்று, பின் (ஐங். 143-2)
   முனிவு **செய்த** இவள் தட மென் தோளே (ஐங். 143-3)
2. ஒண் **தழை** அயரும் துறைவன் (ஐங். 147-2)
   'தண் **தழை** விலை' என – நல்கினன் நாடே (ஐங். 147-3)
3. இனிது (ஐங். 148-2,3), 4. இமிழ் (ஐங். 171-1,2)

### மூன்றாம் சீரில் வரும் திருப்புரைச் சொற்கள்

❖ திரை இமிழ் **இன்** இசை அளைஇ, அயலது (ஐங். 171-1)
முழவு இமிர் **இன்** இசை மறுகு தொறு இசைக்கும் (ஐங். 171-2)

### நான்காம் சீரில் வரும் திருப்புரைச் சொற்கள்

❖ திரை இமிழ் இன் **இசை** இளைஇ, அயலது (ஐங். 171-1)
முழவு இமிழ் இன் **இசை** மறுகு தொறு இசைக்கும் (ஐங். 171-2)

### பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்கள்

பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்களை அம்மூவனார் நெய்தல் திணைப் பாடல்களில் ஒரு இடத்தில் கூட பயன்படுத்தாத நிலையினை இங்கு அறிய முடிகின்றது.

### ஒரே அடியில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள் - குறிஞ்சித் திணை

ஒரே அடியில் வரும் திருப்புரைச் சொற்களாகக் குறிஞ்சித் திணையில் ஒரு பாடலில் மட்டுமே இடம்பெறுகின்றன.

### இரண்டாம் சீரும் ஐந்தாம் சீரும்

❖ நோக்கவும் **படும்:** அவள் ஓப்பவும்: **படுமே** (ஐங். 290-4)

### அடுத்தடுத்த அடிகளில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள்

அடுத்தடுத்த அடிகளில் இரண்டாம் சீரில் 4 இடத்திலும், மூன்றாம் சீரில் இடத்திலும், ஐந்தாம் சீரில் 1 இடத்திலும் திருப்புரைச் சொற்கள் அமைந்திருக்கின்றன.

### இரண்டாம் சீரில் அமையும் திருப்புரைச் சொற்கள்

1. வயலை **அம்** சிலம்பின் தலையது (ஐங். 211-2)
   செயலை **அம்** பகைத்தழை வாடும் - அன்னாய் (ஐங். 211-3)
2. சாந்தம் **நாறும்** நறியோள் (ஐங். 240-3)
   கூந்தல் **நாறும்** நின் மார்பே – தெய்யோ! (ஐங். 240-4)
3. மன்ற (ஐங். 287-3,4) 4. போல் (ஐங். 299-4,5)

**மூன்றாம் சீரில் அமையும் திருப்புரைச் சொற்கள்**

1. இளம் பிறை **அன்ன** கோட்ட கேழல் (ஐங். 264-1)
2. களங் கனி **அன்ன** பெண்பால் புணரும் (ஐங். 264-2)

**ஐந்தாம் சீரில் அமையும் திருப்புரைச் சொற்கள்**

1. அம்ம வாழி, தோழி! நம் **மலை** (ஐங். 224-1)
2. மணி நிறம் கொண்ட மா **மலை** வெற்பில் (ஐங். 224-2)

**மாறுபட்ட சீர்களில் அமையும் திருப்புரைச் சொற்கள்**

**மூன்றாம் சீரும் இரண்டாம் சீரும்**

❖ நன் பொன் **அன்ன** புனிறு தீர் ஏனல் (ஐங். 263-1)
கட்டளை **அன்ன** கேழல் மாந்தும் (ஐங். 263-2)

**பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்கள்**

கபிலர் இரண்டு இடங்களில் வரும் திருப்புரைச் சொற்களை மட்டுமே பயன்படுத்தியிருக்கிறார். குறிஞ்சித்திணைப் பாடல்களில் ஆறு இடங்களில் மட்டுமே இத்திருப்புரைச் சொற்கள் இடம் பெறுகின்றன.

1. **நனி** நாண் உடையள்: நின்னும் அஞ்சும் (ஐங். 205-2)
தவ **நனி** வெய்யள்: நோகோ யானே: (ஐங். 205-5)
2. யான் **அவர்** மறத்தல் வேண்டுதி ஆயின் (ஐங். 209-2)
தோன்றல் ஆனாது,**அவர்** மணி நெடுங் குன்றே (ஐங். 209-5)
3. நம் (ஐங். 223-1,5), 4. நம் (ஐங். 228-1,4), 5. என் (ஐங். 293-2,5)
6. கொல்லோ (ஐங். 295-1,2)

**ஒரே அடியில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள்: பாலைத் திணை**

**முதல் சீரும் மூன்றாம் சீரும்**

❖ அறம் சாலியரோ! அறம் சாலியரோ! (ஐங். 312-1)

**இரண்டாம் சீரும் நான்காம் சீரும்**

❖ அறம் **சாலியரோ!** அறம் **சாலியரோ!** (ஐங். 312-1)

**மூன்றாம் சீரும் ஐந்தாம் சீரும்**

1. இது என் **பைங்களி** எடுத்த **பைங்களி** (ஐங். 375-2)
2. இது என் **பூவைக்கு** இனிய சொல் **பூவை** என்று (ஐங். 375-3)

**அடுத்தடுத்த அடிகளில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள்**

அடுத்தடுத்த அடிகளில் இரண்டாம் சீரில் அமையும் திருப்புரைச் சொற்களாக 12 இடங்களில் வருகின்றன.

1. அவ் **வரை** இறக்குவை ஆயின் (ஐங். 301-3)
   மை **வரை** நாட! – வருந்துவள் பெரிதே (ஐங். 301-4)
2. நீள் **இடை** அருஞ்சுரம்' என்ப – நம் (ஐங். 314-4)
   தோள் **இடை** முனிநர் சென்ற ஆறே (ஐங். 314-5)
3. தலை (ஐங். 321-1,2) 4. மன்ற (ஐங். 326-4,5), 5.கால் (ஐங். 349-2,3), 6. கதவ (ஐங். 361-4,5), 7. என (ஐங். 363-3,4), 8. மன்ற (ஐங். 380-4,5), 9. புரி (ஐங். 387-1,2), 10. இல் (ஐங். 394-1,2), 11. மனை (ஐங். 399-1,2), 12. அன்ன (ஐங். 400-1,2)

**மூன்றாம் சீரில் அமையும் திருப்புரைச் சொற்கள்**

❖ கண்ணினும் கதவ,**நின்** முலையே! (ஐங். 361-4)
  முலையினும் கதவ,**நின்** தட மென் தோளே! (ஐங். 361-5)

மூன்றாம் சீரில் அமையும் திருப்புரைச் சொல்லை ஓதலாந்தையார் ஒரே ஒரு இடத்தில் மட்டுமே பயன்படுத்தியுள்ளார்.

**மாறுபட்ட சீர்களில் அமையும் திருப்புரைச் சொற்கள்**

**நான்காம் சீரும் மூன்றாம் சீரும்**

❖ நன்று இல, கொண்க! **நின்** பொருளே (ஐங். 307-3)
  பாவை அன்ன **நின்** துணைப் பிரிந்து வருமே (ஐங். 307-4)

**பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்கள்**

பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்களை ஓதலாந்தையார் இரண்டு இடங்களில் மட்டுமே பயன்படுத்தியிருக்கிறார்.

1. வெய்ய **ஆயின** முன்னே: இனியே, (ஐங். 322-3)
   தண்ணிய **ஆயின** சுடத்திரை ஆறே! (ஐங். 322-5)
2. **இது என் பாவைக்கு இனிய** நன் **பாவை;** (ஐங். 375-1)
   **இது என் பைங்கிளி** எடுத்த **பைங்களி;** (ஐங். 375-2)
   **இது என் பூவைக்குஇனிய** சொல் **பூவை'** என்று (ஐங். 375-3)

**ஒரே அடியில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள் - முல்லைத் திணை**

ஒரே அடியில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள் முல்லைத் திணையில் மூன்று இடங்களில் மட்டுமே வந்துள்ளன.

**முதல் சீரும் நான்காம் சீரும்**

1. **ஏர்** பரந்தனவால் புனமே: **ஏர்** கலந்து (ஐங். 417-2)
2. **ஏறு** முரண் சிறப்ப,**ஏறு** எதிர் இரங்க, (ஐங். 493-1)

**இரண்டாம் சீரும் ஆறாம் சீரும்**

❖ பொன் **என** மலர்ந்த, கொன்றை: மணி **எனத்** (ஐங். 420-1)

**அடுத்தடுத்த அடிகளில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள்**

முதல் சீரில் மூன்று இடங்களிலும், இரண்டாம் சீரில் எட்டு இடங்களிலும், மூன்றாம் சீரில் ஒரு இடத்திலும், 2-4, 3-4 சீர்களில் ஒரு இடத்திலும் திருப்புரைச்சொற்கள் இடம்பெறுகின்றன.

**முதல் சீரில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள்**

1. **நின்னே** போல மா மருண்டு நோக்க, (ஐங். 492-3)
   **நின்னே** உள்ளி வந்தனென் (ஐங். 492-4)
2. **மா** புதல் சேர, வரகு இணர் சிறப்ப, (ஐங். 496-1)
   **மா** மலை புலம்ப, கார் கலித்து அலைப்ப (ஐங். 496-2)
3. **அன்பு** இல் மாலையும் உடைத்தோ (ஐங். 476-4)
   **அன்பு** இல் பாண! – அவர் சென்ற நாடே? (ஐங். 476-5)

**இரண்டாம் சீரில் இடம் பெறும் திருப்புரைச் சொற்கள்**

1. தாது **ஆர்** பிரசம் ஊதும் (ஐங். 406-3)
   போது **ஆர்** புறவின் நாடுகிழவோனே (ஐங். 406-4)

2. இதுவே, **மடந்தை!** நாம் மேவிய பொழுதே; (ஐங். 415-1)

   உதுவே, **மடந்தை!** நாம் உள்ளி புறவே; (ஐங். 415-2)

3. ஆர் (ஐங். 417-3,4), 4. நிற (ஐங். 431-2,3), 5. அணி (ஐங். 435-1,2), 6. நயந்து (ஐங். 454-3,4), 7. பிசிர் (ஐங். 461-1,2), 8. இல் (ஐங். 476-4,5)

**மூன்றாம் சீரில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள்**

❖ இதுவே, மடந்தை! **நாம்** மேவிய பொழுதே;(ஐங். 415-1)

உதுவே, மடந்தை! **நாம்** உள்ளிய புறவே; (ஐங் 415-2)

**மாறுபட்ட சீகளில் அமையும் திருப்புரைச் சொற்கள்**

**இரண்டாம் சீரும் நான்காம் சீரும்**

1. பாணர் **முல்லை** பாட, சுடர் இழை (ஐங். 408-1)

   வாள் நுதல் அரிவை **முல்லை** மலைய, (ஐங். 408-2)

**மூன்றாம் சீரும் நான்காம் சீரும்**

2. பொன் என **மலர்ந்த** கொன்றை: மணி எனத் (ஐங். 420-1)

   தேம் படு காயா **மலர்ந்த;** தோன்றியொடு (ஐங். 420-2)

**பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்கள்**

முல்லைத் திணையில் பேயனார் பாடல் முழுவதும் வரும் திருப்புரைச் சொற்களை மூன்று இடங்களில் மட்டுமே பயன்படுத்தியிருக்கிறார்.

**இரண்டு இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள்**

1. கார் எதிர்பொழுது **என** விடல் ஒல்லாயே; (ஐங். 427-2)

   வாரான் அவன்'**எனச்** செலவு அழுங்கினனே (ஐங். 427-4)

2. **நல்நுதல்** நாறும் முல்லை மலர, (ஐங். 492-2)

   **நல்நுதல்** அரிவை! காரினும் விரைந்தே (ஐங். 492-5)

**மூன்று இடங்களில் வரும் திருப்புரைச் சொற்கள்**

- **நின்னே** போலும் மஞ்ஞை ஆல, நின் (ஐங். 492-1)
  **நின்னே** போல மா மருண்டு நோக்க, (ஐங். 492-3)
  **நின்னே** உள்ளி வந்தனென் (ஐங். 492-4)

**அடைகள்**

ஐங்குறுநூற்றில் இடம்பெறும் ஒரு சீர் அடைகள், ஓரடிக்குள் இடம்பெறும் அடைகள் சில எடுத்துக்காட்டப்படுகின்றன. மற்றும் அடைக்கு முன் பின் அமையும் வாய்பாடுவகைகள் இங்கு ஆராயப்படுகின்றன.

**ஒரு சீருள் இடம் பெறும் அடைகள்**

**சிறு**மீன் (ஐங். 1-4)

**பல்**இதழ் (ஐங். 2-4)

**நெடு**நீர் (ஐங். 61-2)

**புன்**தலை (ஐங். 62-2)

**மா**நீர் (ஐங். 70-3)

**ஓரடிக்குள் இடம் பெறும் அடைகள்**

வண்ண **ஒண்** தழை நுடங்க, வால் இழை (ஐங். 73-1)

நீல **இருங்**கழி நீலம் கூம்பும் (ஐங். 116-2)

**மென்**புலக் கொண்கன் வாராதோனே (ஐங். 119-4)

**தெண்** திரை பாவை வௌவ, (ஐங். 125-2)

**திண்** தேர்க் கொண்கனை நயந்தோ் (ஐங். 137-2)

**ஓரடிக்குள் அதிகமான சீர்களில் இடம்பெறும் அடைகள்**

**பெருங்** கடற்கரையது **சிறு வெண்** காக்கை (ஐங். 163-1)

**தண்** கமழ் புது மலர் நாறும் **ஒண்** தொடி, (ஐங். 176-2)

**ஈர்ந்தண்** பெரு வடு, பாலையில் குறவர், (ஐங். 213-2)

**நல்** நுதல் பசப்பவும்,**நறுந்** தோள் ஞெகிழவும், (ஐங். 227-2)

**மென்** தோல் ஞெகிழவும்,**திரு**நுதல் பசப்பவும், (ஐங். 230-2)

### பெயரடைகளுக்கு முன்னும் பின்னும் அமையும் சொல்வகைகள்

ஐங்குறுநூற்றில் 411-450 வது பாடல்களை இயற்றியவர் முல்லைத் திணையில் பேயனார் ஆவார்.இப்பாடல்களில் பெயரடைகளுக்கு முன்னும் (இடது), பின்னும் (வலது) அமையும் சொல் வகைகளை ஆராயும் பொழுது நான்கு வகையான வாய்பாடுகள் இடம்பெறுகின்றன. அவ்வாய்பாடு வகைகளும் அவற்றின் நிகழ்வெண்ணிக்கையும் பின்வருமாறு குறிப்பிடப்படுகின்றன.

| வாய்பாடு | | நிகழ்வெண்ணிக்கை |
|---|---|---|
| 1. 0-பெ.அ-பெ | - | 35 |
| 2. பெ-பெ.அ-பெ | - | 15 |
| 3. வி-பெ.அ-பெ | - | 15 |
| 4. பெ.அ-பெ.அ-பெ | - | 5 |

ஐங்குறுநூற்றில் பெயர்ச்சொற்கள், இடைச்சொற்கள், பெயரடைகள் இவற்றின் வருகை மிகுதியாகக் காணப்படுகின்றன. திணைகளை நோக்கும்போது நெய்தல் திணையில் சொல்வகைகளின் பயன்பாடு குறைவாக இடம்பெறுகின்றன. இது தனிப்பட்ட புலவரின் மொழி ஆளுமைப் பண்பை எடுத்துக் கூறுகிறது. ஒருபொருட் பன்மொழிகள், திருப்புரைச்சொற்கள், அடைகள், போன்றவற்றில் அடைகளும் திருப்புரைச்சொற்களும் ஐங்குறுநூற்றில் மிகுதியாக இடம்பெறுகின்றன. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட தரவின் அளவு கருதி இதை மேலோட்ட ஆய்வாக கருத இயலும். கூற்று, துறை ஆகியவற்றில் சம எண்ணிக்கையில் பாடல்களை எடுத்துக்கொண்டு ஆய்வுக்கு உட்படுத்தும்போது மேலும் நுட்பமான முடிவுகளைப் பெற உதவும்.

ஐங்குறுநூற்றில் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட 31 சொல் வகைகளில் நிகழ்வெண்ணிக்கை வரைபடங்களாக மாற்றப்பட்டு விளக்கப்படுகின்றன.

## ஐங்குறுநூறு - நூல்

1 பெயர் · 2 சுட்டு · 3 ப.பெ · 4 வி.ப.பெ · 5 வி.பெ
6 விளி · 7 தொ.பெ · 8 வி.அ.பெ · 9 பெ.அ · 10 பெ.எ
11 எ.ம.பெ.எ · 12 வினை · 13 வி.அ · 14 வி.மு · 15 கு.வி.மு
16 எ.ம.வி.மு · 17 வி.எ · 18 எ.ம.வி.எ · 19 கு.வி · 20 வி.தொ
21 திரிபு · 22 வியங் · 23 நி.எ · 24 சொ.உ · 25 ஏவல்
26 கு.எ · 27 அ.தொ · 28 ஒ.கு · 29 இ.சொ · 30 உ.சொ
31 இ.இ.சொ



# ஐங்குறுநூறு - திணைகள்
## மருதம்







## நெய்தல்




குறிஞ்சி
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
36%
15%
12%
7%
4%
4%
3%
3%
3%
2%
2%
2%
1%
1%
1%
1%
1%
0%


பாலை
36%
16%
12%
6%
4%
4%
4%
3%
2%
2%
2%
2%
1%
1%
1%
1%
1%
0%


முல்லை
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
40%
16%
9%
5%
5%
5%
4%
3%
2%
2%
2%
2%
2%
1%
1%
0%


ஐங்குறுநூறு - திணைகள்
1000
800
600
400
200
0
பெயர்
சுட்டு
ப.பெ
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
மருதம்
நெய்தல்
குறிஞ்சி
பாலை
முல்லை

## ஐங்குறுநூறு - கூற்றுகள்
## தலைவன்




## தலைவி



## தோழி



பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ




37%
15%
10%
6%
4%
4%
3%
3%
3%
2%
2%
2%
2%
1%
1%
1%
1%
0%


## செவிலி



40%
19%
11%
7%
5%
4%
3%
3%
2%
2%
2%
1%
0%

## காதற்பரத்தை







## ஐங்குறுநூறு - கூற்றுகள்






## ஐங்குறுநூறு - துறைகள் உடன் போக்கு







## அறத்தொடு நிற்றல்




வரைவிடைப் பிரிவு
பெயர்
சுட்டு
ப.பெ
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ.
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ.
சொ.உ
ஏவல்
கு.எ.
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ


வினைமுற்றித் தலைவன் மீண்டும் வருதல்

## பரத்தையர் பிரிவு






## ஒருவழித் தணத்தல்

0% 0%
37%
17%
13%
6%
4%
4%
4%
3%
3%
2%
2%
1%
1%
1%
1%
1%
1%
0%


ஐங்குறுநூறு - கூற்றுகள்
2000
1800
1600
1400
1200
1000
800
600
400
200
0
பெயர்
சுட்டு
ப.பெ
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிபு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ
தலைவன் (91)
தலைவி (148)
தோழி (201)
செவிலி (17)
காதற் பரத்தை (22)
கண்டார் (7)
நற்றாய் (9)
வாயில் (1)
பாங்கன் (1)
அயலோர் (2)
பாணன் (1)


ஐங்குறுநூறு - புலவர்கள்
1000
900
800
700
600
500
400
300
200
100
0
பெயர்
சுட்டு
ப.பெ.
வி.ப.பெ
வி.பெ
விளி
தொ.பெ
வி.அ.பெ
பெ.அ
பெ.எ
எ.ம.பெ.எ
வினை
வி.அ
வி.மு
கு.வி.மு
எ.ம.வி.மு
வி.எ
எ.ம.வி.எ
கு.வி
வி.தொ
திரிவு
வியங்
நி.எ
சொ.உ
ஏவல்
கு.எ
அ.தொ
ஒ.கு
இ.சொ
உ.சொ
இ.இ.சொ

**விகிதப் பகிர்வு - விளக்கம்**

ஐங்குறுநூற்றில் பெயர்ச்சொல் 38%, இடைச்சொற்கள் 16%, பெயரடைகள் 10% இடம்பெறுகின்றன. பதிலீட்டுப்பெயரும் விளிப்பெயரும் 5% என்ற அடிப்படையில் சம விகிதங்களில் காணப்படுகின்றன. தொழிற்பெயரும் வினையாலணையும் பெயரும் மாறுபட்ட விகிதங்களில் அமைந்துள்ளன. வினையெச்சமும் வினைமுற்றும் 3% என்ற விகித அடிப்படையில் அமைந்துள்ளன. வினைமுற்று எதிர்மறை வினைமுற்று குறிப்பு வினைமுற்றுகளின் விகிதங்களின் முரண்பட்ட தன்மையில் அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது.

குறிஞ்சி பாலைத் திணையில் பெயர்ச்சொற்கள் 36% இடம்பெறுகின்றது. முல்லைத்திணையில் 40% பெயர்ச்சொற்கள் காணப்படுகின்றன. மருதம் 39%, நெய்தல் 38% என்ற அடிப்படையில் சற்றொத்த தன்மையில் அமைந்துள்ளன.

மருதம் நெய்தல் பாலை முல்லைத் திணைகளில் இடைச்சொற்கள் 16% இடம் பெறுகின்றன. குறிஞ்சித் திணையில் மட்டுமே இடைச்சொற்களின் விகிதம் சற்று குறைவான விகிதத்தில் 15% காணப்படுகின்றன. பெயரடைகள் மருதத்தில் 8%, நெய்தலில் 10%, முல்லையில் 9% என்று மாறுபட்ட தன்மையிலும் குறிஞ்சி பாலையில் 12% என்று அடிப்படையில் சம விகிதங்களில் காணப்படுகின்றன. ஐந்திணைகளிலும் பெயரெச்சங்கள் 5% முதல் 7% வரை இடம்பெறுவதை விளக்கப்படங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

ஐங்குறுநூறு கூற்றுகளில் பெயர்ச்சொற்கள் தலைவன் தலைவி கூற்றுகளில் 39% சம அளவிலும் செவிலி கூற்றில் 40% சற்று அதிகமாகவும் தோழி கூற்றில் 37% காதற்பரத்தைக் கூற்றில் 38% காணப்படுகின்றது. இடைச்சொற்கள் தலைவன் தோழி கூற்றுகளில் 15% சமமாகவும் தலைவி கூற்றில் 18% பெற்று சற்று அதிகமாக காணப்படுகின்றது. செவிலிக் கூற்றில் 19% மற்ற கூற்றுகளை விட இடைச்சொற்கள் அதிகம் இடம்பெறுகின்றன. பெயரடைகள் எல்லா கூற்றுகளிலும் 8% முதல் 11% வகை பயன்படுத்தப்பட்டுள்ளன. பிற சொல் வகைகள் மிக அருகியே 1%, 2% மற்றும் 3% ஆளப்பட்டுள்ளதை வரைபடங்கள் உணர்த்துகின்றன.

அறத்தொடு நிற்றல் பரத்தையர் பிரிவில் பெயர்ச்சொற்கள் 40% இடம் பெறுகின்றன. மற்ற துறைகளில் பெயர்ச்சொற்கள் சற்று மாறுபட்ட விகிதங்களில் இடம்பெறுகின்றன. இடைச்சொற்களின் விகிதாச்சாரம் முரண்பட்ட தன்மையில் அமைந்துள்ளன. உடன்போக்கு மற்றும் வரைவிடைப்பிரிவு துறைகளில் பெயரடைகளின் விகிதம் 12% என்ற அடிப்படையில் ஒத்துள்ளன. பிற சொல்வகைகள் வருகை ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மையில் இடம்பெற்றுள்ளன. புலவர்களின் அடிப்படையில் அம்மூவன் பாடல்கள் மட்டுமே சொற்கள் சற்று குறைவான விகிதங்களில் காணப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## ஆய்வு முடிவுரை

பதிற்றுப்பத்து, புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகிய சங்கப் பனுவல்களில்நூல், திணை, துறை, கூற்று, புலவர் ஆகிய காரணிகளின் அடிப்படையில், வரையறுத்துக்கொள்ளப்பட்ட 31 சொல் வகைகளின் வருகையும் பகிர்வும் தனித்தனி இயல்களில் ஆராயப்பட்டுள்ளன. சொற்களின் வருகை எண் தரவுகளாக மாற்றப்பட்டு வரைபடங்களாக வழங்கப்பட்டுள்ளன. இயல்வாரியாகப் பெறப்பட்ட முடிவுகள் இங்குத் தொகுத்துரைக்கப்படுகின்றன.

‘‘சொற்களின் வகைப்பாடும் காரணிகளும்’’ எனும் தலைப்பில் அமைந்த முதல் இயல், சொல் வகைப்பாட்டுக் கோட்பாடுகளை விளக்குவதோடு, மரபிலக்கணங்கள் வகுத்துள்ள சொல் வகைப்பாட்டினையும் சுட்டிச் செல்வதாக அமைகிறது. இவ்வாய்விற்கு வரையறுத்துக்கொள்ளப்பட்ட 31 சொல் வகைகள் குறித்த விளக்கங்களையும் மேலும் ஒருபொருட் பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள் அடைகள் போன்றவற்றின் விளக்கங்களையும் இவ்வியல் வழங்குகிறது.

பதிற்றுப்பத்து திணை, துறை, புலவர் போன்றவற்றின் அடிப்படையில் சொல் வகைகள் ஆளப்பட்டுள்ள பான்மையை இரண்டாம் இயல் எடுத்துக்காட்டுகிறது. வரைபடங்கள் வாயிலாகவும் இது விளக்கப்பட்டுள்ளது. நூல் அடிப்படையில் பெயரும் இடையும் மிகுந்து காணப்படுவதையும் பெயரடை, பெயரெச்சம், வினை சற்றொத்த நிலையில் அமைந்துள்ளதையும் வரைபடங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

பதிற்றுப்பத்தில் விளிப்பெயர்கள் சேரமன்னர்களின் வெற்றி, கொடை, வலிமை, போன்றவைகளை வெளிப்படுத்தும் நிலையில் கையாளப்பட்டுள்ளன. வியங்கோள் வினைமுற்றுக்கள் சேரமன்னர்களின் செல்வச் சிறப்பினையும், கொடைச்சிறப்பினையும் போற்றிக் கூறும் இடங்களில் ஆளப்பட்டுள்ளன.

பதிற்றுப்பத்து திணைகளை நோக்கும்பொழுது பாடாண்திணைப் பாடல்களில் மட்டுமே சொற்களின் வருகை மிகுதியாக இடம்பெறுகின்றன. பாடாண் திணையில் 69 பாடல்கள் அமைந்துள்ளன. எனவே இத்திணைச் சார்ந்த சொற்களின் வருகையும் மிகுந்துள்ளன. பாடாண் திணையில்

பெயரடையும் பெயரெச்சமும் ஒத்த தன்மையினை வெளிப்படுத்துகின்றன. சுட்டுப் பெயர்களும் பதிலீட்டுப்பெயர்களும் சற்றொத்த நிலையில் அமைந்துள்ளன. எதிர்மறை வினையெச்சமும் வினைத்தொகையும் பதிற்றுப்பத்தில் சற்றொத்த நிலையில் ஆளப்பட்டுள்ளன. இடைச்சொற்கள் வாகையில் மிகுதியாக இடம்பெறுகின்றன. ஏவலும் உரிச்சொற்களும், பாடாணில் ஒத்த பான்மையைக் கொண்டுள்ளன.

செந்துறைப் பாடாண்பாட்டுத்துறையில் அமைந்த பாடல்களில் விளியும், காட்சி வாழ்த்துத் துறையில் அமைந்த பாடல்களில் வியங்கோளும் மிகுந்துள்ளதைக் காட்டுகிறது. பெயர், வினைச் சொற்களை ஆளும் முறையில் ஒத்தபோக்கு காணப்படுவதையும் அறிய முடிகின்றது. வினையாலணையும் பெயர் செந்துறையில் மிகுதியாகவும் மற்ற துறைகளில் ஒன்றுக்கொன்று முரண்பட்ட போக்கையும் வெளிப்படுத்துகின்றன. காட்சி வாழ்த்தில் வினைத்தொகைகளின் வருகை மிகுந்துள்ளது. செந்துறைப் பாடாண்பாட்டு காட்சி வாழ்த்தில் திரிபு மிகுதியாகவும் வஞ்சித்துறைப் பாடாண்பாட்டில் திரிபு குறைவாகவும் ஆளப்பட்டுள்ளன.

காப்பியாற்றுக் காப்பியனார் பாடல்களில் தொழிற்பெயரும் பாலைக்கௌதமனார் பாடல்களில் வினையாலணையும் பெயரும் குறைவாக இடம் பெற்றுள்ளன. வினையடைகளை பாலைக்கௌதமனார் மிகுதியாகவும் பரணர் அரிசில்கிழார் பெருங்குன்றூர்க்கிழார் ஒத்த நிலையிலும் பயன்படுத்தியுள்ளனர். எதிர்மறைப் பெயரெச்சங்கள் எட்டு புலவர்களிடையேயும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மையில் அமைந்துள்ளன. வினையெச்சங்கள் பெருங்குன்றூர்க்கிழார் பாடல்களில் மிகுதியாகவும் மற்ற புலவர்களிடையே மாறுபட்ட போக்கிலும் அமைந்துள்ளன. இடைச் சொற்கள் குமட்டூர்க் கண்ணனார் பாலைக்கௌதமனார் பாடல்களில் சற்றொத்த நிலையிலும் பிற புலவர்களிடையே மாறுபட்ட போக்கிலும் காணப்படுகின்றன.

ஆய்வுக்கு வரையறுத்துக்கொள்ளப்பட்ட 31 சொல்வகைகளைத் தவிர்த்து சொற்களை மேலும் வகைப்படுத்த இயலும். ஒருபொருட்பன்மொழிகள், திருப்புரைச் சொற்கள், அடைகள் முதலியவற்றின் வருகையும் இங்கு எடுத்துக்கூறப்பட்டுள்ளன.

ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட ஒருபொருட்பன்மொழிகளைப் பதிற்றுப்பத்தில் பாடிய எட்டு புலவர்களுமே ஆண்டுள்ளனர்.

‘‘பிடி’’ என்னும் சொல் பெண் யானையையும், ‘‘அரசுவா’’ என்னும் சொல் பட்டத்து யானையையும் குறிப்பிட பயன்படுத்தப்பட்டுள்ளன.

அடுத்தடுத்த அடிகளில் இடம்பெறும் திருப்புரைச் சொற்களும் பாடல் முழுவதும் இடம்பெறும் திருப்புரைச் சொற்களும் மிகுதியாக இடம்பெறுகின்றன.

- மூன்றாம் சீரில் அடுத்தடுத்த அடிகளில் ஒரே பான்மையில் அமையும் திருப்புரைச் சொற்கள் இடம் பெறாத நிலையினை இங்கு அறிய முடிகின்றது.
- நான்காம் சீரில் ஒரே போக்கில் அமையும் திருப்புரைச் சொல் பதிற்றுப்பத்தில் ஒரு இடத்தில் மட்டுமே இடம்பெறுகின்றன.
- பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்களில் ‘‘நின்’’என்ற சொல்லைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் மிகுதியாக ஆண்டுள்ளார்.
- பரணர் பாடல்களில் சொற்கள் ஒன்றையொன்று தொடரும் முறையில் பெ-பெ.அ-பெ என்ற வாய்பாடு வகையே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

புறநானூறு திணை, துறை, புலவர் போன்றவற்றின் அடிப்படையில் சொல் வகைகள் ஆளப்பட்டுள்ள பான்மையை மூன்றாம் இயல் எடுத்துக்காட்டுகிறது. வரைபடங்கள் வாயிலாகவும் இது விளக்கப்பட்டுள்ளது. வியங்கோளும் நிபந்தனையெச்சமும் ஒத்த பான்மையில் அமைந்துள்ளன. பதிலீட்டுப்பெயர்கள் மிகுதியாகவும் வினாப்பெயர்கள் குறைவாகவும் இடம்பெற்றுள்ளன.

புறநானூற்றில் விளிப்பெயர்கள் வேந்தனைப் போற்றியும், அவனது தாயை விளித்து அரசனது பெருமையைக் கூறும் முறையிலும் ஆளப்பட்டுள்ளன. வியங்கோள் வினைமுற்றுக்கள் போர்குறித்த செய்திகளை வாழ்த்தியும், அரசனை வாழ்த்தியும் இடம்பெறுகின்றன.

புறநானூற்றினைத் திணைகளின் அடிப்படையில் உற்றுநோக்கும் பொழுது தும்பையும் காஞ்சியும் பெயரெச்சங்களை ஆளும் போக்கில் ஒத்துள்ளன. இது போன்றே கரந்தையும் வஞ்சியும் ஒத்துள்ளன. இடைச்சொற்களின் வருகை எல்லாத் துறைகளிலும் ஒத்த போக்கைக் கொண்டுள்ளன. வினைமுற்றுகள் கரந்தை நொச்சியில் சற்றொத்த நிலையில் அமைந்துள்ளன. தும்பை காஞ்சியில் பெயரெச்சங்கள் ஒன்றுபட்ட தன்மையினைச் சுட்டி நிற்கின்றன. தும்பை கரந்தையில் சுட்டுப்பெயர்கள் ஒத்த பான்மையை வெளிப்படுத்துகின்றன. கரந்தை வஞ்சியில் தொழிற்பெயர்கள் ஒத்துள்ளன. வினைமுற்றுகள் தும்பை காஞ்சியில் முரண்பட்ட தன்மையில் அமைந்துள்ளன. வஞ்சி பெருந்திணையில் திரிபு சமஅளவில் ஆளப்பட்டுள்ளன.

புறநானூற்றுத் துறைகளை ஒப்பிடும்போது பெயரடை, பெயரெச்சம் ஆகியன வாகையில் மிகுதியாக ஆளப்பட்டிருப்பதையும், மகட்பாற் காஞ்சித்துறையில் அமைந்த பாடல்களில் பெயரெடைகளின் வருகை மிகுந்துள்ளதையும் இவ்வியல் எடுத்துக்காட்டியுள்ளது. வினைச்சொற்கள் மகட்பாற்காஞ்சி பரிசில்கடாநிலையில் சற்றொத்த நிலையில் அமைந்துள்ளன. வினைச்சொற்கள் பெருங்காஞ்சி செவியறிவுறூஉ துறையில் ஒத்த போக்கைக் கொண்டுள்ளன. பெயரடைகள் பெருங்காஞ்சி துணைவஞ்சியில் ஒத்த பான்மையை வெளிப்படுத்துகின்றன. பெருங்காஞ்சி வாழ்த்தியலில் பெயரெச்சங்கள் முரண்பட்ட தன்மையில் அமைந்துள்ளன.

புலவர்கள் அடிப்படையில் சொற்களின் வருகையையும் பகிர்வையும் ஆராயும் பொழுது முடமோசியார் பாடல்களில் குறைவான எண்ணிக்கையில் சொல் வகைகள் அமைந்துள்ளதை அறிய முடிகின்றது. வினாப்பெயர்கள் ஔவையார் பாடல்களில் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. வினையாலணையும் பெயர்கள் ஔவையார் பாடல்களில் மிகுதியாகவும் கபிலர், கோவூர்க்கிழார் பாடல்களில் சமநிலையிலும் பெருஞ்சித்திரனார் பாடல்களில் மாறுபட்ட நிலையிலும் ஆளப்பட்டுள்ளன. எதிர்மறை வினைமுற்றுகள் பரணர் பாடல்களில் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. கபிலர் முடமோசியார் பாடல்களில் திரிபு சமநிலையில் காணப்படுகின்றன.

மேலும் திருப்புரைச் சொற்கள், அடைகள் முதலியவற்றின் வருகையும் இங்கு எடுத்துக்கூறப்பட்டுள்ளன.

திருப்புரைச்சொற்கள் மிகுதியான இடங்களில் கையாளப்பட்டுள்ளன. இரண்டாம் சீரில் ஒன்றி வரும் திருப்புரைச் சொற்களின் வருகை மிகுதி.

என்னைக்கு ஊர் இ∴து அண்மையானும் (புறம். 85-1)
என்னைக்கு நாடு இ∴து அண்மையானும் (புறம். 85-2)
ஆடு ஆடு என்ப, ஒரு சாரோரே; (புறம். 85-3)
ஆடு அன்று என்ப, ஒரு சாரோரே; (புறம்.85-4)

இப்பாடலில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள் வாய்மொழி இலக்கிய மரபின் பண்பாக இடம்பெறுகின்றது.

மேற்குறிப்பிட்ட பாடல் அடிகளில் திருப்புரைச் சொற்கள் மிகுதியாக இடம்பெறுகின்றன.

கபிலர் பாடல்களில் 0-பெ.அ-பெ என்ற வாய்பாட்டு வகையே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

குறுந்தொகையினை நூல், திணை, துறை,கூற்று,புலவர் போன்றவற்றின் அடிப்படையில் சொல் வகைகள் ஆளப்பட்டுள்ள பான்மையை நான்காம் இயல் எடுத்துக்காட்டுகிறது. வரைபடங்கள் வாயிலாகவும் இது விளக்கப்பட்டுள்ளது. நூல் அடிப்படையில் ஆய்வுக்குட்படுத்தும்போது பெயரெச்சங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. வினாப்பெயரும் வியங்கோளும் சம அளவில் இடம்பெறுகின்றன. வினைச் சொற்களும் தொழிற்பெயரும் சற்றொத்த நிலையில் அமைந்துள்ளன. வினைத்தொகை மிகுதியாக இடம்பெறுகின்றன. திரிபு குறைவாக ஆளப்பட்டுள்ளன. எதிர்மறை வினைமுற்றும், எதிர்மறை வினையெச்சமும் ஒத்த போக்கினை உடையதாக அமைந்துள்ளன.

குறுந்தொகையில் விளிப்பெயர்கள் திணை நிலப்பெயர்களைச் சார்ந்தும் தலைவன் தலைவியை விளித்துக்கூறும் வகையிலும் அமைந்துள்ளன. வியங்கோள் வினைமுற்றுக்கள் தலைவன், தலைவி மனம் விரும்பியவாறு அமையவேண்டும் என்றும் தனிமை கழிய வேண்டும் என்று கூறும் வகையில் வியங்கோள் இடம் பெறுகின்றன.

குறுந்தொகைப் பாடல்களில், பதிலீட்டுப்பெயர்கள் முல்லையிலும் வினையாலணையும் பெயர்கள் மருதத்திலும் குறைவாக ஆளப்பட்டிருப்பதை இவ்வியல் எடுத்துரைக்கிறது. தொழிற்பெயர்கள் குறிஞ்சித்திணையில் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. நெய்தல், பாலையில் குறிப்பு வினைமுற்றுகள் ஒத்த போக்கினை வெளிப்படுத்துகின்றன. முல்லைத் திணையில் பெயர்ச்சொற்களில் வருகை மிக குறைவாகக் காணப்படுகின்றன. பெயரெச்சங்களும், பெயரடைகளும் குறுந்தொகை திணைகளில் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மையினை வெளிப்படுத்துகின்றன. நெய்தல் திணைப் பாடல்கள் தனித்த போக்கினைக் கொண்டுள்ளன. வினைமுற்றுகள் ஐந்திணைகளிலும் முரண்பட்ட அமைப்பைக் கொண்டு காணப்படுகின்றன. வினைத்தொகை மருதத்திலும் பாலையிலும் ஒத்த தன்மையினைச் சுட்டி நிற்கின்றன. ஒலிக்குறிப்புச் சொற்கள் நெய்தல் திணையில் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. இடைச்சொற்கள் ஐந்திணைகளிலும் முரண்பட்ட தன்மையினை உணர்த்துகின்றன.

குறுந்தொகை துறைகளில் பெயரடைகள் பாங்கர் கூட்டம், தோழியர் கூட்டம், வாயில் மறுத்தல் ஆகிய துறைகளில் ஒத்த போக்கில் இடம்பெற்றுள்ளன. தோழியர் கூட்டம், தோழி மொழிந்து ஆற்றுவித்தல் துறையில் பெயரெச்சங்கள் ஒத்தபான்மையை வெளிப்படுத்துகின்றன. பாங்கர் கூட்டத்துறைப்பாடல்களில் இடம்பெறாத நிலையிலும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. தோழியர் கூட்டம் அறத்தொடு நிற்றல் துறையில் வினைமுற்றுகள் சம அளவில் ஆளப்பட்டுள்ளன.

தலைவி கூற்றில் பெயர்ச்சொற்கள் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. வியங்கோள், குறையெச்சம், நிபந்தனையெச்சம் ஆகியன தலைவன் கூற்றில் குறைவாகவும் தோழி கூற்றில் மிகுதியாகவும் ஆளப்பட்டுள்ளன. பெயரெச்சங்கள் தலைவன், தலைவி, தோழிக்கூற்றுகளில் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மையில் காணப்படுகின்றன. வினையாலணையும் பெயர் தலைவி கூற்றில் மிகுதி. பிற கூற்றுகளில் குறைவாக காணப்படுகின்றன. தோழி தலைவன் கூற்றை விட பதிலீட்டுப்பெயர்கள் தலைவி கூற்றில் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. குறிப்பு வினைமுற்றும் எதிர்மறை வினைமுற்றும் தலைவி தோழிக்கூற்றுகளில் சற்றொத்த நிலையில் காணப்படுகின்றன. எதிர்மறை வினையெச்சம் தலைவி கூற்றில் மிகுதியாக

ஆளப்பட்டுள்ளன. வினைமுற்றுகள் பாங்கன், பரத்தை, இற்பரத்தை, காதற்பரத்தை முதலிய நான்கு அகமாந்தர்களின் கூற்றுகளிலும் ஒத்த பான்மையை வெளிப்படுத்துகிறது. எதிர்மறைப் பெயரெச்சங்கள் தலைவி தோழிக்கூற்றுகளில் சமஅளவில் ஆளப்பட்டுள்ளன.

குறுந்தொகைப் புலவர்களை ஆய்வுக்குட்படுத்தும்போது பதிலீட்டுப்பெயர்கள், வினாப்பெயர்கள், இடைச்சொற்கள் ஆகியவற்றைக் கபிலர் மிகுதியாகப் பயன்படுத்தும் போக்கு காணப்படுகிறது. கபிலர் பாடல்களோடு ஒப்பிடுகையில் பெயரெச்சம், வினைமுற்று, வினையெச்சம், பெயரடை ஆகியவற்றின் வருகை பரணர் பாடல்களில் குறைவாக இடம்பெறுவதையும் இவ்வாய்வு எடுத்துரைக்கின்றது.

சுட்டுப்பெயர்கள் கபிலர் பரணர் பாடல்களில் ஒத்த போக்கில் அமைந்துள்ளன. வினையெச்சங்கள் பரணர் ஔவையார் பாடல்களில் சற்றொத்த நிலையில் காணப்படுகின்றன. அடுக்குத்தொடர் பரணர் பாடல்களில் மட்டுமே ஆளப்பட்டுள்ளன. அம்மூவனார் பாடல்களில் நிபந்தனையெச்சங்கள் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பெயரடைகள் ஔவையார் அம்மூவனார் பாடல்களில் ஒத்த போக்கில் அமைந்துள்ளன.

தனிச்சொல் வகைகள் மட்டுமின்றி சொற்களை மேலும் வகைப்படுத்த இயலும். திருப்புரைச் சொற்கள், அடைகள் முதலியவற்றின் வருகையும் இங்கு எடுத்துக்கூறப்பட்டுள்ளன.

அடுத்தடுத்த அடிகளில் இரண்டாம் சீரில் இடம்பெறும் திருப்புரைச் சொற்கள் குறுந்தொகையில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

- தலைப் புணைக் கொளினே, தலைப் புணைக் கொள்ளும்;

  (குறுந். 222-1)

- கடைப்புணைக் கொளினே, கடைப் புணைக் கொள்ளும்;

  (குறுந். 222-2)

குறுந்தொகை 222 ஆம் பாடலில் சிறைக்குடி ஆந்தையார் இரண்டு அடிகளில் மிகுதியான திருப்புரைச் சொற்களைக் கையாண்டுள்ளார்.

- அகவன் மகளே! அகவன் மகளே! (குறுந். 23-3)
  அகவன் மகளே! பாடுக பாட்டே (குறுந். 23-4)

குறுந்தொகை 23-ஆம் பாடலில் ஔவையார் திருப்புரைச்சொற்களை சற்று மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார்.

ஔவையார் பாடல்களில் பெ-பெ.அ-பெ. என்ற வாய்பாட்டு வகையே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

ஐங்குறுநூற்றினை நூல், திணை, துறை, கூற்று, புலவர், போன்றவற்றின் அடிப்படையில் சொல் வகைகள் ஆளப்பட்டுள்ள பான்மையை ஐந்தாம் இயல் எடுத்துக்காட்டுகிறது. வரைபடங்கள் வாயிலாகவும் இது விளக்கப்பட்டுள்ளது. ஐங்குறுநூற்றினை நூல் அடிப்படையில் சொற்களை உற்றுநோக்கும்போது விளி, பெயரெடை, வியங்கோள் ஆகியன மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. எதிர்மறைப் பெயரெச்சத்தின் வருகை ஐங்குறுநூற்றில் குறைவாக அமைவதை அறியமுடிகின்றது. வினைமுற்றும் வினையெச்சமும் ஒத்தபோக்கில் அமைந்துள்ளன.

ஐங்குறுநூறு திணையடிப்படையில் ஒத்த எண்ணிக்கையிலான பாடல்களைக் கொண்டிருப்பினும், பெயர்ச்சொற்கள் முல்லையிலும் பாலையிலும் குறைவாக ஆளப்பட்டுள்ளன. விளிப்பெயர்கள் குறிஞ்சித்திணைப் பாடல்களில் மிகுந்திருப்பதையும் இவ்வியல் எடுத்துக்காட்டுகிறது. குறிப்பு வினைமுற்றுகள் குறிஞ்சியில் மிகுந்தும் வியங்கோள் முல்லையில் குறைந்தும் இடம்பெறுவதை அறியமுடிகின்றது. குறிஞ்சியிலும் பாலையிலும் பெயரடைகள் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. வினை மற்றும் இடைச்சொற்களின் பயன்பாடு பாலைத்திணையில் அதிகமாக இடம்பெறுகின்றது. நெய்தல், குறிஞ்சியில் வினையெச்சங்களின் போக்கு ஒரே தன்மையிலும் முல்லைத்திணையில் அதிகமாகவும் காணப்படுகின்றன. தொழிற்பெயர்கள் நெய்தல் திணையில் அதிகமாகவும் மற்ற நான்கு திணைகளிலும் சற்றொப்ப நிலையில் அமைந்திருப்பதையும் காணமுடிகிறது.

ஐங்குறுநூற்றினைத் துறை அடிப்படையில் சொற்களின் வருகையை ஆராயும்பொழுது வினைமுற்று உடன்போக்குத் துறையில் மட்டும் மிகுதியாக ஆளப்பட்டுள்ளது. அறத்தொடு நிற்றல் துறையில் பதிலீட்டுப்பெயர்கள் வியங்கோள் விளிப்பெயர்கள் மிகுதியாகவும் பெயரடைகள் குறைந்தும் காணப்படுகின்றன. திரிபும் குறையெச்சமும்

உடன்போக்கில் ஒன்றுபட்ட தன்மையினை கொண்டுள்ளன. அறத்தொடுநிற்றல், வரைவிடைப்பிரிவுத் துறைகளில் பெயரெச்சங்களின் போக்கு சமநிலையில் அமைந்துள்ளன. வினையெச்சம் உடன்போக்கு மற்றும் வினைமுற்றி தலைவன் மீண்டும் வரும் துறையில் ஒத்த பான்மையினை வெளிப்படுத்துகின்றன.

ஐங்குறுநூற்றினைக் கூற்று அடிப்படையில் சொற்களின் வருகையை ஆய்வுக்குட்படுத்தும் போது நிபந்தனையெச்சங்களின் வருகை தோழிக்கூற்றில் மிகுதியாக அமைந்துள்ளன. தலைவன் தலைவி கூற்றுகளில் நிபந்தனையெச்சங்களின் போக்கு ஒத்த தன்மையில் அமைந்துள்ளன. தோழிக்கூற்றில் அமைந்த பாடல்களில் சுட்டுப் பெயர்களின் வருகை மிகுதியாகவும், பரத்தைக் கூற்றாக அமைந்த பாடல்களில் பெயரெச்சம், வினையெச்சம் குறைவாகவும், திரிபு சொற்கள் செவிலி மற்றும் பரத்தையர் கூற்றுப் பாடல்களில் மிகுதியாகவும் ஆளப்பட்டுள்ளன. பதிலீட்டுப் பெயர்கள் செவிலி மற்றும் காதற்பரத்தைக் கூற்றில் ஒத்தப்போக்கில் கையாளப்பட்டுள்ளன. வினையெச்சங்களின் பயன்பாடு தோழிக்கூற்றில் மிகுந்துள்ளது.

ஐங்குறுநூற்றில் புலவர்கள் அடிப்படையில் சொற்களின் வருகையை ஆராயும்பொழுது விளிப்பெயர்கள் கபிலர் பாடல்களில் மிகுதியாக ஆளப்பட்டுள்ளன. திரிபுச் சொற்கள் அம்மூவனார் கபிலர் பேயனார் பாடல்களில் சம அளவில் இடம்பெற்றுள்ளன. பெயர் மற்றும் பெயரடைகளை அம்மூவனாரும் வினாப்பெயர்களைப் பேயனாரும் ஓதலாந்தையாரும் குறைவாகப் பயன்படுத்தும் போக்கை அறிய முடிகின்றது. ஓரம்போகியார் பாடல்களில் குறிப்பு வினைமுற்றின் வருகையும் பேயனார் பாடல்களில் வியங்கோளின் வருகையும் குறைவாக இருப்பதையும் சொற்களின் வருகை உணர்த்துகிறது. ஓரம்போகியார் பேயனார் பாடல்களில் நிபந்தனையெச்சங்களின் போக்கு ஒத்த பான்மையினை வெளிப்படுத்துகிறது. இடைச்சொற்களின் வருகை ஓதலாந்தையார் பாடல்களில் மிகுதியாகவும், ஓரம்போகியார் பேயனார் பாடல்களில் ஒத்த போக்கிலும், அம்மூவனார் பாடல்களில் இடைச்சொற்களின் ஆளுமை குறைவாகவும் காணப்படுகின்றன.

திருப்புரைச் சொற்கள், அடைகள் முதலியவற்றின் வருகையும் இங்கு எடுத்துக்கூறப்பட்டுள்ளன.

அம்மூவனார் ஒருபொருட்பன்மொழிகளை அடைகளைக் கொடுத்து சிறப்பித்துள்ளார்.

மருத திணையில் இடம்பெறும் திருப்புரைச் சொற்களில் வாழ்க! என்ற சொல்லை ஓரம்போகியார் மீண்டும் மீண்டும் பயன்படுத்தியுள்ளார். வாழ்க என்று வாழ்த்துதலுக்குரிய பண்பாடு வெளிப்படும் வகையில் இச்சொல் ஆளப்பட்டிருக்கின்றன.

நெய்தல் திணையில் பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்களை அம்மூவனார் பயன்படுத்தாத நிலையினை அறியமுடிகின்றது.

குறிஞ்சித்திணைப் பாடல்களில் பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்களில் கபிலர் இரண்டு இடங்களில் மட்டுமே வரும் திருப்புரைச் சொற்களை மட்டுமே கையாண்டுள்ளார்.

பாலைத்திணையில் அடுத்தடுத்த அடிகளில் மூன்றாம் சீரில் அமையும் திருப்புரைச் சொல்லை ஓதலாந்தையார் ஒரே ஒரு இடத்தில் மட்டுமே பயன்படுத்தியுள்ளார்.

முல்லைத் திணைப் பாடல்களில் பேயனார் பாடல் முழுவதும் பரவி வரும் திருப்புரைச் சொற்களை மூன்று இடங்களில் மட்டுமே ஆண்டுள்ளார்.

பேயனார் பாடல்களில் 0-பெ.அ-பெ. என்ற வாய்பாட்டு வகையே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

ஆய்வுக்கு வரையறுத்துக் கொள்ளப்பட்ட தனிச்சொல் வகைகள் மட்டுமின்றி சொல்லுக்கு (பெயரடை) முன்னும் பின்னும் அமையும் சொல் வகைகளை வகைமாதிரியாக எடுத்துக்கொண்டு புலவர்கள் அடிப்படையில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டதில் பரணர் பாடல்களில் பெயர் – பெயரடை – பெயர் என்ற வாய்பாட்டு வகையும், கபிலர் பாடல்களில் 0 – பெயரடை – பெயர் என்ற வாய்பாட்டு வகையும், ஔவையார் பாடல்களில் பெயர் – பெயரடை – பெயர் என்ற வாய்பாட்டு வகையும், பேயனார் பாடல்களில் 0

– பெயரடை – பெயர் என்ற வாய்பாடும் மிகுதியாக ஆளப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

**மேலாய்வுக்கான களங்கள்**

எட்டுத்தொகையில் விடுபட்ட நற்றிணை, அகநானூறு, கலித்தொகை, பரிபாடல் முதலிய நூல்களுக்குச் சொற்களின் வருகை பற்றியும், துணை, துறை, கூற்று, புலவர் அடிப்படையிலும் இவ்வாய்வினைத் தொடர இயலும்.

சொற்களின் வருகையைக் கொண்டு புலவர்களின் தனிப்பட்ட மொழி ஆளுமையை ஆராய இவ்வகை ஆய்வு துணைசெய்யும்.

சொற்களின் வகைகளின் வருகையை ஆராய்வதைப்போல தொடர் வகைகளின் வருகையையும் ஆராயலாம்.

இக்காரணிகளைத் தனித்தனியே பகுத்துக்கொண்டு ஆய்வுக்கு உட்படுத்துவது மொழிநடைக் காரணிகளைத் துல்லியமாக பெற துணைபுரியும்.

## துணைநூற்பட்டியல்

**முதன்மை ஆதாரங்கள்**


எட்டுத்தொகை நூல்கள் மர்ரே பதிப்பு - பதிற்றுப்பத்து, புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு.
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி லிட்,
சென்னை,
1981 இரண்டாம் பதிப்பு


**துணைமை ஆதாரங்கள்**


அகத்தியலிங்கம் ச., - **சங்கத் தமிழ் I,** அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்,
அண்ணாமலை நகர், 1983

…………………….., - **சங்கத் தமிழ் II,** அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்,
அண்ணாமலை நகர், 1983

…………………….., - **சங்கத் தமிழ் III,** அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்,
அண்ணாமலை நகர், 1984

…………………….., - **சங்கத் தமிழ் IV,** அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்,
அண்ணாமலை நகர், 1986

…………………….., - **சங்கத் தமிழ் V,** அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்,
அண்ணாமலை நகர், 1987

…………………….., - **சொல்லியல் - பெயரியல் - 1**
அமைனத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர், 1979

……………………..,	- **சொல்லியம் - வினையியல்-2**
அனைத்திந்தியத் தமிழ் மொழியியற்
கழகம், அண்ணாமலை நகர், 1982

அய்யப்பன் கா., - **தமிழில் இலக்கணச் சிந்தனைகள்**
காவ்யா வெளியீடு,
சென்னை, 2012

அழகேசன் சு., - **இலக்கிய மொழி**
காவ்யா வெளியீடு,
சென்னை, 2017

அன்னி தாமசு, - **மொழியியல் புதிய கோட்பாடுகள்**
அமுத நிலையம்,
சென்னை, 2000

ஆலிஸ் அ., - **கட்டமைப்பு ஆய்வில் அகநானூறும் புறநானூறும்** அன்னம் பி. லிட்.,
சிவகங்கை, 2003

ஆபிரகாம் அருளப்பன் - **சில இலக்கண ஆய்வுக் கட்டுரைகள்**
அருள் அச்சகம்,
பாளையங்கோட்டை,
திருநெல்வேலி, 1971

இசரயேல் மோ., - **இலக்கண ஆய்வு, பெயர்ச்சொல்**
மதுரைப் பல்கலைக்கழகம்,
மதுரை, 1976

…………………….., - **இலக்கண ஆய்வு, வினைச்சொல்**
மதுரைப் பல்கலைக்கழகம்,
மதுரை, 1976

……………………..,	- **இடையும் உரியும்**
மதுரைப் பல்கலைக்கழகம்,
மதுரை 1976

இராமகிருஷ்ணன் ஆ., - **அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு**
சர்வோதய இலக்கியப் பண்ணை,
மதுரை, 1982

இராமமூர்த்தி எல்., - **தமிழ் இலக்கியங்கள் கட்டவிழ்ப்பும் கட்டமைப்பும்**
காவ்யா வெளியீடு,
சென்னை, 2005

எழிலரசி பாலசுப்பிரமணியன், - **சங்க இலக்கியச் சிந்தனைகள்,**
காவ்யா வெளியீடு,
சென்னை, 2014

கந்தசாமி. சோ.நா., - **குறுந்தொகை திறனாய்வு,**
அபிராமி பதிப்பகம்,
அண்ணாமலை நகர், 1978

காமாட்சி, அ., கல்பனா, செ., - **ஐங்குநுறூறு உருபனியற் பகுப்பாய்வு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி லிட்,
சென்னை, 2016

காவ்யா சண்முக சுந்தரம், தொ.ஆ. - **சங்க இலக்கியம் ஆய்வுகளும் அட்டவணைகளும்,**
காவ்யா வெளியீடு,
சென்னை, 2005

சண்முகம் செ.வை., - **மொழி ஆய்வு,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2005

……………………..,	- **கவிதைக் கட்டமைப்பு,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2003

……………………..,	- **சொல்லிலக்கணக் கோட்பாடு-1**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்

……………………..,	- **சொல்லிலக்கணக் கோட்பாடு-2**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 1986

……………………..,	- **சொல்லிலக்கணக் கோட்பாடு-3**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 1992

……………………..,	- **இலக்கண ஆய்வு**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2004

……………………..,	- **இலக்கண உருவாக்கம்**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 1994

சண்முகதாஸ், அ.,	- **தமிழ்மொழி இலக்கண இயல்புகள்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை, 2008

சரளா இராசகோபாலன்,	- **சங்க இலக்கியத்தில் தோழி**
ஒளி பதிப்பகம்,
சென்னை, 1986

சீனிச்சாமி துரை., - **திணைக் கோட்பாடு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2016

சுசீலா மு., - **பழந்தமிழ்த் தொடரியல்**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 2003

சுந்தரமூர்த்தி இ., - **நடையியலும் இலக்கியமும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2013

சுப்பிரமணியன் ச.வே., - **சங்க இலக்கியத்தில் குறிஞ்சிப் பாடல்கள்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2013

……………………..., - **தமிழர் மரபு செல்வம் - சங்க இலக்கியத்தில் அறத்தொடு நிற்றல்**
மெய்யப்பன் பதிப்பகம்,
சென்னை, 2004

……………………..., - **சங்க இலக்கியத்தில் முல்லைப் பாடல்கள்**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2013

ஞானி, - **செவ்வியல் நோக்கில் சங்க இலக்கியம்**
காவ்யா வெளியீடு,
சென்னை, 2010

தமிழண்ணல், - **சங்க மரபு**
சிந்தாமணி பதிப்பகம்,
சென்னை, 2009

தமிழரசி, இரா., - **சங்க இலக்கிய உத்திகள்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1981

நீதிவாணன், ஜெ., - **நடையியல்**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம், 1983

பரமசிவம், கு., - **இக்கால மொழியியல் அறிமுகம்**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை, 1991

பாலசுப்பிரமணியம், கு.மா., - **குறுந்தொகை – தமிழ்க்காதல்**
(கட்டுடைத்துக் கோத்தது)
பாரதி புத்தகாலயம்,
சென்னை, 2007

பாலசுப்பிரமணியம், சி., - **சங்க இலக்கியம் : சில பார்வைகள்**
பாரி புத்தகப் பண்ணை,
சென்னை, 2013

பாஸ்கரதாஸ்,ஈ.கோ., - **அகப்பாடல்களில் தலைவி**
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம்,
சென்னை, 1982

பொற்கோ, - **இலக்கணக் கலைக் களஞ்சியம்**
பூம்பொழில் வெளியீடு,
சென்னை, 1985

……………………..,  - **இலக்கண உலகில் புதிய பார்வை தொகுதி-3,**
பூம்பொழில் வெளியீடு,
சென்னை, 1996

……………………..,  - **தமிழிலக்கணக் கோட்பாடுகள்**
தமிழ் நூலகம்,
சென்னை, 1989

மணி, ஆ.,  - **ஆய்வு நோக்கில் செவ்வியல் தமிழ் நூல்கள்**
தமிழன்னை ஆய்வகம்,
புதுச்சேரி, 2011

மாணிக்கம் வ.சு.ப.,  - **தமிழ்க் காதல்**
பாரி நிலையம்,
சென்னை, 1975

மீனாட்சி சுந்தரனார், தெ.பொ.,  - **தமிழ் மொழி வரலாறு**
முல்லை நிலையம்,
தி.நகர், சென்னை, 2007

முத்துராஜன் ஆர்.,  - **செவ்விலக்கியக் கவிதை மரபும் ஆய்வு நோக்கும்**
காவ்யா வெளியீடு,
சென்னை, 2014

முருகரத்தினம், தி.,  - **மொழியாய்வுக் கட்டுரைகள்**
சர்வோதய இலக்கியப் பண்ணை,
மேலவெளி வீதி,
மதுரை, 1978

வரதராசன் மு., - **பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை**
பாரி நிலையம்,
சென்னை, 1992

……………….., - **மொழிநூல்**
கழக வெளியீடு,
சென்னை, 1973

வீரப்பன் பா., - **சங்க இலக்கிய நடை**
பூவழகி பதிப்பகம்,
சென்னை, 1989

வேல்மயில் த., - **இலக்கணத் தேடல்கள்**
காவ்யா வெளியீடு
சென்னை, 2009

ஜீன் லாறன்ஸ் செ., பதி.ஆ - **தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 2001

Rajan K., - **Corpus analysis and tagging for Tamil. In: Proceeding of symposium on Translation Support system STRANS-2002**

# சங்கப் பாடல்களில் மொழி ஆளுமை:
# சொல் வகைப்பாடும் வருகையும்

சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டத் தேர்விற்காகச்
சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்த்துறை வாயிலாக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ஏ.மேரி நேசபிரியம்**

**No.Ph.D/Prov.Regn./68/FT/12/2013/2227**

நெறியாளர்

**முனைவர் ப. டேவிட் பிரபாகர்**

எம்.ஏ., (தமிழ்), எம்.ஏ., (மொழியியல்), எம்.ஃ.பில்., பிஎச்.டி.

இணைப் பேராசிரியர் - தமிழ்






தமிழ்த்துறை

சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி)

சென்னை - 600 059


**ஏப்ரல் 2019**